of Sacred Books of the East 4°8

T Sanatsujātīyam
(Mahābhārata, Udyogaparvan)

with Tamil commentary

2) Aitareyopaniṣat
with Śaṅkarabhāṣya
and
Tamil commentary

Adh. 1 + 2 comp.
3 incomp.

𑌶𑍍𑌰𑍀𑌃

𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑍀𑌯𑌮𑍍 ।

ஸ்ரீ

# ஸநத்ஸுஜாதீயம்.

## உரைப்பாயிரம்.

### வேதாந்த முடிபு.

ஓம் நமோ பகவதே வாஸுதேவாய. ஆத்மாஅல்லாத உடம்புமுதலியவற்றை ஆத்மாவாகக்கொண்டவர் நலத்தை இழந்து, தீங்கை யடைந்து, வேண்டியதை விரும்பி, வேண்டாததை வெறுக்கிறார்கள். அவர், லௌகிக கர்மங்களையும் வைதிக கர்மங்களையும் அநுஷ்டிப்பவராயினும் யாவற்றினும் மேம்பட்ட புருஷார்த்தமாகியமோக்ஷம் என்னும் உறுதிப் பொருளான உறுதியான நன்மையைப் பெறாது, ஸம்ஸாரக்கடலினுள் மூழ்கி, உறவு பகை முதலான முதலைமுதலியவற்றால் புரட்டி உருட்டி அங்குமிங்கும் இழுத்தடிக்கப்பெற்று, தேவர் மனிதர் விலங்கு முதலிய பற்பல பிறவிகளில் மாறிமாறிப் பிறந்து இறந்து உழன்று மயங்கிக் கிடக்கிறார்கள். மற்று, அவருள் ஒருவன் ஒருவாறு புண்யத்தின் வலிமையினால் கர்மங்களை ஈச்வரார்ப்பணமாக அநுஷ்டிப்பவனாயின், அதனால் ஆசைமுதலிய அழுக்குநீங்கி, நிலையில்லாப் பொருள்களின் தீங்குகளை உணர்ந்து, இம்மை மறுமைப் போகங்களின்மேல் அவா அற்று, வேதாந்தங்களால் உணர்த்தப்படுகின்ற "ப்ரஹ்மமே ஆத்மா என்னும் உண்மையைக் காண விரும்பி, சமம் தமம் முதலிய ஸாதநங்களோடு கூடி, நல்லாசிரியனை நாடி வழிபட்டு, வேதாந்தப்பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து "நான் இதோ ப்ரஹ்மமா யிருக்கின்றேன்" என ஆத்மாவை ப்ரஹ்மமாக அறிந்து, அஜ்ஞானமும் அதனது செய்கையும் அகன்றவனாய், அறிவான ஆநந்தமாய், ப்ரஹ்மமாய் விளங்குகிறான்.

ஸநத்ஸுஜாதீயம்.

நூல்.

ஆகவே, இஃதனைத்தையும் மந்தர்களும் அறிந்து ஈடேறுமாறு பகவான் ஸநத்குமாரர் திருதராஷ்டிரனை வியாஜமாகக்கொண்டு இந்நூலை உலகிற்கு உபதேசித்தருளினர். ஸ்ரீமஹாபாரதத்திலே பீஷ்மபர்வத்தினுள் பகவத்கீதைபோல,இது அதனுள்ளே உத்யோகபர்வத்தினுள் ஆறு அத்தியாயங்களால் அமைந்திருக்கின்றது. ஸநத்குமாரரைப்பற்றி வேதாந்தபோதினிப் பதிப்பு பகவத்கீதையில் ச - ஆம் பக்கத்தில் உ - ஆம் குறிப்பைப் பார்க்க.

---

𑌅𑌥

𑌪𑍍𑌰𑌥𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

க.

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚 ॥

𑌅𑌨𑍁𑌕𑍍𑌤𑌂 𑌯𑌦𑌿 𑌤𑍇 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑍍 𑌵𑌾𑌚𑌾 𑌵𑌿𑌦𑍁𑌰 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌨𑍍𑌮𑍇 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌵𑍇 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌹𑌿 𑌭𑌾𑌷𑌸𑍇 ॥

---

முதல் அத்தியாயம்.

---

**திருதராஷ்டிரனும் விதுரனும் கூடிப்பேசுதல்.**

க.

துன்பம்முதலியவற்றால் மயங்கித் தவிக்கின்ற திருதராஷ்டிரனுக்கு மனஅழுக்கு நீங்கி புத்தி திருந்துவதற்கான வழிகளை, சென்ற சிலபல அத்தியாயங்களால் விதுரன் கூறிவருகையில் ஆங்காங்கு பரம்பொருளைப் பற்றிச் சிறிதுசிறிது குறித்துவந்தான். வரவே, திருதராஷ்டிரன் அவ்வளவோடமையாமல், உறுதியான நன்மையைத் தருகின்ற அந்த ஞான வார்த்தைகளை விரிவாகச் செவ்வனே கேட்டு,

“𑌤𑌰𑌤𑌿 𑌶𑍋𑌕𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌤𑍍”

“ஆத்மாவை அறிந்தவன் துன்பதைக் கடந்துநிற்கிறான்”

(சா - எ - க - ௩)

எனச் சுருதிகூறியவாறு “ஆத்மாவை அறிந்தாலன்றி துன்பம்முதலியவற்றைத் துடைத்தல் இயலாது” என்று எண்ணி இதனைக் கூறலாயினன் :

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான் :

விதுர ! உனது வாக்கால் சொல்லாதிருப்பதொன்று இருந்தால், கேட்க விரும்புகின்ற எனக்கு அதனைச் சொல்லவேண்டும் ; ஏனெனில், நீ ஆச்சரியங்களைப் பேசுகிறாய்.

௨, ௫.

𑌵𑌿𑌦𑍁𑌰 𑌉𑌵𑌾𑌚 ||

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌕𑍁𑌮𑌾𑌰𑍋 𑌵𑍈 𑌯𑌃 𑌪𑍁𑌰𑌾𑌣𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 |
𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑌃 𑌪𑍍𑌰𑍋𑌵𑌾𑌚 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ||
𑌸 𑌤𑍇 𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌂𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌹𑍃𑌦𑌯𑌸𑌂𑌶𑍍𑌰-
𑌯𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 𑌮𑌹𑌾𑌰𑌾𑌜 𑌸𑌰𑍍𑌵𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌤𑌾𑌂 𑌵𑌰𑌃 || [யாநு |

---

௨, ௫.

விதுரன் சொல்லலுற்றான் :

பரதவம்சத்திற் பிறந்த திருதராஷ்டிர ! பழமைச் சிறுவரான எந்த ஸநாதநரென்னும் ஸநத்ஸுஜாதர் "இறப்பென்பது இல்லை" எனக் கூறினரோ,

அவர் ரஹஸ்யமும் வெளிப்படையுமான உன்மனச்சம்சயங்கள் யாவற்றையும் விரித்துரைப்பர் ; மகாராஜனே ! அறிவுடையோ ரனைவரி லும் சிறந்தவர் (ஆதலின்).

பழமைச் சிறுவரான - *படைப்புத்தொடக்கத்திலிருந்தே சிறுவரான, ப்ரவிருத்திமார்க்கமான இல்லறத்தைப் பற்றாத என்றபடி; வே-கீ - ச - ஆம் பக்கத்தைப் பார்க்க.* ஸநத்ஸுஜாதர் - *ஹிரண்யகர்ப்பன் என்னும் ப்ரஹ்மாவினுடைய மனத்தினின்றும் ஞானம் வைராக்கியம் முதலியவற்றோடுகூடிப் பிறந்தவர். ஸநத் - எப்பொழுதும் (உள்ளது), அதாவது, ஹிரண்யகர்ப்பன் என்னும் ப்ரஹ்மா ; ஸு - நன்றாக, அதாவது, ஞானம் வைராக்கியம் முதலியவற்றோடு கூடி ; ஜாதர் - பிறந்தவர். ஸநாதந ரெனினும், ஸநத்ஸுஜாத ரெனினும், ஸநத்குமாரரெனினும் ஒக்கும். ரஹஸ்ய சம்சயங்கள் - ரஹஸ்யமான விஷயங்களைப்பற்றிய ஸம்சயங்கள். வெளிப்படைச் சம்சயங்கள் - வெளிப்படையான விஷயங்களைப்பற்றிய ஸந்தேகங்கள். திருதராஷ்டிர ! அவர் எல்லா ஞானிகளினும் மிகப் பெரியோ ராதலால், உன்னுடைய எத்தகைய ஸந்தேகங்களையும் நன்றாய்ப் போக்கித் தெளிவிப்பார் என்பது கருத்து.* (௨, ௫)

௪.

த்ருதராஷ்ட்ர உவாச ॥

கிம் த்வம் ந வேத தத் பூயோ யந்மே ப்ரூயாத் ஸநாதந: ।
த்வமேவ விதுர ப்ரூஹி ப்ரஜ்ஞாஶேஷோऽஸ்தி சேத்தவ ॥

௫.

விதுர உவாச ॥

ஶூத்ரயோநாவஹம் ஜாதோ நாதோऽந்யத்வக்துமுத்ஸஹே ।
குமாரஸ்ய து யா புத்தி: வேத தாம் ஶாஶ்வதீமஹம் ॥

---

௪.

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான் :

ஸநாதநர் எனக்கு எதனை உரைக்கவேண்டுமோ, அதனை நீ அதிகமாக அறியாயோ ? உனது ஞானம் மிகுதியா யிருந்தால், நீயே எனக்கு (அதனைச்) சொல்வாயாக.

விதுரன் நல்லோரொழுக்கத்தைக் கொள்ளுதல்.

௫.

விதுரன் சொல்லலுற்றான் :

நான் சூத்திரயோநியில் பிறந்தவன் ஆதலால், வேறு சொல்லத் துணிகிறேனில்லை. ஆனால், ஸநத்குமாரருடைய ஞானம் எதுவோ, அதனை நான் சாச்வதமாக அறிகின்றேன்.

*சாச்வதமான மோக்ஷத்தைத் தருவதனால், ஞானம் சாச்வதமாக உபசரிக்கப்பட்டது.*

*திருதராஷ்டிரனுக்கு முற்கூறிய அளவினும் அதிகமாக தத்துவத்தை உரைப்பதிலே விதுரனுக்கு மனம் எழவில்லை ; ஏனெனில், பிறர்க்குத் தத்துவத்தை உபதேசிப்பதிலே தனக்கு உரிமையில்லை என்று நினைத்து விட்டான் ; வேதமோதுதல் முதலியவற்றை சாஸ்திரம் சூத்திரர்களுக்கு மறுக்கின்றமையின்.*

*சங்கை:—அப்படியிருந்தாலும், விதுரன் மெய்ப்பொருளைக் கண்ட ஞானியாதலால், விரும்பிக்கேட்போருக்கு அதனை உரைக்க வல்லவனே தான் ; எனவே, திருதராஷ்டிரனுக்கு உண்மையை உரைப்பதிலே விதுரனுக்கு ஏன் உள்ளக்கிளர்ச்சி உண்டாயிற்றில்லை ?*

௬.

ப்ராஹ்மீம் ஹி யோநிமாபந்நஃ ஸுகுஹ்யமபி யோ வதேத் ।
ந தேந க்ருஹ்யோ தேவாநாம் தஸ்மாதேதத்ப்ரவீமி தே ॥

---

ஸமாதாநம் :—சுருதி ஸ்மிருதிகளின் கட்டளையை மீறுது ஆன்றோ ரொழுக்கத்தைப் பாதுகாக்கின்ற ஞானிகளின் மனம் விலக்கப்பட்ட விஷயங்களைத் தலைப்படாது. தலைப்படுமாயின்,—ஜனங்கள், "எல்லாம் அறிந்த விதுரனே தனக்குரிமையில்லாக் காரியத்தைச் செய்துவிட்டான் ; ஒன்றும் அறியாத நான் ஏன் இந்த ஆகாத காரியத்தைச் செய்தல் கூடாது ?" எனமயங்கி நல்வழியினின்றும் விலகித் தீவழியை மேற்கொள்வார்கள் ; அவர்களது வேதவியவஹாரங்களும் உலகவியவஹாரங்களும் உயர்ந்தோனைப் பின்பற்றுமாதலின் என்க. அவ்வாறே, பகவான் ஜனங்களது இயல்பையும், ஞானி நடக்கவேண்டிய முறையையும் அருளிச்செய்கிறார் :

"யத்யதாசரதி ஶ்ரேஷ்டஸ்தத்ததேவேதரோ ஜநஃ ।
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததநுவர்த்ததே" ॥

"மேலானவன் எதெதைச் செய்கின்றானோ, அதனதையே மற்றை ஜனங்கள் (செய்கிறார்கள்) ; அவன் எதனைப் பிரமாணமாகக் கொள்கின்றானோ, அதனை உலகம் அநுஸரிக்கின்றது"—(வே - கீ - ௩ - ௨௧) ;

"ந புத்திபேதம் ஜநயேதஜ்ஞாநாம் கர்மஸங்கிநாம் ।
ஜோஷயேத்ஸர்வகர்மாணி வித்வாந் யுக்தஃ ஸமாசரந் ॥"

"ஞானியானவன், கர்மத்திற் பற்றுள்ள அஜ்ஞானிகளுக்குப் புத்திக்கலக்கத்தை உண்டாக்கக் கூடாது [அவர்களது புத்தியைக் கலையும்படிசெய்தல் கூடாது] ; ஸகலகர்மங்களையும் (தானும்) நன்றாகச் செய்துகொண்டு, (அவர்களையும்) செய்விக்கவேண்டும்"—(வே - கீ - ௩ - ௨௬). (௫)

**பிறர்க்கு உரைப்பதிலே பிராமணர் உரியவர்.**

௬.

பிராமணப்பிறவியை அடைந்தவனாய் எவன் மிக்க ரஹஸ்யமானதையும் சொல்வானோ, (அவன்) அதனால் தேவர்களா(லும்) இகழப்பட மாட்டான், ஆதலால், உனக்கு இதனைச் சொல்லுகிறேன்,

பிராமணனாகப் பிறந்தவன் கேட்போர்க்குஉரிய அதிரஹஸ்யமான விஷயங்களை வெளிப்படையாக அறிவித்தாலும், அதனால் இந்திரன்முதலிய தேவர்களும் அவனை இழிந்துரைக்கமாட்டார்கள்; எனவே, மனிதர் அவனை இகழமாட்டாரென்பது சொல்லாமையே விளங்கும்.

பாரத! நீ கேட்டதைச் சொல்ல நான் துணிகிறேனில்லை; ஏனெனில்,

"அத்⁴யாபநமத்⁴யயநம் யஜநம் யாஜநம் ததா ।
தா³நம் ப்ரதிக்³ரஹஞ்சைவ ஷட்கர்மாண்யக்³ரஜந்மந:॥"
"ஓதுவித்தலும், ஓதலும், வேள்விசெய்தலும், வேள்வி செய்வித்தலும், அவ்வாறே ஈதலும், ஏற்றலுமாகிய ஆறும் பிராமணனுடைய தொழில்கள்" (மநு - ௧௦ - எ௫)

எனக் கூறப்படுகின்ற இவற்றுள் ஓதுவித்தலாகிய [பிறர்க்கு உரைத்தலாகிய] பிராமணதருமத்தை சூத்திரயோநியிற் பிறந்த நான் என்தருமமாகக் கொள்ளுதல் பழியையும், பாவத்தையும் விளைக்குமன்றோ. அவ்வண்ணமே, ஸ்மிருதி கூறுகின்றது:

"ஶ்ரேயாந் ஸ்வத⁴ர்மோ விகு³ண: பரத⁴ர்மாத் ஸ்வநுஷ்டி²தாத் । ஸ்வத⁴ர்மே நித⁴நம் ஶ்ரேய: பரத⁴ர்மோ ப⁴யாவஹ:॥"

"நன்கு அநுஷ்டிக்கப்பட்டதான பிறருடைய தருமத்தைக் காட்டிலும் குணமில்லாத [நன்கு அநுஷ்டிக்கப்படாத] தன்தருமம் மேலானது; தன்தருமத்திலே சாதல் நல்லது; பிறருடைய தருமம் அபாயத்தை விளைப்பது"—(வே - கீ - ௩ - ௩௫);

"ஶ்ரேயாந் ஸ்வத⁴ர்மோ விகு³ண: பரத⁴ர்மாத் ஸ்வநுஷ்டி²தாத் । ஸ்வபா⁴வநியதம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பி³ஷம்॥"

"தனக்குரிய கர்மம் நலமில்லாத (தாயினும், தான்) நன்றாய் அநுஷ்டித்த பிறரது கர்மத்தினும் மிகவும் நல்லது. ஸ்வபாவத்தா லமைந்த கர்மத்தைச் செய்கிறவன் பாவத்தை யடையமாட்டான்"—(வே - கீ - ௧௮ - ௪எ). (சு)

எ.

யுதராஷ்ட்ர உவாச ॥

ப்ரூஹி விதுர த்வம் ஜ வுராணம் தம் ஸநாதநம் ।
கயஜெதெந ஜெஹெந ஸூாதிஜெஹவ ஸஊாமஃ ॥

அ.

வெஶம்வாயந உவாச ॥

விஞயாஊாஸ விதுரஃ தஜூஷிம் ஸம்ஶிதவ்ரதம் ।
ஸ ச தஹிஞிதம் ஜூாகவா ஜஶ்யாஊாஸ ஹாரத ॥

கூ.

ஸ தெநம் வூதிஜநூாஹ வியிதூஷெ்டந கஊ்ணா । [கூ॥
ஸுவொவவிஷ்டம் விஶாஸ்ரம் கமெயநம் விதுரொஊஸ்ரவீ.

---

விதுரன் திருதராஷ்டிரனுக்காக ஸநத்துமாரரை வரவழைத்தல்.

எ.

திருதராஷ்டிரன் சொல்லலுற்ருன் :

விதுர ! நீ அந்தப்பழமை(ச் சிறுவரான)ஸநாதநரை எனக்காகப் பேச வேண்டும். இங்கேயே இந்த சரீரத்தோடு சந்தித்தல் எப்படி ஆகும் ?

*நான் ஸநத்குமாரரை இப்பொழுதே நேரில் தரிசித்து சம்பாஷித்து ஈடேறுமாறு, நீ அவரை இங்கே வந்தருளும்படி செய்யவேண்டும் என்பது பொருள்.* (எ)

அ.

வைசம்பாயநர் சொல்லலுற்ருர் :

*பிராணிகளிடத்து கருணைமிகுந்த ஞானியான*

விதுரன் கடுமையான விரதம்பூண்ட அந்த ரிஷியைத் தியானித்தான். ! அவரும் அந்தத் தியானத்தை அறிந்து (அங்கு தன்னைத்) தோற்றுவித்தார்.

*கடுமையான விரதமாவது - ஸநத்குமாரர் தாம் பிறந்தபொழுதே "நான் இல்லறத்தைத் தலைப்படேன்" என வரைந்து கொண்டது.* (அ)

விதுரன் ஸநத்துமாரரை உபசரித்துப் பிரார்த்தித்தல்.

கூ.

அவன் விதிகளிற் கூறிய உபசாரங்களால் இவர்க்கு வழிபாடு செய்தனன். ஸுகமாக உட்கார்ந்து ஆறுதலடைந்தபின்னர், விதுரன் இவரோடு பேசலாயினன் ;

௧௦.

𑌭𑌗𑌵𑌨𑍍 𑌸𑌂𑌶𑌯𑌃 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍍 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯 𑌮𑌾𑌨𑌸𑍇 ।
𑌯𑍋 𑌨 𑌶𑌕𑍍𑌯𑍋 𑌮𑌯𑌾 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 𑌤𑌮𑌸𑍍𑌮𑍈 𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

௧௧, ௧௨.

𑌯𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌯𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌦𑍁𑌃𑌖𑌾𑌤𑌿𑌗𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌲𑌾𑌭𑌾𑌲𑌾𑌭𑍌 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌯𑍌 𑌯𑌥𑍈𑌨𑌂 𑌨 𑌜𑌰𑌾𑌨𑍍𑌤𑌕𑍌 ॥
𑌵𑌿𑌷𑌹𑍇𑌰𑌨𑍍 𑌭𑌯𑌾𑌮𑌰𑍍𑌷𑍌 𑌕𑍍𑌷𑍁𑌤𑍍𑌪𑌿𑌪𑌾𑌸𑍇 𑌮𑌦𑍋𑌦𑍍𑌭𑌵𑍌 ।
𑌅𑌰𑌤𑌿𑌶𑍍𑌚𑍈𑌵 𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑍀 𑌚 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑍌 𑌕𑍍𑌷𑌯𑍋𑌦𑌯𑍌 ॥
𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑍀𑌯𑍇 𑌪𑍍𑌰𑌥𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

௧௦.

"பகவானே! திருதராஷ்டிரனுடைய மனத்தினுள் ஒரு ஸம்சயம் இருக்கின்றது. நான் அதனை விரித்துரைத்தல் ஆகாது. நீங்கள் (அதனை) இவனுக்கு விரித்துரைக்கவேண்டும்.

௧௧, ௧௨.

"மனிதர்கட்குத் தலைவனான இவன் எதனைக் கேட்டு எல்லாத் துன்பங்களையும் கடந்திட்டானவானோ, (அதனை அறிவுறுத்தவேண்டும்). லாபமும் நஷ்டமும், விரும்பப்படுவேதும் வெறுக்கப்படுவேதும், மூப்பும் இறப்பும், அச்சமும் பழிக்குப் பழிவாங்கலும், பசியும் தாகமும், மதமும் பெருமிதமும், கவலையும் சோம்பலும், காமமும் கோபமும், கேடும் ஆக்கமும் இவனைத் தாக்காவண்ணம் (இவன் எதனால் நித்யமான ஆநந்தத்தைப் பெறுவானோ, அதனை உரைத்தருளவேண்டும்)."

ஸ்ரீமத் ஸநத்ஸுஜாதீயத்தில் முதல் அத்தியாயம் முற்றும்.

மதம் - செல்வக்களிப்பு. பெருமிதம் - அதிகாரம் முதலியவற்றால் மேன்மேல் கிளர்க்கும் மேட்டிமை. (௧௧,௧௨)

## முதல் அத்தியாயம்.

### பதவுரை.

க.

| | |
|---|---|
| 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌃 | திருதராஷ்டிரன் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னான் : |
| 𑌵𑌿𑌦𑍁𑌰 | விதுரனே ! |
| 𑌤𑍇 | உன்னால் |
| 𑌵𑌾𑌚𑌾 | வாக்கினால் |
| 𑌅𑌨𑍁𑌕𑍍𑌤𑌂 | சொல்லப்படாதது |
| 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 | ஒன்று |
| 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌯𑌦𑌿 | இருந்தால், |
| 𑌤𑌤𑍍 | அதனை |
| 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌤𑍇 | கேட்க விரும்புகின்ற |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 | சொல் ; |
| 𑌹𑌿 | ஏனெனில், |
| 𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 | ஆச்சரியமானவற்றை |
| 𑌭𑌾𑌷𑌸𑍇 | பேசுகிறாய். |

உ, ௩.

| | |
|---|---|
| 𑌵𑌿𑌦𑍁𑌰𑌃 | விதுரன் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னான் : |
| 𑌭𑌾𑌰𑌤 | பரதவம்சத்திற் பிறந்த |
| 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 | திருதராஷ்டிரனே ! |
| 𑌯𑌃 | எந்த |

| | |
|---|---|
| 𑌪𑍁𑌰𑌾𑌣𑌃 | பழைய |
| 𑌕𑍁𑌮𑌾𑌰𑌃 𑌵𑍈 | சிறுவரான |
| 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 | ஸநாதநர் (எனப்படுகின்ற) |
| 𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑌃 | ஸநத்குமாரர் |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 | " இறப்பென்பது |
| 𑌨 𑌅𑌸𑍍𑌤𑌿 | இல்லை " |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌪𑍍𑌰𑍋𑌵𑌾𑌚 | கூறினரோ, |
| 𑌸𑌃 | அவர் |
| 𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌨𑍍 | ரஹஸ்யமாயும் |
| 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌨𑍍 𑌚 | வெளிப்படையாயுமுள்ள |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 | எல்லா |
| 𑌤𑍇 | உனது |
| 𑌹𑍃𑌦𑌯𑌸𑌂𑌶𑌯𑌾𑌨𑍍 | மனச்சம்சயங்களையும் |
| 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌿 | விரித்துச்சொல்வர் ; |
| 𑌮𑌹𑌾𑌰𑌾𑌜 | பெரிய அரசனே ! |
| 𑌸𑌰𑍍𑌵𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌤𑌾𑌂 | எல்லா ஞானிகளிலும் |
| 𑌵𑌰𑌃 | (அவர்) சிறந்தவர். |

---

௪.

| | |
|---|---|
| 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌃 | திருதராஷ்டிரன் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னான் : |
| 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 | ஸநாதநர் |
| 𑌯𑌤𑍍 | எதனை |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌬𑍍𑌰𑍂𑌯𑌾𑌤𑍍 | கூறவேண்டுமோ, |
| 𑌤𑌤𑍍 | அதனை |
| 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| 𑌭𑍂𑌯𑌃 | அதிகமாக |

| | |
|---|---|
| 𑌨 𑌵𑍇𑌤𑍍𑌥 𑌕𑌿𑌮𑍍 | அறியாயோ ? |
| 𑌵𑌿𑌦𑍁𑌰 | விதுரனே ! |
| 𑌤𑌵 | உனக்கு |
| 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌶𑍇𑌷𑌃 | அறிவுமிச்சம் |
| 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 | இருந்தால், |
| 𑌤𑍍𑌵𑌮𑍍 𑌏𑌵 | நீயே |
| 𑌬𑍍𑌰𑌵𑍀𑌹𑌿 | (அதனைச்) சொல். |

---

௫.

| | |
|---|---|
| 𑌵𑌿𑌦𑍁𑌰𑌃 | விதுரன் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னான் : |
| 𑌅𑌹𑌮𑍍 | நான் |
| 𑌶𑍂𑌦𑍍𑌰𑌯𑍋𑌨𑍌 | சூத்திரயோனியில் |
| 𑌜𑌾𑌤𑌃 | பிறந்தவன் ; |
| 𑌅𑌤𑌃 | இதனினும் |
| 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 | வேறு |
| 𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑍍 | சொல்ல |
| 𑌨 𑌉𑌤𑍍𑌸𑌹𑍇 | துணிகிறேனில்லை. |
| 𑌤𑍁 | ஆனால், |
| 𑌕𑍁𑌮𑌾𑌰𑌸𑍍𑌯 | ஸநத்குமாருடைய |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 | ஞானம் |
| 𑌯𑌾 | எதுவோ, |
| 𑌤𑌾𑌮𑍍 | அதனை |
| 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍀𑌮𑍍 | சாச்வதமாக |
| 𑌅𑌹𑌮𑍍 | நான் |
| 𑌵𑍇𑌦𑍍𑌮𑌿 | அறிகிறேன். |

---

௬.

| | |
|---|---|
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑍀𑌮𑍍 | பிராமணனுடைய |
| 𑌯𑍋𑌨𑌿𑌮𑍍 | யோநியை |

| | |
|---|---|
| 𑌆𑌪𑌨𑍍𑌨𑌃 | அடைந்த |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌸𑍁𑌗𑍁𑌹𑍍𑌯𑌮𑍍 𑌅𑌪𑌿 | மிக ரஹஸ்யமானதையும் |
| 𑌵𑌦𑍇𑌤𑍍 𑌹𑌿 | சொல்வானோ, |
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌤𑍇𑌨 | அதனால் |
| 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑍍 | தேவர்களாலும் |
| 𑌨 𑌗𑌰𑍍𑌹𑍍𑌯𑌃 | இகழத்தகுந்தவ னல்லன். |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆதலால், |
| 𑌏𑌤𑌤𑍍 | இதனை |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿 | சொல்லுகிறேன். |

எ.

| | |
|---|---|
| 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌃 | திருதராஷ்டிரன் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னான் : |
| 𑌵𑌿𑌦𑍁𑌰 | விதுரனே ! |
| 𑌤𑍍𑌵𑌮𑍍 | நீ |
| 𑌮𑍇 | எனக்காக |
| 𑌤𑌮𑍍 | அந்த |
| 𑌪𑍁𑌰𑌾𑌣𑌮𑍍 | பழைய |
| 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 | ஸநாதநரை |
| 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 | சொல் ; |
| 𑌇𑌹 𑌏𑌵 | இப்பொழுதே |
| 𑌅𑌨𑍇𑌨 | இந்த |
| 𑌦𑍇𑌹𑍇𑌨 | சரீரத்தோடு |
| 𑌸𑌂𑌵𑌾𑌦𑌃 | சந்தித்தல் |
| 𑌕𑌥𑌮𑍍 | எப்படி |
| 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | ஆகும் ? |

அ.

| | |
|---|---|
| 𑌵𑍈𑌶𑌂𑌪𑌾𑌯𑌨𑌃 | வைசம்பாயநர் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னார் : |
| 𑌵𑌿𑌦𑍁𑌰𑌃 | விதுரன் |
| 𑌸𑌂𑌶𑌿𑌤𑌵𑍍𑌰𑌤𑌂 | கடுமையான விரதமுடைய |
| 𑌤𑌂 | அந்த |
| 𑌋𑌷𑌿𑌂 | ரிஷியை [ஸநத்குமாரரை] |
| 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌾𑌮𑌾𑌸 | நினைத்தான். |
| 𑌭𑌾𑌰𑌤 | பாதவம்சத்திற் பிறந்தோனே ! |
| 𑌸𑌃 𑌚 | அவரும் |
| 𑌤𑌤𑍍 | அதனை |
| 𑌚𑌿𑌨𑍍𑌤𑌿𑌤𑌂 | (அதாவது, அவன்) நினைத்ததை |
| 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 | அறிந்து |
| 𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑍍𑌬𑌭𑍂𑌵 | (தன்னைத்) தோற்றுவித்தார். |

---

௯.

| | |
|---|---|
| 𑌸𑌃 𑌚 | அவன் |
| 𑌏𑌨𑌂 | இவரை |
| 𑌵𑌿𑌧𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑍇𑌨 | விதியில் காணப்பட்ட |
| 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 | கர்மத்தால் |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌗𑍍𑌰𑌾𑌹 | ஏற்றுக்கொண்டான். |
| 𑌅𑌥 | பின்பு |
| 𑌵𑌿𑌦𑍁𑌰𑌃 | விதுரன், |
| 𑌸𑍁𑌖𑍋𑌪𑌵𑌿𑌷𑍍𑌟𑌂 | சுகமாக உட்கார்ந்தவராய் |
| 𑌵𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌂 | ஆறுதலடைந்த |
| 𑌏𑌨𑌂 | இவரை |
| 𑌅𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 | சொன்னான். |

---

௰.

| | |
|---|---|
| 𑌭𑌗𑌵𑌨𑍍 | பகவானே ! |
| 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 | ஒரு |

| | |
|---|---|
| 𑌸𑌂𑌶𑌯𑌃 | ஸந்தேகம் |
| 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯 | திருதராஷ்டிரனுடைய |
| 𑌮𑌾𑌨𑌸𑍇 | மனத்தில் |
| (𑌵𑌰𑍍𑌤𑌤𑍇) | (இருக்கின்றது.) |
| 𑌯𑌃 | எது |
| 𑌯𑌥𑌾 | என்றால் |
| 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 | சொல்ல |
| 𑌨 𑌶𑌕𑍍𑌯𑌃 | தகாததோ, |
| (𑌤𑌤𑍍) | (அதனை) |
| 𑌯𑍂𑌯𑌂 | நீங்கள் |
| 𑌅𑌸𑍍𑌮𑍈 | இவனுக்கு |
| 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 | சொல்ல |
| 𑌅𑌰𑍍𑌹𑌥 | தகுந்தவரா யிருக்கிறீர்கள். |

---

௧௧, ௧௨.

| | |
|---|---|
| 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 | மனிதர்கட்குத் தலைவனான |
| 𑌅𑌯𑌂 | இவன் |
| 𑌯𑌂 | எதனை |
| 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 | கேட்டு |
| 𑌸𑌰𑍍𑌵𑌦𑍁𑌃𑌖𑌾𑌤𑌿𑌗𑌃 | எல்லாத் துன்பங்களையும் கடந்தவனாக |
| 𑌭𑌵𑍇𑌤𑍍 | ஆவானோ, |
| (𑌤𑌤𑍍) | (அதனை) |
| (𑌵𑌕𑍍𑌤𑍁𑌂) | (சொல்ல) |
| (𑌅𑌰𑍍𑌹𑌥) | (தகுந்தவரா யிருக்கிறீர்கள்.) |
| 𑌯𑌥𑌾 | எப்படி |
| 𑌲𑌾𑌭𑌾𑌲𑌾𑌭𑍌 | லாபமும் நஷ்டமும், |
| 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌯𑍌 | வேண்டப்படுவதும் வெறுக்கப்படுவதும், |

| | |
|---|---|
| ஜராம்ருத்யூ | மூப்பும் இறப்பும், |
| பயாமர்ஷௌ | அச்சமும் பழிவாங்கலும், |
| க்ஷுத்பிபாஸே | பசியும் தாகமும், |
| மதோத்பவௌ | மதமும் பெருமிதமும், |
| அரதி: ச ஏவ | கவலையும், |
| தந்த்ரீ ச | சோம்பலும், |
| காமக்ரோதௌ | காமமும் கோபமும், |
| க்ஷயோதயௌ | கேடும் ஆக்கமும் |
| ஏனம் | இவனை |
| ந விஷஹந்தே | பாதிக்கமாட்டாவோ, |
| (ததா) | (அப்படி) |
| (தத்) | (அதனை) |
| (வக்தும்) | (சொல்ல) |
| (அர்ஹஸி) | (தகுந்தவரா யிருக்கிறீர்கள்.) |

---

𑌅𑌥

𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑍀𑌯𑌮𑍍 ॥

---

க.

𑌵𑍈𑌶𑌂𑌪𑌾𑌯𑌨 𑌉𑌵𑌾𑌚 ॥

𑌤𑌤𑍋 𑌰𑌾𑌜𑌾 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑍋 𑌮𑌨𑍀𑌷𑍀
𑌸𑌂𑌪𑍂𑌜𑍍𑌯 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑍇𑌰𑌿𑌤𑌂 𑌤𑌤𑍍 ।
𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑌂 𑌰𑌹𑌿𑌤𑍇 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾
𑌪𑌪𑍍𑌰𑌚𑍍𑌛 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌬𑍁𑌭𑍂𑌷𑌨𑍍 ॥

உ.

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚 ॥

𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤 𑌯𑌦𑌿𑌦𑌂 𑌶𑍃𑌣𑍋𑌮𑌿
𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌹𑌿 𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌤𑌵𑍋𑌪𑌦𑍇𑌶𑌮𑍍 ।

---

## இரண்டாம் அத்தியாயம்.

---

### திருதராஷ்டிரன் ஸநத்குமாரரை வினவுதல்.

க.

வைசம்பாயனர் சொல்லலுற்ருர் :

பின்னர், அறிவுள்ள அரசன் திருதராஷ்டிரன் - விதுரன்கூறிய அவ்வார்த்தையை நன்குமதித்து, பேரறிவைப் பெறக் கருதி, தனிமையிலே ஸநத்ஸுஜாதரை உயர்ந்த ஞானத்தைப்பற்றி வினவலாயினன் :

தனிமையிலே - *பேதையரில்லாத இடத்திலென்க.* பேரறிவைப் பெறக் கருதி - *அவித்யையினல் அபகரிக்கப்பட்ட ஆத்மாவை வித்யையினல் அடைய விரும்பி என்றபடி.* (க)

உ.

திருதராஷ்டிரன் சொல்லலுற்ருன் :

ஸநத்ஸுஜாதரே ! இவ்விரண்டினுள் எது சரியானது ? க. இறப்பு இல்லை யென்பது உமது உபதேசமாம் எனக் கேள்விப்படுகின்றேன் ;

தெவாஸுரா ஹூவாந ஹூவயூ
அழுதுவெ தக்கதாந ஸதூ ॥

ரு.

ஸ்ரீஸநத்ஸுஜாத உவாச ॥

அழுதுஃ கழ்ணா கெவிக ழுதுநாஸ்தி சாவரே ।
மூணு வெ வ்ரவதொ ராஜநு யமெநூா விமங்கியாஃ ॥

---

இதுவா? உ. தேவர்களும் அஸுரர்களும் சாகாமைக்காக ப்ரஹ்மசர்யத்தை அநுஷ்டித்தார்கள் ; அதுவா?

*மரணமென்பதே இல்லை யென்று நீங்கள் உமது மாணுக்கர்கட்கு உபதேசித்ததாக விதுரன் சொல்லுகிறுன். மற்று, இந்திரன் முதலிய தேவர்களும், விரோசநன் முதலிய அஸுரர்களும் மரணம் உண்டு எனக் கொண்டு, அது வாராமைக்காக ப்ரஹ்மசர்யத்தை, குருகுலவாஸத்தைச் செய்தார்கள் என்று சாந்தோக்ய சுருதி (அ - எ - உ . . . . . .)கூறுகின்றது. மரணம் என்று ஒன்று இல்லை என்பது உமது கொள்கையாயின்,— அங்ஙனம் தேவாஸுரர்கள் அஃது உண்டு எனக் கொண்டு, அது வாராமைக்காக ப்ரஹ்மசர்யத்தை அநுஷ்டித்தல் எவ்வாறு கூடும்? ஆகவே, இறப்பு உண்டு, இல்லை என்னும் இவ்விருகொள்கைகளுள் எது நேரானதோ, அதனை எனக்கு அருளிச்செய்யவேண்டும்.* (உ)

ஸநத்ஸுஜாதர் விடை கூறுதல்.

ரு.

இவ்வாறு வினவப்பட்ட

ஸ்ரீஸநத்ஸுஜாதர் சொல்லலுற்ருர் :

சாகாமை கர்மத்தா லாகின்றது எனச் சிலர் கூறுகிருர்கள். மற்றையோர்கள், சாதலென்பது இல்லை யெனக் கூறுகிருர்கள். அரசனே! இதனை உள்ளபடி உரைக்கின்றேன், கேள். ஸந்தேகப்படாதே.

*அஜ்ஞானிகள் - மிருத்தியு என்பது வாஸ்தவமாகவே உண்டு என்றும், கர்மத்தை அநுஷ்டிப்பதனுல் அதனை விலக்குதல் கூடும் என்றும் நினைத்து, சாகாமை வாராமைக்காக வைதிககர்மங்களைச் செய்கிருர்கள். ( இவர்களைப்பற்றி வே - கீ - 47 ஆம் பக்கத்தைப் பார்க்க. ) ஞானிகளோ ப்ரஹ்மமாகிய ஆத்மாவைத்தவிர வேருென்றையும் காணுதவ*

௪.

உஹெ ஸதெ்ா க்ஷத்ரியாzzஜூவ்ருவரதெ
மொஹொ ம்ரு த்யுஃ ஸஂமதொ யஃ கவீநாம் ।
ஹ்ரமாஜஂ வைவ ம்ருத்யுமஹஂ ஬்ரவீமி
ஸஜாzஹ்ரமாஜமம்ருதத்வஂ ஬்ரவீமி ॥

---

ராய், மிருத்தியு என்பது இல்லை யென்கிறார்கள். அரசனே! மிருத்தியு உண்டு, இல்லை என்னும் இவ்விருகொள்கைகளையும் ஒன்றோடொன்று முரணுதபடி கூறுகின்றேன்; கேட்பாயாக. (ங)

**தன்னை யறியாத தடுமாற்றமே மிருத்தியு என்பது.**

௪.

எப்படி ?—

க்ஷத்திரிய! இரண்டும் சரியானவையாய், படைப்புக்காலம் முதல் தலைப்பட்டுவருகின்றன. ஞானிகள் மயக்கத்தை மிருத்தியுவாகக் கோள்கிறார்கள். நானோ, தமோற்றத்தையே மிருத்தியுவாகச் சோல்லுகிறேன்; எப்போழுதும் தமோற்றமின்மையை - சாகாமையாகக் கூறுகிறேன்.

வினு :—உண்டு என்பதும், இல்லை என்பதும் தம்முள் மாறுபட்டவை. ஆகவே, மிருத்தியு உண்டு என்பதும், மிருத்தியு இல்லை என்பதும் ஆகிய இவ்விரண்டும் எவ்வாறு நேராகும்?

விடை :—இது குற்றமன்று; மிருத்தியு என்று ஒருபொருள் உண்மையிலே இல்லையாதலின், உடம்பு முதலியவற்றோடு கூடுதல் - பிறப்பென்பதும், அவற்றை விட்டுப் பிரிதல் - இறப்பென்பதும் உலகவழக்கு. இது, இங்கே சொல்லுவான் குறிப்பன்று; ஏனெனில், பிறந்ததற்கு இறப்பும் இறந்ததற்குப் பிறப்பும் இன்றியமையாதவையாம் (வே - கீ - உ - உஎ).—ஆனல், அங்ஙனம் மிருத்தியு என்பது யாதெனின்—கூறுவோம்: ஆத்மாஅல்லாத உடம்பு முதலியவற்றை ஆத்மாவாகக்கொள்ளுதல் எதுவோ, அதுவே, அந்தப்பொய்யுணர்வே மிருத்தியு என்று அறிஞர்சிலர் கருதுகிறார்கள். எனது கருத்தோ அப்படியன்று.— மற்றென்னவெனின்,— கவனித்தலின்மையே, தடுமாற்றமே, ஆத்மஇயல்பான ப்ரஹ்மநிலையினின்றும் பிறழ்தலே, தன்நிலையினின்றும் தவறுதலே மிருத்தியு எனக் கூறுகிறேன். இந்தத் தவறுனது கீழ்க்கூறிய பொய்யுணர்விற்கும் காரணமாய், ஆத்மா இன்னதென்று அறியாத அஜ்ஞான

ரு.

ஸுராஸுரெ சுஸராசா: ஸராஹவது
சுஸுராஸூ ஹஹெதா: ஸராஸு ।
ந வெ ஃரு தூ்வ஁ாஷ, ஐவாத்தி ஜணெநு
நாவூஷு ஈெவசுவஷூஷூதெ ஹி ॥

மாம். இந்த அஜ்ஞானமே கீழ்க்கூறிய பிறப்பிறப்பு முதலிய எல்லா அநர்த்தங்களையும் விளைக்கின்ற மிருத்தியு என்க. இனி, தானாய், தன் நிலையாய், ஆநந்தஅறிவான ப்ரஹ்மநிலையாய்நிற்றலென்பது சாகாமை எனக் கூறுகின்றேன்; அவ்வாறே, சுருதி கூறுகின்றது:

“ஸரஂஜெ்யாதிரஸஂஸஂஷு ஜெ்ஷந ஈ-ஞுவெணா-
ஹிநிஷூஷு்தெ”

“பரம்பொருளான ஒளியாகித் தன்வடிவமாகின்றான்”—
(சா - அ - ௩ - ச).

உடம்பு முதலியவற்றோடு கூடிநிற்றல் - வாழ்வென்பதும், அவற்றை விட்டுப் பிரிதல் - இழவென்பதும் அவிவேகிகட்காம். விவேகிகட்கோ, தன்நிலைதவறுதல் இழவாம்; தன்நிலைநிற்றல் வாழ்வாம் என்பது தேர்ந்த கருத்து.

பகவான் ஸநத்ஸுஜாதர், சாகாமையைக் கர்மத்தால் பெறலாம் (உ-௩) என்னும் கொள்கையை மேலே (உ - ௬) மறுப்பர். அதனை அங்கே கண்டுகொள்க. (ச)

ரு.

வினா:—தமோமாற்றமே மிருத்தியு எனவும், அஃதின்மையே சாகாமை எனவும் எப்படித் தெரிகின்றன?

விடை:—கூறுவோம்:

தமோமாற்றத்தாலன்றோ அஸுரர்கள் தோற்றார்கள், ஸுரர்கள், தமோமாற்றமின்மையினால் ப்ரஹ்ம மானார்கள், நிச்சயமாகவே, மிருத்தியு புலி போலப் பிராணிகளைத் தின்பதில்லை; ஏனெனில், இதற்கு உருவமே காணப்படவில்லை,

விரோசநன் முதலான அஸுரர்கள் தமோமாற்றத்தினால், ஆத்மஇயல்பான ப்ரஹ்மநிலையினின்று நழுவுதலால், ஆத்மாஅல்லாத உடம்பு முதலியவற்றை ஆத்மாவாகக்கொள்ளுதலால் தோல்வி யடைந்தார்கள் (சா -

அ - கஉ - சு). அவ்வண்ணமே, இந்திரன் முதலான தேவர்கள் ஆத்ம இயல்பான ப்ரஹ்மநிலையாய்நிற்பதனுல் ப்ரஹ்ம மானுர்கள் (சா - அ - கஉ - சு).

அல்லது, இவ்வாறு பொருள் கொள்ளலாம்:— அஸுரர்கள் - சிற்றின்பத்தினுள் அழுந்தி, ஆத்மாவை அறியாதுகிடக்கும் பிராணிகள் (அஸுஷு ப்ராணேஷு இந்த்ரியேஷு ஏவ ரமந்தே இதி அஸுரா:=இந்திரியங்களிலேயே இன்புறுகிறவர்கள்). அவர்கள் தடுமாற்றத்தினுல், தன்நிலைதவறியுள்ளமையினுல் உடல் முதலியவற்றை ஆத்மாவாகக்கொண்டு தோற்ருர்கள், அதாவது விலங்குமுதலிய பிறவிகளைப் பெற்ருர்கள் (ஐ - ஆ - உ - க - க). ஸுரர்கள் - ஆத்மாவை அறிந்தவர்கள் (ஸ்வஸ்மிந் ஆத்மந்யேவ ரமந்தே இதி ஸுரா: = தன்ஆத்மாவினிடத்தேயே இன்புறுகிறவர்கள் :

"ஆத்மந்யேவ ரதிர்யேஷாம் ஸ்வஸ்மிந் ப்ரஹ்மணி வா-
வ்யயே। தே ஸுரா இதி விக்யாதா:..........॥"

"எவர்கட்கு இன்பம் தன்னிடத்திலேயே, அசைவிலா
ஆத்மாவான ப்ரஹ்மத்தினிடத்திலேயே உள்ளதோ,
அவர் "ஸுரர்" எனப் பிரஸித்தர்").

அவர்கள் தடுமாற்றமின்மையினுல் [ஆத்மாவான ப்ரஹ்மமாய்நிற்றலால்] ப்ரஹ்ம மானுர்கள், பொய்யுணர்வும் அதனது செய்கையும் நீங்கியவராய் ப்ரஹ்மமாகவே ஆனுர்கள்.

வினு :—இனி, ஸகலப்பிராணிகளையும் ஸம்ஹரிக்கின்ற வேருெர் மிருத்தியு ஒருவன் பிரஸித்தமா யிருக்கிருன். ஆகவே, தடுமாற்றமே மிருத்தியு என எவ்வாறு கூறலாகும்?

விடை :—இது குற்ற மில்லை; அவன், புலிபோலப் பிராணிகளைத் தின்பதில்லையாதலின். தின்பானுயின்,—புலியினது உருவம்போல, அவனது உருவம் காணப்படவேண்டும்; ஆனுல், காணப்படவில்லை. ஆதலால், தடுமாற்றமே நேரான மிருத்தியுயென்க. அல்லது, உண்மை நோக்கிலே, மிருத்தியு என்பதே இல்லை என்க. (ரு)

௬.

𑌯𑌮𑌂 𑌤𑍍𑌵𑍇𑌕𑍇 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌮𑌾𑌹𑍁𑌃
𑌆𑌤𑍍𑌮𑌾𑌵𑌾𑌸𑌮𑌮𑍃𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌮𑍍 ।
𑌪𑌿𑌤𑍃𑌲𑍋𑌕𑍇 𑌰𑌾𑌜𑍍𑌯𑌮𑌨𑍁𑌶𑌾𑌸𑍍𑌤𑌿 𑌦𑍇𑌵𑌃
𑌶𑌿𑌵𑌃 𑌶𑌿𑌵𑌾𑌨𑌾𑌮𑌶𑌿𑌵𑍋𑌽𑌶𑌿𑌵𑌾𑌨𑌾𑌮𑍍 ॥

---

அஜ்ஞானிகள் ஸூர்யன்மகனை மிருத்தியுவாகக் கொள்கிறார்கள்.

௬.

சங்கை:—ஆயின், உலகநோக்கிலே யமன் என்னும் மிருத்தியு காணப்படுகின்றான்; ஸத்யவான்மனைவி ஸாவித்ரி அவனைக் கண்டு பேசியதாகக் கூறப்படுகின்றமையின் (வே - ஸா). ஆகவே, அவளது கண்ணிற்குப் புலப்பட்ட உருவமுடைய அந்த மிருத்தியு யார்? எனில்,—

ஸமாதானம்:—கூறுவோம்:

ஆனால், சிலர் மிருத்தியுவை இதனினும் வேறாக யமனாகக் கூறுகிறார்கள்; அவனை - மனத்தினுள் வசிப்பவனாகவும், சாகாதவனாகவும், ப்ரஹ்மத்திலே அமர்ந்தவனாகவும் கூறுகிறார்கள். அக்கடவுள் நல்லோர்க்கு நல்லோனாய், தீயோர்க்குத் தீயோனாய், பிதிருலோகத்திலே ராஜ்யத்தை ஆளுகிறான்.

சிற்றின்பவிஷத்தால் மதி மயங்கி, ஆத்மாவிற்குப் புறம்பாக இரண்டாவதை, த்வைதத்தைக் காணும் அஜ்ஞானிகள் வேறோர் மிருத்தியுவைக் கூறுகிறார்கள்: கீழ் எடுத்துக்காட்டிய தமோமாற்றமென்னும் மிருத்தியுவினும் வேறாக ஒரு மிருத்தியுவைக் கொள்கிறார்கள்.—எப்படி?—மிருத்தியு என்பான் - ஸூர்யனது மகன். அவன் பாவஞ்செய்தோரைத் தண்டிப்பவன் என யாவர்க்கும் தெரிந்துள்ளமையால், எல்லாரது மனத்திலும் இருப்பவன்என்க. அன்றியும், அவன் சாகா இயல்பினன், ஆத்மாவான ப்ரஹ்மத்திலே நிலைத்தவன்; காடகோபநிஷத்தினுள், நசிகேதஸுக்கு ப்ரஹ்மவித்யையை உபதேசித்தருளிய ஆசார்யனாதலின். மற்றும், அவன் நல்வினைசெய்பவர்க்கு இன்பத்தைத் தருபவன், தீவினை செய்தவர்க்குத் துன்பத்தைக் கொடுப்பவன்: பட்சபாதமில்லாது நடுவு நிலைமையி லிருந்தே சகலப்பிராணிகட்கும் தருமமாய் நியாயம் தீர்த்துப் பிதிருலோகத்தை ஆண்டுவரும் தர்மராஜன் என்றபடி.

எ.

ஆஸ்ரேஷு நிஸ்ரதே நராணாம்
க்ரோத: ஸூசாம் சோஹஸ்தவஸ்து ம்ருத்யு: ।

இவ்வாறாகவே, பகுத்தறிவுள்ளவர்கள் இவனை மிருத்தியுவாகக் கொள்வதில்லை. எப்படியெனில்,—கேட்டிற்குக் காரணம் எதுவோ, அது மிருத்தியு என்பது. தமோற்றம் என்னும் பெயருடைய அஜ்ஞானமானது, பிறப்புமுதலியகேட்டிற்குப்போல, இறப்பு முதலிய கேட்டிற்கும் அடிக்காரணமாயுளது. அவ்வாறே, சுருதி ஸ்மிருதிகள் கூறுகின்றன:

"ந சேதிஹாவேதீந்மஹதீ விநஷ்டி:"
"(ஆத்மாவை) இங்கு அறியாவிடில், பெரிய கேடு (வந்திட்டது)"—(கே - ௩௩);
"ம்ருத்யுர்வை தம:"
"(விவேகத்தை மூடுகின்ற) இருளான அறியாமையே மிருத்தியுவாம்"—(பிரு - ௧ - ௩ - ௨௮);
"அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ: ।"
"அறிவு அஜ்ஞானத்தினால் மூடுண்டுகிடக்கின்றது; அதனால் பிராணிகள் மயங்குகின்றன"—(வே - கீ - ரு - ௧ரு).

ஆதலால், அறிவுடையோராவார் - தமோற்றமாகிய அஜ்ஞானத்தையே மிருத்தியுவாக, தீங்குகள் யாவற்றிற்கும் நேரான அடிக்காரணமாகக் கொள்கிறார்கள். விவேகமில்லாதவரோ ஸூர்யனது மகனை மிருத்தியுவாக, தீங்குகட்குக் காரணமாகக் கொள்கிறார்கள். மற்று, அவன் அப்படியல்லன்; அவர்களைச் சிக்ஷித்து நல்வழிப்படுத்துகின்ற தர்மராஜனும் என்பது கருத்து. (௬)

**அஜ்ஞான காரியங்கள்.**

எ.

இவ்வாறாக, "தமோற்றமே மிருத்தியு" என மிருத்தியு இன்னதென்று நிச்சயிக்கப்பட்டது. இனி, அதனது விகாரங்களைக் கூறுகின்றார்:

**மனிதர்கட்கு இந்தத் தமோற்றமென்னும் மிருத்தியுவானது-காமத்தினின்று கோபமாகவும், மயக்கவடிவாகவும் வெளிக்கிளம்புகின்றது. ஒரு**

𑌅𑌹𑌂𑌕𑍃𑌤𑍇𑌨𑍈𑌵 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌾𑌨𑍁𑌯𑌾𑌤𑍋
𑌨 𑌯𑌾𑌤𑍍𑌯𑌸𑍌 𑌯𑍋𑌗𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 ॥

அ.

𑌤𑍇 𑌮𑍋𑌹𑌿𑌤𑌾𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑌶𑍇 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌾𑌃
𑌇𑌤𑌃 𑌪𑍍𑌰𑍇𑌤𑌾𑌸𑍍𑌤𑌤𑍍𑌰 𑌪𑍁𑌨𑌃 𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 ।
𑌤𑌤𑌸𑍍𑌤𑌂 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌨𑍁𑌪𑌰𑌿𑌪𑍍𑌲𑌵𑌨𑍍𑌤𑍇
𑌅𑌤𑍋 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 𑌮𑌰𑌣𑌾𑌖𑍍𑌯𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 ॥

---

வன் செருக்கினுல் வழியல்லா வழிகளில் அலைகிறவனுய், ஆத்மஸமாதியை அடைவதில்லை.

*மிருத்தியுவானது, அதாவது அஜ்ஞானமானது காமமாக மாறுகின்றது. பின்னர், அக்காமம், தான் விரும்பியதைப் பெறுது தடைப்பட்டவழி, கோபமாக மாறிடுகின்றது (வே - கீ - ௨ - ௬௨). பின்பு, அக்கோபத்தால் மயக்கமுண்டாக (வே - கீ - ௨ - ௬௩), அதனுல் ஒருவன்-செய்வன ஒழிவன தெரியாதவனுய், சுருதி ஸ்மிருதிகட்கு மாறுன வழியை, நான் என்னும் அகங்காரத்தருக்கினுல் நேரான வழியாக நினைத்து, அதுனுள் கெட்டலைந்து திரிகிறுன்; ஆகவே, ஆத்மநிலையைக் கூடுதல் இல்லை யென்பதாம்.* (எ)

அ.

*மேலும்,*

அவர்கள் (அதனுல்) மயக்கப்பட்டு அதனது வசத்திலே இருப்பவராய் இதனினின்று இறந்துபோய், அதனினின்று மீட்டும் கீழே வீழ்கிறுர்கள். பின்னர் இந்திரியங்கள் (கர்மத்திற்கு)ஏற்ப அவனைச் சுற்றிவளைகின்றன. ஆதலால், அவன் சாதலினின்று சாதலைப் பெறுகிறுன்.

*அகங்காரமாகவும், காமமாகவும், மற்றுமிவைபோன்றதாகவும் விகாரப்பட்டிருக்கும் அஜ்ஞானத்தினுல் உடம்பு முதலியவற்றை ஆத்மாவாகக் கொண்டவர் அந்த அஜ்ஞானமாகிய மிருத்தியுவிற்கு வசப்பட்டுநின்று, இவ்வுலகிலே இறந்து, பரலோகத்தை யடைந்து, தமது கர்மம் கழியுமளவும் அங்கே வாழ்ந்து, மறித்தும் உடம்பை யெடுத்தற்காக இவ்வுலகினுள் வந்து வீழ்கிறுர்கள். அவ்வாறே, சுருதியும் ஸ்மிருதியும் கூறுகின்றன :*

“𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌯𑌾𑌵𑌤𑍍𑌸𑌂𑌪𑌾𑌤𑌮𑍁𑌷𑌿𑌤𑍍𑌵𑌾𑌥𑍈𑌤𑌮𑍇𑌵𑌾𑌧𑍍𑌵𑌾𑌨𑌂
𑌪𑍁𑌨𑌰𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 ”

௯.

கஜெ௯ாஉயெ கஉ௯ஷுராந௯ாமா:
தத்ராநயாஷி ந தாஷி உரதாழ் ।
ஸஉயெ௯யொமாநவமஉாதஉஞாஃ
ஷவத௯ெதெ ஹொமயொமெந ஜெஷீ ॥

---

“ ( கர்மம் ) கழிந்திடும்வரை அதில் வசித்துப், பின்பு, இதே வழியை மீளத் திரும்புகிறார்கள் ”— ( சா - ரு - ௧௦ - ரு)

“ க்ஷீணெ புண்யெ மத்யலொகம் விஶந்தி ”

“ புண்யம் கழிந்தவளவிலே, மநுஷ்ய லோகத்தைப் புகுகிறார்கள் ”—(வே - கீ - ௯ - ௨௧)

பின்னர் உடம்பை எடுக்குமளவிலே, அவரவர்செய்த கர்மங்கட்குத் தக்கவாறு இந்திரியங்கள் அவஙரச் சூழவளைந்துகொள்கின்றன, அவரைத் தமக்கு வசப்படுத்திக்கொள்கின்றன; கொள்ளவே அவர் அவற்றினது வேலைக்காரர்கள்போன்று அவற்றைப் பின்பற்றி இறப்பைப் பெறுகிறார்கள் ; பின்பு வேறோர் பிறப்பை அடைகிறார்கள் ; மறுபடியும் மரிக்கிறார்கள், மீண்டும் பிறக்கிறார்கள். இவ்வாறாக, பிறப்பு இறப்பென்னும் சக்கிரத்தில் ஏறிக்கொண்டு சுற்றிச்சுற்றிச் சுழல்கிறார்கள்.

ஆத்மஸ்வரூபத்தைக் கண்டுணராமையினால் அவர்கள் ஸம்ஸாரக்கடலினுள் மூழ்கி ஆசை கவலை முதலிய முதலை முதலியவற்றால் அங்குமிங்கும் கவ்வப்பட்டுத் தத்தளித்து தவிக்கிறார்கள் என்பது கருத்து. ()

௯.

இனி, ஸம்ஸாரக்கட்டிற்குக் கர்மமும் காரணமாம்:—எப்படி ?—

கர்மப்பயனிலே ஆசையுள்ளவர்கள் கர்மம் தோன்றுமளவிலே அதனைத் தொடர்கிறார்கள் ; மிருத்தியுவைக் கடத்தலில்லை. உடம்போடுநிற்பவன் உண்மைப்பொருளைக் கூடதேலை உணராமையினால் எப்புறத்தும் போகப்பற்றோடு செல்லுகிறான்.

கர்மத்தினுடைய பயனின்மேல் அவாவுடையவர்கள் “ இக்கர்மத்தினால் இப்பயன் கிடைக்கும் ” என அக்கர்மம் வந்தவழி அதனைத் தலைப்பட்டு அதனது பயனை யடைகிறார்கள். எனவே,மிருத்தியுவைக் கடந்

௧௦.

𑌤𑌦𑍍𑌵𑍈 𑌮𑌹𑌾𑌮𑍋𑌹𑌨𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂
𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌗𑌤𑌿𑌰𑍍𑌹𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 ।
𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌯𑍋𑌗𑌾𑌭𑌿𑌹𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾
𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌨𑍁𑌪𑌾𑌸𑍍𑌤𑍇 விஷயாநு 𑌸𑌮𑌨𑍍𑌤𑌾𑌤𑍍 ॥

---

*துநிற்றல் ஆதலில்லை; பிறப்பிறப்பாகிய ஸம்ஸாரத்தினுள் மீண்டும்மீண்டும் சுற்றிவருகிறார்கள் என்பது பொருள்.*

*வினா :—அவர்கள் கர்மம் வந்தவழி கர்மப்பயனிலே ஆசையுள்ளவராய் எதனால் ஸம்ஸாரத்தினுள் இவ்வாறு கிடக்கிறார்கள் ?*

*விடை :—உண்மைப்பொருளைக் கூடுதலை அறியாமையினால், தன் ஆத்மஸ்வரூபத்தை பரம்பொருளான ப்ரஹ்மமாகக் கண்டுணராமையினால் என்க.*

*ஆதலால், உடம்புமுதலியவற்றை ஆத்மாவாகக்கொண்டவர் “ இந்திரியவிஷயங்களை அநுபவிப்பதிலே ரஸ மிருக்கின்றது” என்னும் நினைப்பினால் எவ்விடத்தும் செல்லுகிறார்கள். குருடன் மேடு, பள்ளம், முள் உள்ள இடம் முதலியவற்றின்மேல் தட்டித்தடுமாறுவதுபோல், விவேகமில்லாதவன் இந்திரியவிஷயஇன்பத்தை வேண்டி எங்கும் தட்டித்தடுமாறுகிறான் என்பது தேர்ந்த கருத்து.* (௯)

௧௦.

*அன்றியும்,*

அதுவோ இந்திரியங்கட்குப் பெருமயக்கமாம். போய்ப்போருள்களுடைய சம்பந்தத்தால் இவனுக்கு (ஸம்ஸார)கதி என்றுமுள்ள (தாகின்றது. இவன்) போய்ப்போருள்களுடைய சம்பந்தத்தாலே உள்ளேயுள்ள ஆத்மா தாக்கப்பெற்றவனாய், விஷயங்களைக் கருதிக்கோண்டு, (அவற்றையே) எப்புறத்தும் தோழுகிறான்.

*பெருமயக்கமாவது - இந்திரியபோகங்களைத் தேடித் திரிதல். எவனுக்கு விஷயங்களின்மீது வாஸ்தவபுத்தி இல்லையா, அவனது இந்திரியங்கள் விஷயங்களின்மேல் செல்லா. செல்லாமையினால், அவன் உள்ளேயுள்ள ஆத்மாவைநோக்கியே செல்லுதலாகும். ஆகவே, மயக்கம் தொலையு மென்க. மற்று, எவனுக்கு விஷயங்களின்மீது வாஸ்தவபுத்தி உள்ளதோ, அவன் வெளியிலுள்ள விஷயங்களின்மீது செல்லுகின்ற*

கக.

𑌅𑌭𑌿𑌧𑍍𑌯𑌾 𑌵𑍈 𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌚𑍈𑌨𑌂
𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑍌 𑌗𑍃𑌹𑍍𑌯 𑌚𑍈𑌨𑌂 𑌤𑍁 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 ।
𑌏𑌤𑍇 𑌬𑌾𑌲𑌾𑌨𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑌯𑌨𑍍𑌤𑌿
𑌧𑍀𑌰𑌾𑌸𑍍𑌤𑍁 𑌧𑍈𑌰𑍍𑌯𑍇𑌣 𑌤𑌰𑌨𑍍𑌤𑌿 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍍 ॥ ,

---

மையால், உள்ளேயுள்ள ஏகமான பரம்பொருளை ஆத்மாவாக நேரே காண்பதில்லை. ஆதலால், வெளிநோக்குடையவன் விஷயங்களின்மேல் மறித்துமறித்துச் சென்றுஅலைகிறான்; அலையஅலைய,போகஆசை மேன் மேல் கிளர்க்கின்றது. அவ்வண்ணமே, பகவான் மநு அருளிச்செய்கிறார் :

"𑌨 𑌜𑌾𑌤𑍁 𑌕𑌾𑌮𑌃 𑌕𑌾𑌮𑌾𑌨𑌾𑌮𑍁𑌪𑌭𑍋𑌗𑍇𑌨 𑌶𑌾𑌮𑍍𑌯-
𑌤𑌿 । 𑌹𑌵𑌿𑌷𑌾 𑌕𑍃𑌷𑍍𑌣𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑍇𑌵 𑌭𑍂𑌯 𑌏𑌵𑌾𑌭𑌿𑌵𑌰𑍍𑌧-
𑌤𑍇 ॥"

"காமம், விரும்பிய விஷயங்களை அநுபவித்தலால் ஒருகாலும் அடங்குவதில்லை; தீ ஹவிஸினாற்போல, மிகுதியாகவே வளர்கின்றது"—(மநு - உ - கச)

இவ்வாறு ஓசைமுதலிய கற்பனைப்பொருள்களோடு கூட்டுறவு நிகழுங்கால், ஸம்ஸாரத்தினுள் கிடந்துஉழலும் நிலைமையானது மனிதனுக்கு அவச்யம் அமைவதாகின்றது. ஏனெனில்,—அவன், அவித்யையினால் கற்பிக்கப்பட்ட பொய்ப்பொருள்களைக் கூடி, தனது இயல்பான ப்ரஹ்மாத்மநிலையை இழந்தவனாய், ஸ்திரீமுதலிய விஷயங்களைக் கருதி, பரம்பொருளைத் தொழாது, அந்த ஸ்திரீமுதலான விஷயங்களையே தொழுகின்றான். (க0)

கக.

அதனால் என்னவெனின்,—கூறுவோம், கேட்பாயாக :

(விஷயங்களைக்) கருதுதல் இவனை முதலில் கெடுக்கின்றன. பின்பு, காமமும் கோபமும் இவனைப் பிடித்துக்(கெடுக்கின்றன). இவை சிறுவர்களைச் சாதற்குச் செலுத்துகின்றன. தீரர்களோ தைரியத்தினால் சாதலைக் கடக்கிறார்கள்.

ஸ்திரீ பணம் முதலான விஷயங்களை மனத்தினுள் கருதிக்கொண்டிருத்தல் ஏதுவோ, அது மனிதனை முதலில் கெடுக்கின்றது, தன்நிலை பிறழ

கஉ.

𑌯𑍋𑌽𑌭𑌿𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌨𑍁𑌤𑍍𑌪𑌤𑌿𑌷𑍍𑌣𑍂𑌨𑍍 𑌨𑌿𑌹𑌨𑍍𑌯𑌾𑌦𑍍
𑌅𑌨𑌾𑌦𑌰𑍇𑌣𑌾𑌽𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍁𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 ।

ச்செய்கின்றது. இவ்வாறு அவற்றைக் கருதிக் கேடுற்று நிற்குங்கால் அவன் கருதியுள்ள விஷயம் அவனுக்கு நேர்ப்பட்டவளவிலே, காமம் அவனை உடனே பிடித்துத் தாக்குகின்றது. காமத்தால் தாக்கப்பட்ட அவனை கோபம் பிடித்துச் சீரழிக்கின்றது. விஷயத்தியானமும், காமமும் கோபமும் தமக்கு வசப்பட்ட மூடரான பகுத்தறிவில்லா ஜனங்களை சாவென்பதில், மூப்பு இறப்பு பிணிமுதலியவற்றில் தள்ளுகின்றன. அவ்வாறே, சுருதியையும் காணலாம்:

> "𑌪𑌰𑌾𑌚𑌃 𑌕𑌾𑌮𑌾𑌨𑌨𑍁𑌯𑌨𑍍𑌤𑌿 𑌬𑌾𑌲𑌾𑌸𑍍𑌤𑍇 𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌰𑍍-
> 𑌯𑌨𑍍𑌤𑌿 𑌵𑌿𑌤𑌤𑌸𑍍𑌯 𑌪𑌾𑌶𑌂 । 𑌅𑌥 𑌧𑍀𑌰𑌾 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌂
> 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑌧𑍍𑌰𑍁𑌵𑍇𑌷𑍍𑌵𑌿𑌹 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌨𑍍𑌤𑍇 ॥"
>
> "சிறுவர்கள் வெளியிலுள்ள காமப்பொருள்களைத் தொடர்கிறார்கள். அவர்கள் மிருத்தியுவினுடைய பரந்த வலையை அடைகிறார்கள். விவேகிகளோ (ஸ்வரூபநிலையான) சாகாமையை அநித்யங்களுள் நித்யமாக அறிந்து, இங்கே (ஒன்றையும்) வேண்டுவதில்லை"—(கட - உ - க - உ).

மற்று, தீரர்களோ ஸ்திரீமுதலான விஷயங்களைத் திண்மையான விவேகத்தால் வென்று, பரம்பொருளை ஆத்மாவாக அறிந்து மிருத்தியுவைக் கடந்திடுகிறார்கள். அவ்வாறே, சுருதியும் கூறுகின்றது:

> "𑌨𑌿𑌚𑌾𑌯𑍍𑌯 𑌤𑌂 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍁𑌖𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇"
>
> "அதனை அறிந்து, மிருத்தியுவினுடைய வாயினின்றும் தப்புகிறான்"—(கட - க - ங - கரு). (கக)

ஞானிக்கு மிருத்தியு இல்லை.

கஉ.

அந்தத் தீரர்கள் எவ்வாறு மிருத்தியுவை, மூப்பு இறப்புமுதலியவற்றைக் கடக்கிறார்கள்?— கூறுவோம்:

மேலே எழும்பி எழும்பி விழும் விஷயங்களை எவன் (நிலையில்லவையாக, அசுத்தமாக, துன்பமாக)நினைத்துத்தள்ளுகின்றானோ, அசட்டையி

ஸ வை ம்ருத்யும் ம்ருத்யுரிவாத்தி ஸம்பூர்ணா
ஹ்யேவம் விஜாநு யோ(அ)விஹஸ்ஸீஹ காஜாநு ॥

கரு.

காமாநநுஸாரீ புருஷ: காமாநநுவிநஸ்யதி ।
காமாந் வ்யுதஸ்ய து நுதே யத்கிஞ்சித்புருஷோ ரஜ: ॥

---

ணல் (அவற்றை மீட்டும்) நினையாதிருக்கின்றானோ, எந்த ஞானி இவ்வாறு காமங்களைத் தொலைக்கின்றானோ, அவன் மிருத்தியுபோல ஆகி மிருத்தியுவை விழுங்குகின்றான்.

அசட்டையினால் - அமேத்யத்தைப் பார்த்தலிலே எப்படி உதாசீனமுள்ளதோ, அப்படிப்போன்ற உதாசீனத்தினால். இது இங்கே உணரத்தக்கது :

"விஷயவ்ருத்திஸம்ஹாரம் ய: கரோதி விவேகத: ।
ம்ருத்யோர்ம்ருத்யுரிதி ப்ரோக்த: ஸ விஜாநாத்மவித்-
தம: ॥"

"எவன் விவேகத்தினால் விஷயங்களை எதிர்த்து ஸம்ஹரித்தலைச் செய்கின்றானோ, அவன் மிருத்தியுவிற்கு மிருத்தியு எனப் பெயர்பெற்றவன், கற்றவன், தன்னையறிந்தவன், தேர்ந்தவன்." (கஉ)

காமத்தின் தீமையும், ஞானத்தின் நன்மையும்.

கரு.

மற்று, காமங்களைப் பாராட்டி

காமங்களைப் பின்பற்றுகின்ற மனிதன் காமங்களைத் தொடர்ந்தே அழிகிறான். காமங்களைத் தள்ளி(யுள்ள)மனிதன் எத்தகைய குற்றத்தையும் உதறுகின்றான்.

எத்தகைய குற்றத்தையும் உதறுகின்றான் - இப்பிறப்பிலாயினும், முற்பிறப்பிலாயினும் தேடிக்கொண்ட புண்யம் பாவம் முதலாகிய கர்மத்தை விவேகபுத்தியினால் துடைக்கின்றான். (கரு)

கச.

𑌦𑍇𑌹𑍋𑌽𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍋 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌨𑌰𑌕𑍋𑌽𑌯𑌂 𑌪𑍍𑌰𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 ।
𑌗𑍃𑌧𑍍𑌯𑌨𑍍𑌤 𑌏𑌵 𑌧𑌾𑌵𑌨𑍍𑌤𑌿 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌃 𑌶𑍍𑌵𑌭𑍍𑌰𑌮𑍁𑌨𑍍𑌮𑍁𑌖𑌾𑌃 ॥

கரு.

𑌅𑌮𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌨𑍍𑌯𑌨𑍍
𑌨𑌾𑌧𑍀𑌯𑌤𑍇 𑌤𑌾𑌰𑍍𑌣 𑌇𑌵𑌾𑌸𑍍𑌯 𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌃 ।
𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌲𑍍𑌲𑍋𑌭𑌾𑌨𑍍𑌮𑍋𑌹𑌮𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾

---

கச.

ஆயின், கறுத்துச் சுருண்ட குழலும், மலர்ந்த முகமும், சிரித்த பார்வையும், குயிலன்ன குரலும், இறுமாந்து மதர்த்த கொங்கையும், இன்னுமிவைபோன்ற இனிமையெல்லாம் செவ்வனே வாய்ந்த பொன் மேனியிலே படும் இழுக்கு யாது? எனின்,—கூறுகிறார்:

பிராணிகளுடைய இவ்வுடலானது அசேதநமாக, நரகமாகக் காணப் படுகின்றது. (அவிவேகிகள் காமத்தை) அவாவிக்கொண்டே பள்ளத்தை எதிர்நோக்கிச் செல்பவராய் ஓடுகிறார்கள்.

இச்சரீரம் மண்ணாங்கட்டிபோல ஜடமாயுள்ளது; இரத்தம், கோழை, ஊன், புழு, மலம், மூத்திரம் முதலியன நிரம்பிக்கிடக்கின்றமையால் நரகமாயுமுள்ளது. இவ்வாறு மிக்கு அருவருக்கத்தக்கதாயினும், மூடர்கள் மாதரது உடலை விரும்பிமதித்து, விளக்கின்மேல் விட்டில் போல, அவ்வுடலின்மேல் சென்றுசென்று மயங்குகிறார்கள். குருடர் மேடுபள்ளங்களிலே தட்டுண்டு தடுமாறி வீழ்தல்போல, இந்திரியவிஷயக்குருடர்கள் ஸ்திரீமுதலானவற்றிலே தட்டுண்டு தடுமாறி வீழ்கிறார்கள் என்பதாம். (கச)

கரு.

இவ்வாறு எவர்கள் வீழ்கிறார்களோ, அவர்கட்குச் சரீரமும் வீணாம்:

க்ஷத்திரிய! வேறொன்றையும் நினையாதவன் (வேதாந்தநூல்களைப்) படிப்பதில்லை. இவனுக்கு(ச் சரீரம்)வைக்கோலினால் செய்த புலிபோன்றது. எந்த இவன் உனது சரீரத்தினுள் கோபத்தாலும் லோபத்தாலும்

ஸ வை ம்ருத்யுஸ்ஸ்வசரீரே ய ஸாஷ: ।

கசு.

ஸாவம் ம்ருத்யும் ஜாயஜாநம் விசிக்ஷா.
ஜ்ஞாநே திஷ்டந் விபேதி மம்ருத்யோ: ।
விநச்யதே விஷயே தஸ்ய ம்ருத்யு:
ம்ருத்யோர்யதா விஷயம் ப்ராப்ய மர்த்ய: ॥

---

மயக்கமும் அச்சமும் (கூடிய)உள்ளேயுள்ள ஆத்மாவா(யிருக்கின்றானே) அவனே மிருத்தியுவாம்.

எவன் ஸ்திரீமுதலான விஷயங்களை அவாவிக்கொண்டு அவற்றின் மேல் குதித்துக்குதித்து ஓடுகின்றானோ, அவன் தன்ஆத்மாவான ப்ரஹ்மஸ்வரூபத்தை அறியாதவனாய் அந்த ப்ரஹ்மத்தைப்பற்றிய நூலை அறிவதில்லை. அவ்வாறு சிற்றின்பங்களுள் அழுந்திக்கிடப்பவன் நான்கு வேதங்களையும் ஆறுசாஸ்திரங்களையும் அறிந்த வித்வானாயினும், அவனுக்கு இம்மநுஷப்பிறவி வீணாம்; வைக்கோலினால் செய்த புலிபோல என்க. இவ்வாறு சரீரம் வீணென்பதுமாத்திர மில்லை; எவன் இவ்வாறிருக்கின்றானோ, அவனே அவனுக்கு மிருத்தியுவாம், கேட்டிற்குக் காரணமாம்.—எப்படி யெனில்,— எவன் இந்திரியங்களை வெல்லாது, கோபம் லோபம் முதலியவற்றைக்கொண்டுநிற்பவனாய் விஷயங்களின்மேல் செல்லுகின்றானோ, அவனே அவனுக்கு, அதாவது, தானே தனக்குப் பகைவனாம். அவ்வாறே, பகவான் அருளிச்செய்துள்ளார்:

"ஆத்மைவ ரிபுராத்மந: ।"
"தானே தனக்குச் சத்துரு"—(வே - கீ - சு - ரு). (கரு)

கசு.

அந்தச் சத்துருவான மிருத்தியுவைத் தொலைப்பது எதனால்? எனின்,—"ஞானத்தினால்" என்கிறார்:

மிருத்தியுவை இவ்வாறு கிளைப்பதாக உணர்ந்து ஞானத்திலே நிற்பவன், இங்கே மிருத்தியுவினின்று அஞ்சுவதில்லை. (பிராணிகளின்) சரீரம் யமனது எல்லையை யடைந்து (அழிந்திடுமாறு) போல, மிருத்தியு அவனது எல்லையிலே அழிந்திடுகின்றது.

கீழ்க்கூறிய(உ - ச) தடுமாற்றம்என்னும் அஜ்ஞானமே காமம் கோபம் லோபம் முதலியவையாக மாறி, பிறப்பிறப்பு முதலான எல்லாத்

கஎ.

த்ருதராஷ்ட்ர உவாச ॥

யாநேவாஹுரிஜ்யயா ஸாதுலோகாந்
த்விஜாதீநாம் புண்யக்ருதாம் ஸநாதநாந் ।
தேஷாம் பரார்த்தம் கதயந்தீஹ வேதா:
ஏதத்வித்வாந்நோபைதி கதம் நு கர்ம ॥

இங்குகட்டும் விதையா யுள்ளது எனத் தெளிவாய் உணர்ந்து, அக்காமம் கோபம் முதலிய குற்றங்களைக் கடிந்து, அமைதி பொறுமை அடக்கம் முதலிய குணங்களைத் தேடி, ஆத்மாவை பேரறிவான நித்யாநந்தமாகக் கண்டவன் மிருத்தியுவினின்று அஞ்சமாட்டான். அவ்வாறே, சுருதி கூறுகின்றது :

"ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் । ந பிபேதி குதச்சந"

"ப்ரஹ்மாநந்தத்தை அறிந்தவன் எதனின்றும் பயப்படுவதில்லை"—(தை - உப - உ - கூ)

அவன் ஏன் அஜ்ஞானமிருத்தியுவிற்கு அஞ்சுவதில்லை? எனில்,—கூறுவோம் : யமனுக்கு எதிர்ப்படும் பிராணி உடனே மாய்ந்திடுமாறுபோல, பரம்பொருளைக் கண்டுநிற்கும் ஞானிக்கு எதிர்ப்படும் அஜ்ஞானம் என்னும்மிருத்தியு சடக்கென்று விரைந்து மாய்ந்திடுகின்றது. ஆதலால், அவன் தானே தன்நிலையில் நிற்பவனுய்த், தானுனவனுய்த், தன்னையல்லது வேறு காண்பதில்லை. இரண்டாவதுஎன்று ஒன்று இருந்தாலன்றே, அதனினின்று அஞ்சுதலாகும் என்க. (கசு)

அஜ்ஞானிக்கே கர்மமாம்.

கஎ.

ஸம்ஸாரக்கட்டிற்குக் கர்மம் காரணம் என்றும், மோக்ஷத்திற்கு ஞானம் ஸாதநம் என்றும் கீழ்க் கூறப்பட்டவற்றிலே திருதராஷ்டிரன் வினவலாயினன் :

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான் :

வேதங்கள், மிகப்புண்யமான என்றுமுள்ள எந்த நல்லலோகங்களையே இருபிறப்பாளர்க்கு வழிபாட்டினுல் (அடையப்படுவனவாகக்) கூறுகின்றனவோ, அவற்றை மேலான புருஷார்த்தமாக இங்கே உரைக்கின்றன. அறிந்தவன் இக்கர்மத்தைச் செய்வதில்லை (யென்பது) எப்படி ?

கஅ.

ஸநத்ஸுஜாத உவாச ||

ஏவம் ஹ்யவித்வாநுபயாதி தத்ர.
ததார்த்தஜாதம் ச வதந்தி வேதா: |
ஸ நேஹ யாயாதி பரம் பராத்மா
ப்ரயாதி மார்கேண நிஹத்ய மார்காந் ||

---

ப்ரஹ்மலோகம் முதலியன - இந்திராதிலோகங்களைக்காட்டிலும் பரிசுத்தமானவையாம்; வியவகாரநிலையைக்காட்டிலும் நீட்டித்துநிற்பவையாம். பிராமணர்முதலானோர் இந்தலோகங்களை ஜ்யோதிஷ்டோமம் முதலிய வழிபாடுகளால் அடைகிறார்கள். இவ்வாறு இவ்வுலகங்களையடைதலே இந்த ஸம்ஸாரத்தில் பெறவேண்டிய முக்கிய புருஷார்த்தமாம். என்று வேதங்கள் கூறுகின்றன; கூறவே, ஞானியாவான் லோகங்களை யடைதற்குச் சாதநமான கர்மத்தை அநுஷ்டிப்பதில்லை யென்றல் எப்படி? (கஎ)

கஅ.

இவ்வாறு வினவப்பெற்ற பகவான்

ஸநத்ஸுஜாதர் சொல்லலுற்றார்:-

அஜ்ஞானி இவ்வாறு (நினைத்து) அதிலே செல்லுகிறான். அப்படியே, வேதங்களும் பயன்களையெல்லாம் கூறுகின்றன. (மற்று, ஞானியான) அவன் இதிலே செல்வதில்லை; (நேரான) வழியினால் பரமாத்மாவாகிப் பரம்பொருளை அடைகிறான்; வழியல்லாதவற்றைத் தொலைக்கின்றான்.

இவ்வாறு ப்ரஹ்மலோகம் முதலியவற்றின் இன்பத்தைக் கருதுகின்ற அஜ்ஞானி அவற்றிற்கு ஸாதநமான கர்மத்தை மேற்கொள்ளுகிறான். அப்படியே, வேதங்களும் பலபல பயன்களை அந்த அஜ்ஞானிக்கே கூறுகின்றன. ஆதலால்(அஜ்ஞானிக்கே கூறுகின்றமையால்), ஞானியானவன் ப்ரஹ்மலோகம் முதலியவற்றினுடைய அநித்யமான இன்பத்திலாயினும், அதற்குச் சாதநமான கர்மத்திலாயினும் தலைப்படுதலில்லை. அங்ஙனமவன் யாது செய்கிறான்? எனில்,—அவன் பரம்பொருளை ஆத்மாவாகக் கண்டுணர்ந்து ப்ரஹ்மமாகி ப்ரஹ்மத்தை அடைகிறான். ஸம்ஸாரத்திற்குக் காரணமாய் ஆத்மாவை யடைதற்கு விரோதியான வழிகளை முற்றும் அறத் தொலைத்துவிடுகின்றான் என்க. (கஅ)

௧௧.

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚 ॥

𑌕𑍋𑌽𑌸𑍌 𑌨𑌿𑌯𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 𑌤𑌮𑌜𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑌂
𑌸 𑌚𑍇𑌦𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑌨𑍁𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 ।
𑌕𑌿𑌂 𑌵𑌾𑌽𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑌥𑌵𑌾𑌽𑌸𑍁𑌖𑌂 𑌚
𑌤𑌨𑍍𑌮𑍇 𑌵𑌿𑌦𑍍𑌵𑌨𑍍 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌥𑌾𑌵𑌤𑍍 ॥

---

ஜீவனும், ப்ரஹ்மமும் உண்மையிலே ஒரேபொருள்.

௧௧.

*தடுமாற்றம் என்னும் அஜ்ஞானம் - மிருத்தியு என்றும், தடுமாற்றமின்மையாகிய தன்நிலைநிற்றல் - சாகாமைஎன்றும் கூறி (௨ - ௪), அந்த மிருத்தியு காமம்முதலாக மாறினவழி (௨ - ௭, ௮......) அநர்த்தங்கட்கெல்லாம் காரணமாம் என்று காட்டி (௨ - ௭........௧௫), அந்த மிருத்தியுவை அழித்தல் ஆத்மஅறிவினால் ஆகும் என உணர்த்தி (௨ - ௧௬), ப்ரஹ்மலோகம் முதலியனவெல்லாம் அஜ்ஞானியைப்பற்றியுள்ளமையால் அவை புருஷார்த்தமாகா என ஞானவழியினால் மோக்ஷம் உபதேசிக்கப்பட்டது (௨ - ௧௮). படவே, “பரமாத்மாவாகிப் பரம்பொருளையடைகிறான்” (௨ - ௧௮) என ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று என்பதிலே திருதராஷ்டிரனுக்குச் சந்தேகம் எழுகின்றது :*

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான் :

அது முறையே இந்த எல்லாமாக இருந்தால், பிறவாத அப்பழம்பொருளை ஏவுகிறவன் யார்? அதற்குச் செய்யவேண்டியது என்ன? அல்லது, (அதற்கு நேர்ந்த) அநர்த்தம் என்ன? (முற்றும்) அறிந்தவரே! அதனையெல்லாம் எனக்கு அருளிச்செய்வீராக.

*நித்யமாய், அஸங்கமாய், நிர்விகாரியாய்ப், பரிசுத்தமான தனி அறிவாய் விளங்கும் பேராநந்தப்பொருள், முறையே ஆகாசம்முதலான இப்பிரபஞ்சத்தைப் படைத்து, அதனுள் புகுந்து உடம்பொடு நிற்பதாய்ப் பிறந்து இறந்து உழலுகின்றது எனில்,—அங்ஙனமப்பொருளை, பிறவாத இறவாத பரமாத்மாவை இவ்வாறு ஸம்ஸாரத்தினுள் உழலுமாறு யார் ஏவுகின்றான்?*

*அதனையல்லது வேறு இல்லாமையினால், அது தானே அவ்வாறிருக்கின்றது எனில்,—பலபல பிறவிகளில் அது அவ்வாறிருப்பதனால் அத*

௨௦.

ஸநத்ஸுஜாத உவாச ॥

ஶோஷோ ஜஹாநஸ்ய விஶேஷயோகே
ஹ்யநாதியோகே ந பவந்தி நித்யா: ।
ததாஸ்ய நாதிக்யஜிவைதி கிஞ்சித்
அநாதியோகேந பவந்தி பும்ஸ: ॥

---

ற்கு அடையவேண்டிய பயன் என்ன? அடையவேண்டுவன யாவும் அடையப்பெற்றநிலை அதுவாதலின்.

அல்லது, அது பலபல பிறவிகளில் செல்லாது ஸம்ஸாரத்தினுள் நுழையாது தானே தன்மகிமையில் சும்மாவிருப்பதனால், அதற்கு வரும் தீங்கு என்ன?

"ஏவுவோன் - ஈச்வரன்; ஏவப்படுவோன் - ஜீவன்" என்பது முதலான வேற்றுமையெல்லாம் காணப்படுகின்றமையால், பேதம் இருக்க வேவேண்டும் என்பதாம். பகவானே! இவ்வாறு கிளம்புகின்ற என்ஸம்சயங்களைப் போக்கவேண்டும். (கக)

௨௦.

இதற்கு ஸமாதாநத்தை

ஸநத்ஸுஜாதர் சொல்லலுற்றார்:

இதிலே வேறுபாடுள்ளவழி பெரிய தீங்கு(வந்திட்டது). அநாதிஸம்பந்தத்தால் ஜீவர்கள் இருக்கிறார்கள், அவ்வாறாக இதனது பெருமை சிறிதும் சிதைதலில்லை, ஜீவர்கள் அநாதிஸம்பந்தத்தால் (பற்பலராக) இருக்கிறார்கள்,

எவன் ப்ரஹ்மத்தினிடத்து வேற்றுமையைக் காண்கின்றானோ, அவனுக்குப் பிறப்பு பிணி மூப்பு இறப்பு முதலிய கேடுகள் வருகின்றன. என்று சுருதிகள் உணர்த்துகின்றன:

"யதா ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நுதரமந்தரம் குருதே । அத தஸ்ய பயம் பவதி"

"எப்பொழுது இவன் இதனிடத்துச் சிறிதாயினும் வேற்றுமையைக் கொள்கின்றானோ, அப்பொழுது அவனுக்குப் பயம் இருக்கின்றது"—(தை - உப - ௨ - எ)

"ஏதெ்ராஃ ஸ ஏத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பஶ்யதி ।"

"எவன் இங்கே வேறுபட்டது போலக் காண்கின்றானோ, அவன் சாதலினின்று சாதலைப் பெறுகிறான் [மீண்டும் பிறக்கிறான், மீண்டும் இறக்கிறான்]"—(கட - ச - க0)

"அத யோऽந்யாம் தேவதாமுபாஸ்தே அந்யோऽஸாவந்யோऽஹமஸ்மீதி ந ஸ வேத"

"இனி, எவன் 'அவன் வேறு,நான் வேறு' என வேறோர் தெய்வத்தைத் தொழுகின்றானோ, அவன் (உண்மையை) அறிவதில்லை"—(பிரு - க - ச - க0)

அல்லது, ஜீவனும் ப்ரஹ்மமும் வெவ்வேறு பொருள்களாம் எனக் கொண்டால்,—

"தத்த்வமஸி"

"நீ அதுவாக இருக்கிறாய்"—(சா - ஸு - கூ - ச)

"அஹம் ப்ரஹ்மாஸ்மி"

"நான் ப்ரஹ்மமா யிருக்கிறேன்"—(பிரு - ந - ச - க0)

"அயமாத்மா ப்ரஹ்ம"

"இந்த ஆத்மா ப்ரஹ்மமாம்"—(பிரு - ச - ரு - ககூ)

"ய ஆத்மா ஸர்வாந்தரஃ"

"எந்த ஆத்மா எல்லாவற்றையும் வியாபித்திருப்பதோ"—(பிரு - ரு - ச - க)

"ப்ரஹ்மேதம் ஸர்வம்"

"இதெல்லாம் ப்ரஹ்மம்"—(பிரு - ச - ரு - உ)

"இதம் ஸர்வம் யதயமாத்மா"

"இந்த எல்லாம் எதுவோ, (அது) இந்த ஆத்மா"—(பிரு - ச - ச - ஸு)

என்பனமுதலாக, "ஜீவனும் ப்ரஹ்மமும் ஒரேபொருள்" என்று உபதேசித்தருளுகின்ற சுருதிகளின் கொள்கைக்குப் பெரியதோர் குற்றமாகும் என்றொழிக.

பிரதிவாதி :— ஆயின், ஜீவன் ஈச்வரன் முதலிய வியவகாரவேற்றுமை எவ்வாறு செல்லுகின்றது ?

வாதி :—அது அநாதிஸம்பந்தத்தா லாகின்றது. (அநாதியாவது - தொடக்க மில்லாதது ; அதாவது, மாயை. வே - த - ரு - க, உ - ஆம் உல்லாஸங்களைப் பார்க்க.) ஒன்றான பரம்பொருளுக்கு மாயையினால் பற்பலவடிவுடைமை பொருந்துகின்றது. அவ்வண்ணமே, சுருதிகளும் கூறுகின்றன :

" ஏகோ தேவ꞉ ஸர்வபூதேஷு கூட꞉ "

" ஒரே கடவுள் எல்லாப் பொருள்களுள்ளும் மறைந்திருக்கின்றார் "—(ச்வே - ௬ - ௧௧)

" ஏகம் ஸத்விப்ரா பஹுதா வதந்தி "

" பிராமணர்கள் ஒரே உண்மையைப் பலவாறு கூறுகிறார்கள் "—(ருக்வே - ௧ - ௧௬௪ - ௪௬)

" ஏகம் ஸந்தம் பஹுதா கல்பயந்தி "

" ஒரே உண்மையைப் பலவாறு கற்பனைசெய்கிறார்கள் "—(ருக்வே - ௧௦ - ௧௧௪ - ௫)

" த்வமேகோஸி பஹூநநுப்ரவிஷ்ட꞉ "

" நீ பற்பலவற்றைப் புகுந்து ஒன்றா யிருக்கிறாய் "—[தை- ஆ - ௩ - ௧௧)

" அஜாயமாநோ பஹுதா விஜாயதே "

"பிறவாதது பலவகையாகப் பிறக்கின்றது"—(தை - ஆ- ௧௩ - ௧௪)

மாயையினால் வேற்றுமைப்பட்டாலும், அதனால் பரம்பொருளுக்கு யாதோர் குறையு மில்லை ; நீரினுள் பிரதிபிம்பித்தாலும், அதனால் சூரியனுக்குக் குறையொன்று மில்லைபோல. ஸம்ஸாரம் மாயாமயமாதலால், ப்ரஹ்மம் என்றும் ஒருபடித்தாய், குறைவிலா நிறைவாம் என்றபடி. ஆகவே,மாயாஸம்பந்தத்தினால் ஜீவர்கள் பலவகையாக இருக்கின்றார்கள் என்பதாம்.　(௨௦)

உக.

யதேதத³க்ஷரம் ப⁴க³வாந் ஸ நித்யோ
விகாரயோகே³ந கரோதி விஶ்வம் ।
ததா² ச தச்ச²க்திரிதி ஸ்ம மந்யே
ததா²ர்த²யோகே³ ச ப⁴வந்தி வேதா³꞉ ॥

---

### பரம்பொருளுக்கு வேறாகப் பிரபஞ்ச மில்லை.

உக.

*இனி, ப்ரஹ்மம் ஜகத்திற்குக் காரணமாதலும் மாயையினு லமை கின்றது எனக் காட்டுகிறார்:*

இது எதுவோ, அது மெய்ப்பொருளாகிய நித்யமான பகவான். (அவன்) மாயாசம்பந்தத்தினுல் பிரபஞ்சத்தைப் படைக்கிறுன். (அது) அப்படியே அவனது சக்தி யெனக் கொள்கிறேன். (அவனுக்கு) அப்பொருளினுடைய சம்பந்தத்திலே வேதங்கள் (பிரமாணமாய்) உள்ளன.

*தனிப்பொருளான ப்ரஹ்மம் மாயையினது கூட்டரவினுல் ஜகத்தைப் படைப்ப தாகின்றது. இதற்குப் பிரமாணமாயுள்ள சுருதி ஸ்மிருதிகள் வருமாறு:*

"இந்த்ரோ மாயாபி⁴꞉ புரூரூப ஈயதே"

*"பரமேச்வரன் மாயயினுல் பற்பலவடிவுள்ளவனுகத் தோற்றுகிறுன்"—(பிரு - உ - ரு - கக)*

"மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத்"

*"மாயையையுடையவன் இப்பிரபஞ்சத்தைப் படைக்கின் றுன்"—(ச்வே - ச - க)*

"மாயிநம் து மஹேஶ்வரம்"

*"மாயையுடைய மகேச்வரனை"—(ச்வே - ச - கo)*

"தை³வீ ஹ்யேஷா கு³ணமயீ மம மாயா து³ரத்யயா ।"

*"குணங்களாலாகியதான என்னுடைய இந்தத் தைவமாயையானது கடக்கஅரிதுதான்"—(வே - கீ - எ - கச)*

௨௨.

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚 ॥

𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑌾𑌚𑌰𑌨𑍍𑌤𑍀𑌹 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍
𑌤𑌥𑌾𑌽𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 𑌕𑍇𑌚𑌿𑌦𑌿𑌹𑌾𑌚𑌰𑌨𑍍𑌤𑌿 ।
𑌧𑌰𑍍𑌮𑌃 𑌪𑌾𑌪𑍇𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 𑌵𑌾
𑌉𑌤𑌾𑌹𑍋 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌹𑌨𑍍𑌤𑌿 𑌪𑌾𑌪𑌮𑍍 ॥

---

"𑌅𑌜𑍋𑌽𑌪𑌿 𑌸𑌨𑍍𑌨𑌵𑍍𑌯𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑍋𑌽𑌪𑌿 𑌸𑌨𑍍 । 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌾𑌯𑌯𑌾 ॥"

"பிறவாதவனுனும், குறைவிலாத்தன்மையனுனும், பூதங்கட்கு ஈச்வரனுனும், (யான்) என்மாயையை வசப்படுத்திக்கொண்டு, என்மாயையினுல் பிறக்கின்றேன்"— (வே - கீ - ௪ - ௬)

"𑌮𑌯𑌾𑌽𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌸𑍂𑌯𑌤𑍇 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 ।"

"ப்ரகிருதியானது கண்காணியான என்னுல் ஜங்கமத்தையும், ஸ்தாவரத்தையும் பிறப்பிக்கின்றது"— (வே - கீ - ௯ - ௧௦)

ஆக்ஷேபம் :—ஆயின், மாயை என்பதைக் கொண்டால், த்வைதமே ஆகின்றது.

ஸமாதாநம் :— (வே - த - மூ - 45 - ஆம் பக்கத்தைப் பார்க்க).

கர்மம்.

௨௨.

இதுவரை ஞானத்தைக் கேட்டு, இனிக் கர்மத்தைக் கேட்கவிரும்பிய திருதராஷ்டிரன் சோல்லலுற்றுன் :

சிலர் இங்கே நல்வினைகளை அநுஷ்டிக்கிறுர்கள் ; அப்படியே, சிலர் இங்கே தீவினைகளை அநுஷ்டிக்கிறுர்கள். ஆகவே, தீவினையினுல் நல்வினை எதிர்த்தடிக்கப்படுகின்றதா? அல்லது, நல்வினை தீவினையை எதிர்த்தடிக்கின்றதா?

இங்கே - இவ்வுலகிலே. நல்வினை - அக்நிஹோத்ரம் முதலியன.

உரு.

ஸநத்ஸுஜாத உவாச ॥

தஸ்மிந் ஸ்திதோ வாப்யுபயம் ஹி நித்யம்
ஜ்ஞாநேந வித்வாந் ப்ரதிஹந்தி ஸித்தம் ।
ததாऽபுண்யம் புண்யமுபைதி தேஹீ
ததாகதம் பாபமுபைதி ஸித்தம் ॥

உரு.

இதற்கு விடையை

ஸநத்ஸுஜாதர் சொல்லலுற்றார் :

ஞானி அதிலே நின்றவனாயினும், இரண்டையும் ஞானத்தால் தவறுது அடித்துவிடுகிறான். (இது) பிரசித்தமானது. உடம்போடுநிற்பவன் வேறுவிதமாயிருந்தால்,புண்யத்தை யடைகிறான்; அப்படியே,வந்த பாவத்தை யடைகிறான். (இது) பிரசித்தமானது.

அதிலே - நல்வினை தீவினையாகிய கர்மத்திலே. இரண்டையும் - நல்வினையையும், தீவினையையும். ஞானிக்குக் கர்மத்தொடர்பு இல்லை என்று சுருதி ஸ்மிருதி முதலியவற்றுள் உணர்த்தப்பட்டிருக்கின்றது :

"க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே"

"அதனைக் கண்டளவிலே, அவனது கர்மங்கள் தேய்ந்துவிடுகின்றன"—(மு - உ - உ - அ)

"யதா புஷ்கரபலாச ஆபோ ந ஶ்லிஷ்யந்தே ஏவமேவம்விதி பாபம் கர்ம ந ஶ்லிஷ்யதே"

"தாமரையிலையிலே எப்படி ஜலம் ஒட்டுவதில்லையோ, அப்படி,—இவ்வாறறிந்தவனிடத்துப் பாவகர்மம் ஒட்டுவதில்லை"—(சா - ச - கச - ௩)

"ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி"

"அவ்வாறே ஞானி புண்யபாவங்களை உதிர்த்துக் களங்கமற்றவனாய் உயர்ந்த ஒரேநிலையைப் பெறுகிறான்"—(மு - ௩ - க - ௩)

உச.

ப்ரேத்யாஹ்யம் கர்மணா ஸம்ஜ்ஞிதேஷ்விஹ
ஸாஹஸ்ய பாபஸ்ய ச பாபி கர்மணா |
யத்கர்ம பாபம் ப்ரணுததீஹ வித்வான்
யதோ பலீயானிதி தஸ்ய வித்தி ||

---

"யதைதாம்ஸி ஸமித்தோ(அ)க்நிர் பஸ்மஸாத் குருதே(அ)ர்ஜுந | ஜ்ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா ||"

"அர்ஜுந! ஜ்வலிக்கின்ற தணலானது விறகுகளை எவ்வாறு நீறுகச் செய்கின்றதோ, அவ்வாறே ஞானமென்னும் தணலானது ஸகல கர்மங்களையும் நீறுகச் செய்கின்றது"— (வே - கீ - ச - ௩௭)

ஞானமில்லாதவனே புண்யத்தையும் பாவத்தையும் அநுபவிக்கிறான் என்பதும் சுருதி ஸ்மிருதி முதலியவற்றில் நன்றாய்க் கூறப்பட்டிருக்கின்றது. மு - க - ௨ - ௧௦; பிரு - ரு - ச - ௧௧; வே - கீ - ரு - ௨௦, ௨௧ முதலியவற்றைக் காண்க. இவை, இங்கே விரிவஞ்சி விடுக்கப்பட்டன. (௨௩)

உச.

(பரலோகத்தை) அடைந்து, நல்வினை தீவினைகளுடைய நிலையில்லாத இரண்டு(பயனும்) கர்மத்தால் அநுபவிக்கப்படுகின்றன. தெரிந்தவன் கர்மத்தோடு (கூடியவனாய்), தர்மத்தினால் இங்கே பாவத்தைப் போக்கிக்கொள்கிறான்: (ஏனெனில்), அவனது தர்மம் வலியது என்று தெரிந்துகொள்.

இரண்டு (பயனும்) - *நல்வினைப்பயனும், தீவினைப்பயனும்.* தெரிந்தவன் - *கர்மத்தினது உபயோகத்தை அறிந்தவன்; ஈச்வரனுக்காகக் கர்மத்தை அநுஷ்டிப்பவன். இவன் தனக்கு உரிய கர்மத்தை ஈச்வரார்ப்பணமாகச் செய்வதனால் தருமம் உண்டாகின்றது; அதனால் பாவம் தேய்கின்றது. எனவே, தருமம் பாவத்தினும் வலியது, பாவத்தைக்*

உரு, உசு.

𑌯𑍇𑌷𑌾𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇𑌷𑍁 𑌵𑌿𑌸𑍍𑌪𑌰𑍍𑌧𑌾 𑌬𑌲𑌵𑌦𑍍 𑌬𑌲𑌵𑌤𑌾𑌮𑌿𑌵 ।
𑌤𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾 𑌇𑌤𑌃 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑌾𑌮𑍍॥
𑌯𑍇𑌷𑌾𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌨 𑌚 𑌸𑍍𑌪𑌰𑍍𑌧𑌾 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌧𑌨𑌮𑍍 ।
𑌤𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾 𑌇𑌤𑍋 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌪𑌮𑍍॥

---

கெடுக்கும் வல்லமையுள்ளது. ஆனல், கர்மத்தை ஈச்வரார்ப்பணமாகச் செய்யாதவன் புண்யபாவங்களை அநுபவிக்கிருன்; அவற்றுள், ஒன்றை யொன்று கெடுப்பதில்லை. என்பது கருத்து. இங்கே - இவ்வுலகிலே. ௩ - அ, ௬ - ஆம் சுலோகங்களைப் பார்க்க. (உச)

உரு, உசு.

அங்ஙனம் யாவர்க்குக் கர்மமானது ஸ்வர்க்கம் முதலியவற்றிற்கு ஸாதநமாயுளது? அன்றியும், அது யாவர்க்கு மனந்திருந்துதல் மூலமாக ஞானத்திற்கு வழியாகின்றது? எனில்,— கூறுவோம்:

வலிமையுடையவர் வலிமையிலேபோல, எவர்கட்கு தருமங்களிலே எதிர்செய்தல் உளதோ, அந்த ப்ராஹ்மணர்கள் இங்கிருந்து சென்று ஸ்வர்க்கத்திலே விளங்குதலைப் பெறுகிறார்கள்.

எவர்கட்கு தருமத்திலே எதிர்செய்தல் இல்லையோ, அவர்கட்கு அது ஞானத்திற்கு வழி. அந்த ப்ராஹ்மணர்கள் இதனினின்று தப்பியவராய், மூன்றும் நீங்கிய ஸ்வர்க்கத்தை யடைகிறார்கள்.

வலிய அரசனொருவன் வேற்ருர் வலிய அரசனைக் கண்டு, "யான் இவனது வலிமையினும் மிக்க வலிமையைத் தேடிக்கொண்டு, இவனை வென்று, இவனைப்பார்க்கிலும் அதிக ஸுகியாக இருப்பேன்" என்று போட்டிகொள்ளுமாறுபோல,—ஸ்வர்க்கலோகவாழ்க்கையிலே ஊர்வசி போகம் முதலியவற்றை விரும்பி, அவற்றிற்குச் சாதநமான வேள்வி முதலிய தருமங்களிலே "நான், இவன்செய்கின்ற தருமத்தினும் மேம்பட்டதான தருமத்தைச் செய்து இவனைப்பார்க்கிலும் அதிக ஸுகியாவேன்" எனப் பிறனொடு போட்டி செய்து தருமங்களை அநுஷ்டிக்கின்றவர்கள் - ஸ்வர்க்கத்திலே அவற்றினது புண்ணியமுள்ளவரை இன்புறு

உஎ.

𑌤𑌸𑍍𑌯 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍𑌸𑌮𑌾𑌚𑌾𑌰𑌮𑌾𑌹𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑍋 𑌜𑌨𑌾𑌃 ।
𑌨𑍈𑌨𑌂 𑌸𑌮𑌭𑌿𑌨𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌬𑌾𑌹𑍍𑌯𑌶𑍍𑌚𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑍋 𑌜𑌨𑌃 ॥

---

கிறார்கள். எனவே, விஷயங்களை விரும்பிப் பயனில்லை பற்றுக்கொண்டவர்க்குக் கர்மமானது ஸ்வர்க்கம் முதலியவற்றிற்கு ஸாதநம் என்றபடி. **ப்ராஹ்மணர்கள்** - வேள்விக்கு உரியவர்கள்.

ஆனால், எவர்கள் விஷயங்களால் மனம்கவரப்படாதவராய், அழியும் பயனை நோக்காதவராய், தருமத்திலே பிறரொடு எதிர்செய்யாது வேள்விமுதலிய கர்மங்களை ஈச்வரார்ப்பணமாக அநுஷ்டிக்கிறார்களோ, அவர்கட்கு அவை மனந்திருந்துதல்மூலமாக ஆத்மஅறிவிற்கு ஸாதநமாம். அவ்வாறே, மேலே [ந - அ] கூறுவதைக் காண்க. அவர் இவ்வாறு மாசற்று மனம் தெளிய ஞானத்தால் பரமாத்மாவைத் தன் ஆத்மஸ்வரூபமாகக் கண்டு தேறியவழி இப்பிறப்புஇறப்பினின்றும் அகன்றவராய், மூன்றும்நீங்கிய ஸ்வர்க்கத்தை யடைகிறார்கள் : தொல்லையில்லா இடத்தை, இன்பமான ப்ரஹ்மத்தைப் புகுகிறார்கள் : அந்த ப்ரஹ்மஸ்வரூப மாகிறார்கள் என்றபடி. **மூன்று** - ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்னும் துன்பங்கள் ; அல்லது, ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் குணங்கள் ; அல்லது, நனவு கனவு உறக்கம் என்னும் நிலைமைகள். (உரு, உசு)

**ஞானியின் வாழ்க்கை.**

உஎ.

இவ்வாறு கர்மியின் ஒழுக்கத்தைக் கூறி, இப்பொழுது ஞானியின் ஒழுக்கத்தைக் கூறத் தொடங்குகிறார் :

**வேதங்களை அறிந்தவர்கள் அவனது ஒழுக்கத்தை நல்லதாகக் கூறுகிறார்கள். (ஆனால்), அன்னிய ஜனங்களும் கிட்டிய ஜனங்களும் இவனை நன்கு மதிக்கமாட்டார்.**

**அவனது** - முற்றத்துறந்த ஞானியினது. **கிட்டிய ஜனங்கள்** - மனைவி, மக்கள் முதலானோர். (உஎ)

உச.

யத்ர ஹ்யேவ ஹவிர்லபேயுர் ப்ராஹ்மணஸ்ய த்ருணோதகம் ।
அந்நம் பாநம் ப்ராஹ்மணஸ்ய தஜ்ஜீவேந்நாநுஸஞ்ஜ்வரேத் ॥

---

துறவிக்கு உரிய இடம்.

உச.

மனைவிமுதலானோரைத் துறந்த ஞானிக்குத் தங்குமிடம் யாது? எனின்,—அருளிச்செய்கிறார்:

மாரிகாலத்தில் புல்லிலே நீர் (நிரம்ப நிற்பது)போல, எங்கே ப்ராஹ்மணனுக்கு உணவும் பாநமும் மிகுதியா(யிருப்பதாக அவன்) அறிவானோ, அதனை (யடைந்து) உயிர்வாழவேண்டும்; வருந்தக்கூடாது.

எங்கே - புலி முதலியவற்றின் தொந்தரவு இல்லா இடத்திலே; அல்லது, இல்வாழ்வோனது வீட்டிலே. ஒன்று, அவன் மிருகங்களின் தொந்தரவு இல்லாததாய், பசிக்குக் காய் கனி கிழங்கு முதலிய உண்டியும் தாகத்திற்கு நீரும் கிடைக்கக்கூடிய ஒரு தனிமையான இடத்தில் வசிக்கவேண்டும்; அல்லது, செல்வமுடைய நல்ல கிருகஸ்தரது வீட்டிலே பிக்ஷை செய்துகொள்ளவேண்டும். அற்பஜீவநமுள்ள ஏழையை உபத்திரவித்தல் கூடாது என்பது பொருள். ப்ராஹ்மணனுக்கு - துறவிக்கு. பாநம் - பருகுவன; நீர் முதலியன. வருந்தக்கூடாது - "உணவு முதலியனஇல்லா இடத்திலே நான் எப்படிச் சரீரத்தைக் கொண்டு செலுத்துவேன்?" என ஏங்கித் தவித்தலாகாது; பசியினால் பீடித்து வருந்துவோனுக்கு யோகம் கைகூடாமையின் என்க. அவ்வண்ணமே, பகவான் அருளிச்செய்கிறார்:

"யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு ।
யுக்தஸ்வப்நாவபோதஸ்ய யோகோ பவதி து:கஹா ॥"

"சரியான உணவும் விநோதமும், செய்தொழில்களிலே சரியான செய்கையும், சரியான தூக்கமும் விழிப்பும் உடையவனுக்கு யோகம், துன்பத்தைத் துடைப்ப தாகின்றது"—(வே - கீ - சு - கள) (உச)

துறவிக்கு நல்லது செய்வோர்.

உகூ.

யத்ராகயயஶாநவஸ்ரூ ஆயவூதூஸிவஂ ஹயடி ।
அதிஙிக்ஷிவாகாவஂ்நு ஷ ஶ்ரேயாநேதரோ ஜநஃ ॥

---

உகூ.

அவன் நாட்டிலே வாழ்பவனாயின், ஸாதாரண ஜனங்கள் அவனது பெருமையை அறியாது அவனை அவமதிக்குமே யெனின்,— நன்று சொன்னாய்; எங்ஙன மெனில்,

எங்கே (ஒருவன்) பேசாதவனுக்கு நல்லதல்லாததை, அச்சத்தைக் கொடுக்கின்றானோ, அதிகத்தையே செய்யாதவனா(யிருக்கின்றானோ, அங்கே) அவன் நல்லவன்: மற்றை ஜனங்க ளல்லர்.

**நல்லதல்லாததை** - அவமானம் முதலியவற்றை. **அதிகத்தை** - அளவுகடந்ததை, மேலானதை; பிராமணவர்ணத்திற்குரிய உபசாரத்தினும் மேம்பட்ட உபசாரத்தை, ப்ரஹ்மத்தை அறிந்தவனுக்குரிய வழிபாட்டை என்பது பொருள். பேசாதவனாய், தனது மாட்சிமையை வெளிக்காட்டாதவனாய், யாதாயினுமொன்றை உடுத்து, யாதாயினுமொன்றை உண்டு, யாதாயினுமோரிடத்துக் கிடப்பவனாய் ஆத்மஉலகையே காண்பவனாய், மடையன்போல ஊமைபோல குழந்தைபோல பிசாசம் போலத் திரிபவனை முற்றத்துறந்த ஞானியை எவன் பயமுறுத்துகின்றானோ, அவமதிக்கின்றானோ, மற்றுமிவைபோன்றவற்றைச் செய்கின்றானோ, அவன் அந்த ஞானிக்கு நல்லவன்; அவ்வாறே, எவன் அவனுக்கு வழிபாடு செய்வதில்லையோ, அவனும் அத்துறவிக்கு நல்லவனாம். ஆனால், "ப்ரஹ்மமான ஆத்மஸ்வரூபத்தைக் கண்டறிந்தவனாதலால் இவனே ஈச்வரன்; ஈச்வரன் என்னும் பொருள் இவனையல்லது வேறொன்று இல்லை" என அவனை வலம்செய்து வணங்கித் துதித்துத் தொழுவோர் அவனுக்கு நல்லோ ரல்லர். அவ்வாறே,ஸ்மிருதிகள் கூறுகின்றன:

"ஸஂஶாநா வரா௦ ஹாநிஂ யொமயெடிஃ கூ௱௱௱.
தெ யுதஃ । ஜநெநாவஶதொ யொமீ யொமவிஸிஂ வ
விடதி ॥"

"ஜனங்களால் அவமதிக்கப்பெற்ற யோகீ, யோகம்கைகூடுதலைப் பெறுகிறான்; ஏனெனில், நன்மதிப்பானது யோகம்

௩௦.

யொ வாzகுஶ்யஶா நவஸ்) ஹ்ரா தூ நம் நா நுவஸஂஜ்வொசுு ।
ஸ்ருஹ்வஸஂ நொவஹ ந்ரா அா தஜநு்ஂ ஸஂஶதஂ ஸதாழ் ॥

வளர்தற்கு மிகுந்த கெடுதியைச் செய்கின்றது"—(விஷ்ணுபு - உ - கங - சஉ)

"ஸஂமா நாஜ்ஹ்ாஹ்ணொ விதூாஜ உதிஜெத விஷாதிவ ।
சுஶ்ரு தஸெ்யவ வாகாஂக்ஷெதவமா நஸ்) ஸவபுதா ॥
ஸுவஂ ஹ்வஶதஃ ஶெதெ ஸுவஂ வ ஷுதிவுயஂ்தெ । ஸுவஂ வாதி லொகெஸ்மிந் சுவஶந்தா விநஶ்தி ॥"

"ப்ராஹ்மணன் ஞானி விஷத்தைப்போல, நன்மதிப்பை வெறுக்கவேண்டும்; அமிருதத்தைப்போல, அவமதிப்பை எப்பொழுதும் விரும்பவேண்டும்.

அவமதிக்கப்பெற்றவன் ஸுகமாகவன்றோ தூங்குகிறான்: ஸுகமாகவன்றோ விழித்துக்கொண்டிருக்கிறான்: இவ்வுலகிலே ஸுகமாக வாழ்கிறான். அவமதிப்பவன் (ஞானியை அவமதித்த பாவத்தினால்) கெடுகின்றான்"— (மநு - கசூஉ, கசூங)

துறவியான ஞானி தன்மானத்தையும் அவமானத்தையும் பாராட்டாது முற்ற ஒழித்திடவேண்டும் என்பது தேர்ந்த கருத்து. (உக)

**ஞானி அங்கீகரிக்கும் உணவு.**

௩௦.

இனி, அவன் தனக்கு எத்தகையோர் அர்ப்பிக்கும் உணவை ஏற்றுக்கொள்கிறான்? எனில்,— கூறுகிறார்:

எவன் பேசாதவனது ஆத்மாவை வருத்தமாட்டானோ, அல்லது ப்ராஹ்மணனுடைய சோத்தைக் கெடுக்கமாட்டானோ, அவனது அன்னம் ஸாதுக்களுக்கு ஸம்மதமாம்.

பேசாதவனது - எல்லாவற்றையும் ஒடுக்கி, ஆநந்தமான ஆத்மஸ்வரூபநிலையிலே நிற்பவனுடைய. வருத்தமாட்டானோ - தொல்லைப்படுத்தமாட்டானோ. ப்ராஹ்மணனுடைய சோத்தை - துறவியினுடைய ப்ர

௫௧.

நித்யமஜ்ஞாதசர்யா மே இதி மந்யேத ப்ராஹ்மணः ।
ஜ்ஞாதீநாம் து வஸந்மத்யே நைவ விந்தேத கிஞ்சந ॥

---

ஷ்மநிஷ்டைக்கு ஸாதநமான மான்தோல் புஸ்தகம் முதலியவற்றை; அல்லது, பிராமணவருணத்தானுடைய பொருளை. ஸம்மதம் - ஒப்புக் கொள்ளப்பட்டது. (௫௦)

ஞானியின் ஒழுக்கம்.

௫௧.

மீண்டும், அவனது நடக்கையை அருளிச்செய்கிறார் :

ப்ராஹ்மணன் "எனது செய்கை எப்போழுதும் அறியப்படாததாய் (இருக்கக்கடவது)" எனக் கோள்ளவேண்டும். ஞாதிகளது நடுவில் வசிப்பவனே, (ப்ரஹ்மநிஷ்டையைச்) சிறிதும் அடையமாட்டான்.

ப்ராஹ்மணன் - ப்ரஹ்மத்தை அறிந்தவன். ஞாதிகளது - மனைவி, மக்கள் முதலானோருடைய. மனைவி முதலானோரை முற்றத் துறந்து, பிற ரறியாவண்ணம் தனது செய்கையை வெளிப்படுத்தாமல் ஒழுகு வோனுக்கு ஞானநிஷ்டை கைகூடுமேயன்றிப் பிறனுக்கு இல்லை; பிந்தி னவனது சித்தம் பலபடியாகச் சிதறிக்கிடக்குமாதலின் என்க.

அல்லது, வேறுவிதமாய் உரைக்கலாம் :

ப்ராஹ்மணன் ஞாதிகளது நடுவிலே வசிப்பவனாயினும், "அறியப் படாதபோருளிலே எனது நிஷ்டை எப்போழுதும் (இருக்கக்கடவது)" என்று கோள்ளவேண்டும்; (ஞாதிகளுள்) ஒன்றையும் கோள்ளக்கூடாது.

ஞாதிகளுடைய - விஷயங்கள், இந்திரியங்கள், கோபம், மானம் முதலியவற்றினுடைய;

"க்ரோதமாநாதயோ தோஷா விஷயாஶ்சேந்த்ரியாணி ச । ஏத ஏவ ஸம்ப்ரோக்தா ஜ்ஞாதயோ தேஹிநः ஸதா ॥"

"கோபம் மானம் முதலிய குற்றங்களும், விஷயங்களும், இந்

௩௨.

கோ ஹ்யேவமந்தராத்மாநம் ப்ராஹ்மணோ ஹந்துமர்ஹதி ।
நிர்விண்ணபேவம்பூம் ஸுஜயம் ஸவாத்மம்பயவிவஜிதம் ॥

---

திரியங்களும் ஆகிய இவையே - உடம்பொடுநிற்கின்ற உன
க்கு ஞாதிகளாகச் சொல்லப்படுகின்றன ”—

என "ஞாதி" என்னும் சொல் - இந்திரியங்கள் முதலியவற்றைக் குறிக்கின்றது. அறியப்படாத பொருளிலே - கண் செவி மூக்கு முதலியவற்றால் அறிதலாகாத ப்ரஹ்மத்திலே. "கண் முதலியவற்றிற்கு எட்டாததாய், தோற்றமும் கேடுமில்லாத ஞானவடிவாய், பசி முதலியன கலத்தலில்லாததாய், எங்கும் நிறைந்ததாய், உள்ளேயுள்ள ஆநந்தஸ்வரூபமான ப்ரஹ்மத்தினிடத்தே எப்பொழுதும் ஸமாதியாகிய நிஷ்டையைச் செய்யவேண்டும்; மற்று, வெளியிலுள்ள ஸ்தூலஸூக்ஷ்மஉடம்புகள், இந்திரியங்கள், மனைவி, மக்கள், நண்பர் முதலானோரிடத்து 'நான் இளைத்திருக்கின்றேன், பருத்திருக்கின்றேன்: நான் செவிடன், குருடன், ஊமை: நான் பிராமணன், க்ஷத்திரியன்: எனது மனைவி: எனது மக்கள்: எனது வீடு: எனது சொத்து' என இத்தகையவற்றைச் செய்தல் கூடாது" என்பது - ஞானி உறைத்துப்பிடிக்கவேண்டிய நிச்சயம். ஆகவே, அவன் உடம்பு இந்திரியங்கள் முதலியவற்றினது மத்தியிலே வசிப்பவனாய், பார்ப்பவனாய், கேட்பவனாய், தொடுபவனாய், முகர்பவனாய், செல்பவனாய், உண்பவனாய், நினைப்பவனாய் இருந்தாலும், தன்னை அவ்வாறு கொள்ளுதல் கூடாது; தன் ஆத்மாவை உண்பவனாக, செல்பவனாக, மற்றுமித்தன்மையனாகத் துணிதலாகாது: அதாவது - உண்பவன் எவனோ, அவனே அவ்வடிவினனே ஆதமா; நடப்பவன் எவனோ, அவனே அவ்வடிவினனே ஆத்மா; பேசுபவன் எவனோ, அவனே அவ்வடிவினனே ஆத்மா என இவைபோலக்கொள்ளுதல் நேரில்லை. ஆத்மா ஸ்தூல உடம்பிற்கும் ஸூக்ஷ்மஉடம்பிற்கும் ஸாக்ஷியாய் நிற்றலால், அவற்றையாயினும் அவற்றினது தன்மைகளையாயினும் ஆத்மாவாகக் கொள்ளுதல் மயக்கமாம் என்க. (௩௧)

௩௨.

என் இவ்வாறு கொள்ளுதல் மயக்க மாகும்?— கூறுவோம், கேட்பாயாக:

குறியில்லதாய், அசையாததாய், சுத்தமாய், த்வந்துவமெல்லாம் ஒழிந்ததாய், உள்ளேயுள்ள ஆத்மாவை எவன்தான் ப்ராஹ்மணனாயிருந்து இவ்வாறு கொள்ளக்கூடும்? (ஒருவனு மில்லை.)

௧௧.

யொஉ-நூ-ஷா ஸஹெஜா-தூ-ஈஷி ஸ-நூ-ஷா ஷுதிவஷூதெ ।
கிம் தெந ந க்ருதம் பாபம் செளரேணாத்மாபஹாரிணா ॥

---

**குறியில்லதாய்** - ஸ்தூலஸூக்ஷ்மமில்லதாய். **அசையாததாய்** - செய்கை செய்பவன் முதலியன இல்லாததாய். **சுத்தமாய்** - மாசற்றதாய். **த்வந்துவம்** - பசியும் தாகமும், துயரமும் மயக்கமும், குளிரும் வெப்பமும், இன்பமும் துன்பமும் முதலியன. **இவ்வாறு கொள்ளக்கூடும்** - கீழ்க்கூறியவாறு ஸ்தூலஸூக்ஷ்ம உடம்புகளையாயினும், அவற்றினது குணங்களையாயினும் ஆத்மாவாகக்கொள்ளுதலாகும். இவ்வாறு கொண்டால், அங்ஙனம் ப்ராஹ்மணத்தன்மையே இல்லாமற்போம்: துறவி ப்ரஹ்மத்தை அறிந்தவனாகமாட்டான் என்பது பொருள். அப்படியே, மேலே (௩ - ௪0) கூறுவர். (௩௨)

ஆத்மாவை யறியாமையே பெருங்குற்றம்.

௩௩.

மற்று, எவன் உடம்பு முதலியவற்றை ஆத்மாவாகக் கொள்கின்றானோ, அவன் பெரும்பாவியாம் :

**எவன் வேறுவிதமாயுள்ள ஆத்மாவை வேறுவிதமாய்க் கோள்கின்றானோ, அவனால், ஆத்மாவைத் திருடுகின்ற (அந்தக்) கள்ளனால் என்ன பாவந்தான் செய்யப்பட்ட தில்லை.**

ஆத்மா குறியில்லாது, பசி தாகம் முதலிய த்வந்துவ மில்லாது, அஸங்கமாய், அறிவாய், ஆநந்த உண்மையான ப்ரஹ்மமாயிருக்க, "நான் செய்பவன், அநுவிப்பவன், பருத்தவன், இளைத்தவன், இன்பமுடையவன், துன்பமுடையவன்: நான் இவனது மகன், இவனது பேரன்: நான் க்ஷத்திரியன், பிராமணன்" என ஸ்தூலஸூக்ஷ்ம உடம்புகளையும் அவற்றினது தன்மைகளையும் தன் ஆத்மாவாகக்கொள்கின்றவன் ஆத்மாவை யறியாத மூடனும். அவன் ஆத்மசோரன் என்னும் ஆத்மத்திருடனாதலால், மஹாபாதகம்முதலிய எல்லாப் பாவங்களையும் செய்தவனாகிறான். என்பது பொருள். இப்படிப்பட்டவரை - சுருதி (௫ - ௩) "ஆத்மகாதகர் [ஆத்மாவைக் கொல்பவர்]" எனக் கூறுகின்றது. (௩௩)

௪௪.

அஶ்ராந்த: ஸ்யாதநாதாதா ஸம்மதோ நிருபத்ரவ: |
ஶிஷ்டோ ந ஶிஷ்டவத் ஸ ஸ்யாத் ப்ராஹ்மணோ ப்ரஹ்மவித் கவி: ||

௪௫.

யதா ஸ்வம் வாந்தமஶ்நாதி ஶ்வா வை நித்யமபூதயே |
ஏவம் தே வாந்தமஶ்நந்தி ஸ்வவீர்யஸ்யோபபோஜநாத் ||

---

அடக்கமுள்ள ஞானி.

௪௪.

இனி, ஆத்மாவான

ப்ரஹ்மத்தை அறிந்த ப்ராஹ்மணனாகிய கவியானவன் பற்றாதவனாக, சிரமமில்லாதவனாக, நன்கு மதிக்கப்பெற்றவனாக, உபத்திரவம் நீங்கியவனாக, ஆன்றோனாக இருப்பான். (என்றாலும்), அவன் ஆன்றோன் போல இரான்.

கவி - சென்றதையும், நிகழ்வதையும், வருவதையும் அறிபவன். பற்றாதவன் - ஆத்மா அல்லாத உடம்பு முதலியவற்றையும் அவற்றினது தன்மைகளையும் தன் ஆத்மாவாகக் கொள்ளாதவன். ஆதலால், சிரமமில்லாதவன் - பிறப்பு, இறப்பு, பசி, தாகம், பிணி, மூப்பு முதலிய ஸம்ஸாரத்தொல்லையில்லாதவன். உபத்திரவங்கள் - கோபம், உலோபம், மகிழ்ச்சி, மயக்கம் முதலிய ஸங்கடங்கள். ஆன்றோன்போல இரான் - உலகநோக்கிற்கு ஜடன்போல் ஒழுகுவான் என்றபடி. (௪௪)

டம்பமுள்ள ஞானி.

௪௫.

இப்பொழுது, தனது பெருமையையும் கல்வித்திறமையையும் யோக்கியதையையும் முழக்குகின்ற ஞானியை இகழ்ந்துரைக்கின்றார்:

நாய் தான் கக்கியதைத் தின்குமாறுபோல, அவர்கள் தமது வீர்யத்தை அநுபவிப்பதனால், வாந்தி செய்ததைத் தின்கிறார்கள். எப்பொழுதும் (அது அவரது) தீமைக்கேன்க.

எனவே, ஞானி தனது பெருமைமுதலியவற்றை வெளிக்காட்டாது மறைத்துவைப்பவனாய் பேதைபோல் ஒழுகவேண்டும் என்ற

௩௬.

அநா஢்யா மாநுஷெ வித்தெ ஆ஢்யா வெதெஷு யெ த்விஜா: ।
தெ து³ர்த⁴ர்ஷா து³ஷ்ப்ரகம்ப்யா: வித்³யாத்தாந் ப்³ரஹ்மணஸ்தநும் ॥

௩௭.

ஸர்வாந் ஸ்விஷ்டக்ருதோ தே³வாந் வித்³யாத்³ய இஹ கஶ்சந ।
ந ஸமாநோ ப்³ராஹ்மணஸ்ய யஸ்மிந் ப்ரயததே ஸ்வயம் ॥

---

படி யாயிற்று. தமது வீர்யத்தை அநுபவிப்பதனல் - தமது பெருமை முதலியவற்றைச் சாற்றுவதனல் என்பது பொருள். (௩௫)

ஞானியின் மகிமை.

௩௬.

இனி, துறந்த ஞானியைப் புகழ்ந்துரைக்கின்றார் :

எந்த இருபிறப்பாளர் மாநுஷச்செல்வத்திலே தரித்திரரோ, வேதங்களில் ஸம்பந்நரோ, அவர் (பிறரால்) வெல்லவொண்ணுதவர், அசைக்கமுடியாதவர். (ஒருவன்) அவர்களை ப்ரஹ்மஸ்வரூபமாக அறியவேண்டும்.

மாநுஷச்செல்வத்திலே - மனைவி, மக்கள், பணம் முதலியவற்றிலே. வேதங்களில் - வேதங்களால் உணர்த்தப்படுகின்ற அஹிம்ஸை ஸத்தியம் முதலியவற்றில். (௩௬)

௩௭.

இன்னும்,

இங்கே எவனேருவன் நன்றாகவேண்டியதைச் செய்கின்ற எல்லா தேவதைகளையும் அறிவானே, அவன் ப்ராஹ்மணனுக்கு ஸமானனல்லன்; எவன்விஷயத்திலே (அவன்) தானே முயலுகின்றனே, (அவனும் ஸமான னல்லன்).

வேண்டியதைச் செய்கின்ற - (வேள்விசெய்பவான் அநுபவிக்க) விரும்பிய மகளிர் முதலான போகப்பொருள்களைத் தருகின்ற. எவன்விஷயத்திலே - எந்த அக்கி இந்திரன் முதலிய தேவதாவிஷயத்திலே. யாரைக் குறித்து யாகம் செய்யப்படுகின்றதோ, அவரே, அந்த அக்கி இந்திரன் முதலான தேவர்களே ப்ரஹ்மத்தை அறிந்தவனுக்கு நிகரல்லர். ஆகவே, மனிதர்கட்கு ஆடுமாடு எப்படியோ, அப்படி தேவர்கட்கு ஆடுமாடாயுள்ள யஜமானன் ப்ரஹ்மத்தை அறிந்தவனுக்கு ஸமான னல்லன் என்பது ஆச்சரிய மாகாதென்க. (௩௭)

௩௮.

𑌯𑌮𑌪𑍍𑌰𑌯𑌤𑌮𑌾𑌨𑌂 𑌤𑍁 𑌮𑌾𑌨𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸 𑌮𑌾𑌨𑌿𑌤𑌃 ।
𑌨 𑌮𑌾𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑍋 𑌮𑌨𑍍𑌯𑍇𑌤 𑌨𑌾𑌵𑌮𑌾𑌨𑍇𑌽𑌨𑍁𑌸𑌂𑌜𑍍𑌵𑌰𑍇𑌤𑍍 ॥

௩௯, ௪௰.

𑌲𑍋𑌕𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌹𑌿 𑌨𑌿𑌮𑍇𑌷𑍋𑌨𑍍𑌮𑍇𑌷𑌵𑌤𑍍𑌸𑌦𑌾 ।
𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑍋 𑌮𑌾𑌨𑌯𑌨𑍍𑌤𑍀𑌹 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑍇𑌤 𑌮𑌾𑌨𑌿𑌤𑌃 ॥
𑌅𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌦𑍋 𑌮𑍂𑌢𑌾𑌃 𑌲𑍋𑌕𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 ।

---

ஞானியின் ஒழுக்கம்.

௩௮.

*இன்னும், அவனது சமாசாரத்தையே தொடர்ந்து கூறுகிறார் :*

முயலாத எவனை (நல்லோர்கள்) நன்கு மதிக்கிறார்களோ, அவன் நன்குமதிக்கப்பெற்றுத் (தன்னை) நன்குமதிக்கப்படுகிறவனாக எண்ணிக் கொள்ளக்கூடாது ; அவமதிப்பில் எரிச்ச லடையக்கூடாது.

முயலாத - *முயற்சியில்லாத, மௌனமுடைய.* எவனை - *ஞானியை. ஸ்திதப்ரஜ்ஞன் என்னும் புத்திநிலைத்தயோகியின் லக்ஷணங்களை அறிந்த விவேகிகள் "இவன் ப்ரஹ்மத்தை அறிந்தவன்" என்று அவனைப் பூஜிக்குமிடத்து, அவன் "நான் மதிக்கப்பெறுகிறேன்" என இறுமாப்புறுத லாகாது. அப்படியே, அந்த லக்ஷணங்களை யறியாத அவிவேகிகள் "இவன் ஜடன்" என்று அவனை அவமதிக்குமிடத்து, அவன் "நான் அவமதிக்கப்படுகிறேன்" என எரிச்சலடைதலும் ஆகாது என்பது பொருள்.* (௩௮)

௩௯, ௪௰.

*அப்பொழுது அவன் மதிக்கப்பெற்றவழியும் அவமதிக்கப்பெற்ற வழியும், எவ்வாறு கொள்ளுதல் வேண்டும் ? என்பது— கூறுகிறார் :*

"அறிவுடையோர் இங்கே (ப்ரஹ்மத்தை யறிந்தவனை) மதிக்கிறார்கள்" என்பது - எப்பொழுதும் இமைமூடுவதும் திறப்பதும்போல உலக ஸ்வபாவப்போக்கு (என), மதிக்கப்பெற்றவன் கொள்ளவேண்டும்.

"அறத்தை யறியாதவராய், உலக(அறிவு)ம் சாஸ்திர(அறிவு)ம் இல்

ந மாந்யம் மாநயிஷ்ணுஶ்ரீ ரிதி மந்யேத மாநித꞉ ॥

சக.

ந வை மாநஶ்ச மௌநம் ச ஸஹிதௌ வஸத꞉ ஸதா ।
அயம் மாநஸ்ய விஷயோ ஹ்யஸௌ மௌநஸ்ய தத்விது꞉ ॥

---

லாத மூடர்கள் - மதிக்கத்தகுந்தவனை மதியார்" என, மதிக்கப்பெருத வன் கோள்ளவேண்டும்.

ஞானி மதிக்கப்பெற்றவழி - தன்னை மதித்தல் விவேகிகளது இயல்பு எனவும், அவமதிக்கப்பெற்றவழி - தன்னை அவமதித்தல் அவிவேகிகளது இயல்பு எனவும் கொள்ளுதல் வேண்டும் என்பது தேர்ந்த கருத்து. (௩௯, ௪0)

மாநமும், மௌநமும்.

சக.

இனி, மாநமென்பது அஜ்ஞானிக்கு என்றும், மௌநமென்பது ஞானிக்கு என்றும் காட்டுபவராய் அவற்றினது விஷயங்களைப் பகுத்து உணர்த்துகின்றார் :

மாநமும் மௌநமும் ஒருகாலும் (ஓரிடத்தும்) ஒருங்குகூடி வாழா. ஏனெனில், இது மாநத்திற்கு விஷயம் ; அது மௌநத்திற்கு (விஷயம். வேதாந்தத்தை யறிந்தோர் அதனை) அதுவாக அறிகிறார்கள்.

இது - பிரத்தியக்ஷமாகக் காணப்படுகின்ற இப்பிரபஞ்சம். மௌநமாவது - முநியின் செய்கை, யோகியின் ஒழுக்கம் ; அதற்கு - மௌநத்திற்கு. அதுவாக - ப்ரஹ்மமாக; "அது" என்பது ப்ரஹ்மத்தின் பெயராதலின். இதனை,

"தத்த்வமஸி"

"நீ அதுவாக இருக்கிறாய்"—(சா - சூ - ௬ - ௪)

"ஓம் தத்ஸதிதி நிர்தேஶோ ப்ரஹ்மணஸ்த்ரிவித꞉ ஸ்ம்ருத꞉ ॥"

"ஓம் தத் ஸத் என்பது - ப்ரஹ்மத்தின் மூன்றுவிதமான பெயராகக் கொள்ளப்பட்டிருக்கின்றது"—(வே-கீ-கள-உ௩).

என்னும் சுருதிஸ்மிருதிகளால் அறிக. இவ்வுலகம் மாநத்திற்கு விஷயமாம் ; ப்ரஹ்மமோ மௌநத்திற்கு விஷயமாம். ஆகவே, மாநத்தால் ஸம்ஸாரத்தையும், மௌநத்தால் ப்ரஹ்மத்தையும் அடைதலாகும் என்றவாறாயிற்று. (சக)

சஉ.

ஸ்ரீஹ்ரீ ஊாநாயஂவஂவாவாஜஂ ஹா வாவி வாரிவநீதீ।
ஸ்ரீஹ்ரீ ஹுஉஹுஹா ஸ்ரீஹ்ரீ ஹுஜூாஹிநெ க்ஷத்ரிய॥

சஙூ.

அாஸாணி ஸஜூ வஷஞி ஸஜஃ

வஹுஹுகாஸாணி ஊாஸாவாணி।

---

சஉ.

மாநத்திற்கு விஷயமான இவ்வுலகத்தின் வாழ்க்கையிலே, ஸம்ஸாரத்திலே உறுதியான நன்மை இல்லை :

ஏனெனில், மாநவிஷயத்தின் வாழ்க்கையினால் சம்பத்து (உண்டாகின்றது) ; அதுவோ இடையூறு, க்ஷத்திரிய! ப்ரஹ்மத்தினுடைய சம்பத்தோ ஞானமில்லாதவனால் அடைதற்கு மிக்க அரிதாம்.

மாநவிஷயத்தின் - உலகத்தின். சம்பத்து - பணம், வீடு, மனைவி முதலியன. ப்ரஹ்மத்தினுடைய சம்பத்து-ப்ராஹ்மாநந்தமாகிய லக்ஷ்மி. இம்மை மறுமைக்கான செய்கைகளைச் செய்பவனுக்கு பணம் வீடு முதலிய சம்பத்துக் கூடிவருகின்றது. என்றாலும், அந்த சம்பத்து நல்ல வழிக்கு, மோக்ஷமார்க்கத்திற்கு விரோதியாம் ; அதனால் மனிதன் மயங்கிப்போய் மகளிர் முதலான விஷயங்களுள் மூழ்கிவிடுகின்றானாதலின். இவ்வாறாக அறிவை இழந்தோனுக்கு இது கிட்டக்கிடைப்பதும் மிக்க அரிதாம்.—எது ?— ப்ரஹ்மாநந்த லக்ஷ்மி. அவ்வாறே, சுருதி கூறுகின்றது :

" ஶ்ரவணாயாவி வஹுஹியொ ந லஹ்யஃ।"
"கேட்பதற்குங்கூட எது அனேகர்களால் அடையப்படாததோ" (கட - க - உ - எ) (சஉ)

ப்ரஹ்மாநந்தலக்ஷ்மி வந்துநுழையும் வழிகள்.

சஙூ.

இனி, அந்த ப்ரஹ்மாநந்தத்தைப் பெறுதற்கான வழிகள் யாவை? எனின்,— அருளிச்செய்கிறார் :

நல்லோர்களானவர், அநுஷ்டிப்பதற்கு அரியவையான பலவகை

ஸத்யாஜ்ஜவே ஹ்ரீர்தமச் சௌசவித்யா:
ஷண்மாநமோஹப்ரதிபக்ஷகாநி ॥

இதி ஸ்ரீஸநத்ஸுஜாதீயே த்விதீயோऽத்யாய: ॥

---

வழிகளை நன்றாய்ச் சொல்லுகிறார்கள் :-- ஸத்தியம், நேர்மை, நாணம், அடக்கம், சுத்தம், ஞானம் (என்பன - அவை. இந்த) ஆறும் மாநமய க்கங்கட்கு இடறுகளாம்.

ஸ்ரீமத் ஸநத்ஸுஜாதீயத்தில் இரண்டாம் அத்தியாயம் முற்றும்.

நாணம் - *ஆகாதன செய்வதில் மனம்மடங்குதல்.* ஞானம் - *ப்ரஹ்மவித்யை.* (சரு.)

---

# இரண்டாம் அத்தியாயம்.

---

## பதவுரை.

க.

| | |
|---|---|
| வைசம்பாயந: | வைசம்பாயனர் |
| உவாச | சொன்னார் : |
| தத: | பின்பு |
| மநீஷீ | அறிவுள்ள |
| ராஜா | அரசனும் |
| த்ருதராஷ்ட்ர: | திருதராஷ்டிரன் |
| விதுரேரிதம் | விதுரனால் கூறப்பட்ட |
| தத் | அந்த |
| வாக்யம் | வார்த்தையை |
| ஸம்பூஜ்ய | நன்குமதித்து, |
| மஹாத்மா | பரமாத்மாவாக [ப்ரஹ்மமாக] |
| ஆகாங்க்ஷந் | ஆகவிரும்பியவனாய், |
| ரஹிதே | தனிமையிலே |
| ஸநத்ஸுஜாதம் | ஸநத்குமாரரை |
| பராம் | மேலான |
| புத்திம் | ஞானத்தை |
| பப்ரச்ச | வினவினன். |

---

உ.

| | |
|---|---|
| த்ருதராஷ்ட்ர: | திருதராஷ்டிரன் |
| உவாச | சொன்னான் : |
| ஸநத்ஸுஜாத | ஸநத்ஸுஜாதரே ! |
| ம்ருத்யு: ஹி | மிருத்தியுவானது |

| | |
|---|---|
| ந சாஸ்தி | இல்லை |
| இதி | என்னும் |
| தவ | உமது |
| உபதேஸம் | உபதேசத்தை |
| ஸ்ருணோமி | கேட்கின்றேன் |
| (இதி) யத் | (என்பது) எதுவோ, |
| (தத்) இதம் | (அந்த) இது |
| (ஸத்யம் கிம்) | (உண்மையா ?) |
| தேவாஸுரா: | தேவர்களும் அஸுரர்களும் |
| அம்ருத்யவே | சாகாமைக்காக |
| ப்ரஹ்மசர்யம் | ப்ரஹ்மசர்யத்தை |
| ஆசேரு: | அநுஷ்டித்தார்கள் ; |
| தத் | அது |
| (ஸத்யம் கிம்) | (உண்மையா ?) |
| கதரத் நு | இரண்டினுள் எதுதான் |
| ஸத்யம் | உண்மையாய் (உளது) ? |

---

௩.

| | |
|---|---|
| ஸ்ரீஸநத்ஸுஜாத: | ஸ்ரீஸநத்ஸுஜாதர் |
| உவாச | சொன்னார் : |
| கேசித் | சிலர்,— |
| அம்ருத்யு: | சாகாமை |
| கர்மணா | கர்மத்தால் |
| (பவதி இதி) | (ஆகின்றது எனவும்), |
| அபரே | மற்றையோர்,— |
| ம்ருத்யு: | மிருத்தியுவானது |

| | |
|---|---|
| 𑌨 𑌅𑌸𑍍𑌤𑌿 | இல்லை |
| 𑌇𑌤𑌿 𑌚 | எனவும் |
| (𑌆𑌹𑍁𑌃) | (கூறுகிறார்கள்), |
| 𑌰𑌾𑌜𑌨𑍍 | அரசனே ! |
| 𑌏𑌤𑌤𑍍 | இதனை |
| 𑌯𑌥𑌾 | உள்ளபடி |
| 𑌬𑍍𑌰𑍁𑌵𑌤𑌃 | சொல்லுகின்ற |
| 𑌮𑍇 | எனது |
| (𑌵𑌾𑌕𑍍𑌯𑌮𑍍) | (வார்த்தையை) |
| 𑌶𑍃𑌣𑍁 | கேள் ; |
| 𑌮𑌾 𑌵𑌿𑌶𑌂𑌕𑌿𑌥𑌾𑌃 | ஸந்தேகப்படாதே. |

---

௪.

| | |
|---|---|
| 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯 | க்ஷத்திரிய ! |
| 𑌉𑌭𑍇 | இரண்டும் |
| 𑌸𑌤𑍍𑌯𑍇 | சரியானவையாய் |
| 𑌆𑌦𑍍𑌯𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇 | முதலிலிருந்து தலைப்பட்டவை ; |
| 𑌮𑍋𑌹𑌃 | மயக்குமென்பது |
| 𑌯𑌃 | எதுவோ, |
| (𑌸𑌃) | (அது) |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 | மிருத்தியுவாக |
| 𑌕𑌵𑍀𑌨𑌾𑌮𑍍 | கவிகளுக்கு |
| 𑌸𑌂𑌮𑌤𑌃 | சம்மதம். |
| 𑌅𑌹𑌂 𑌵𑍈 | நானோ |
| 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌮𑍍 | தடுமாற்றத்தை |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍍 | மிருத்தியுவாக |

| | |
|---|---|
| 𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿 | கூறுகிறேன் ; |
| 𑌸𑌦𑌾 𑌅𑌵𑍍𑌯𑌯𑌤𑍍𑌵𑌮𑍍 | எப்பொழுதும் தடுமாற்றமின்மையை |
| 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑍍 | சாகாமையாக |
| 𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿 | கூறுகிறேன். |

---

௫.

| | |
|---|---|
| 𑌅𑌸𑍁𑌰𑌾𑌃 | அஸுரர்கள் |
| 𑌵𑍍𑌯𑌯𑌾𑌤𑍍 𑌏𑌵 | தடுமாற்றத்தினலன்றே |
| 𑌪𑌰𑌾𑌭𑌵𑌨𑍍 | தோற்றூர்கள் ; |
| 𑌸𑍁𑌰𑌾𑌃 𑌚 | ஸுரர்களோ |
| 𑌅𑌵𑍍𑌯𑌯𑌾𑌤𑍍 | தடுமாற்றமின்மையினல் |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃 | ப்ராஹ்மமாணர்கள். |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 | மிருத்தியுவானது |
| 𑌜𑌨𑍍𑌤𑍂𑌨𑍍 | பிராணிகளை |
| 𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌃 𑌇𑌵 | புலிபோல |
| 𑌨 𑌏𑌵 𑌅𑌤𑍍𑌤𑌿 | தின்கின்றதில்லை ; |
| 𑌹𑌿 | ஏனெனில் |
| 𑌅𑌸𑍍𑌯 | அதற்கு |
| 𑌰𑍂𑌪𑌮𑍍 𑌅𑌪𑌿 | உருவமே |
| 𑌨 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 | காணப்படுகின்றதில்லை. |

---

௬.

| | |
|---|---|
| 𑌅𑌤𑌃 | ஆனல் |
| 𑌏𑌕𑍇 | சிலர் |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍍 | மிருத்தியுவை |

| | |
|---|---|
| 𑌅𑌤𑌃 | இதனினும் |
| 𑌅𑌨𑍍𑌯𑌮𑍍 | வேறாக |
| 𑌯𑌮𑌮𑍍 | யமனாக |
| 𑌗𑍁𑌹𑌾𑌵𑌾𑌸𑌮𑍍 | மனத்தில் வசிப்பவனாக |
| 𑌅𑌮𑍃𑌤𑌮𑍍 | சாகாதவனாக |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌲𑌯𑌮𑍍 | ப்ரஹ்மத்திலே அமர்ந்தவனாக |
| 𑌆𑌹𑍁𑌃 | கூறுகிறார்கள் ; |
| 𑌦𑍇𑌵𑌃 | (அக்)கடவுள் |
| 𑌪𑌿𑌤𑍃𑌲𑍋𑌕𑍇 | பிதிருலோகத்திலே |
| 𑌰𑌾𑌜𑍍𑌯𑌮𑍍 | ராஜ்யத்தை |
| 𑌅𑌨𑍁𑌶𑌾𑌸𑍍𑌤𑌿 | ஆளுகிறான் ; |
| 𑌶𑌿𑌵𑌾𑌨𑌾𑌮𑍍 | (அவன்) நல்லோர்களுக்கு |
| 𑌶𑌿𑌵𑌃 | நல்லவனாய், |
| 𑌅𑌶𑌿𑌵𑌾𑌨𑌾𑌮𑍍 | தீயோர்களுக்கு |
| 𑌅𑌶𑌿𑌵𑌃 | தீயவனாய் (இருக்கிறான்). |

---

எ.

| | |
|---|---|
| 𑌨𑌰𑌾𑌣𑌾𑌮𑍍 | மனிதர்கட்கு |
| 𑌏𑌷𑌃 | இந்த |
| 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌃 | தடுமாற்றமாகிய |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 | மிருத்தியுவானது |
| 𑌕𑌾𑌮𑌾𑌤𑍍 | காமத்தினின்று |
| 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 | கோபமாகவும் |
| 𑌮𑍋𑌹𑌰𑍂𑌪𑌃 𑌚 | மயக்கவடிவமாகவும் |
| 𑌨𑌿𑌸𑍍𑌸𑌰𑌤𑍇 | வெளிவருகின்றது. |
| 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 | ஒருவன் |

| | |
|---|---|
| அஹம்மமேதி | நான் என்னும் வடிவையடைந்த |
| (அஜ்ஞாநாத்) ஏவ | (அஜ்ஞாநத்தினாலே)யே |
| விபரீதமார்காந் | விபரீதவழிகளை |
| சரந்தம் | திரிபவனாய், |
| ஆத்மந: | ஆத்மாவினுடைய |
| யோகம் | யோகத்தை |
| ந உபைதி | அடைகிறானில்லை. |

---

அ.

| | |
|---|---|
| தே | அவர்கள் |
| மோஹிதா: | மயக்கப்பட்டவராய் |
| தத்வசே | அதனது வசத்திலே |
| வர்த்தமாநா: | இருக்கின்றவராய் |
| இத: | இங்கிருந்து |
| ம்ருதா: | இறந்துபோனவராய் |
| தத: | அங்கிருந்து |
| நிவ்ருத்தா: | திரும்பி |
| பதந்தி | விழுகிறார்கள். |
| தத: | பின்பு |
| தேவா: | இந்திரியங்கள் |
| தம் | அவனை |
| கர்மாநுரூபம் பரிவேஷ்டயந்தி | (கர்மத்திற்குத்) தகச் சுற்றிச்சூழ்கின்றன. |
| அத: | ஆதலால் |
| மரணாத் | (ஒருவன்) மரணத்தினின்றும் |
| ம்ருத்யும் | மரணத்தை |
| ஆப்நோதி | அடைகிறான். |

---

௧௧.

| | |
|---|---|
| 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌾𑌨𑍁𑌰𑌾𑌗𑌾𑌃 | கர்மப்பயனிலே ஆசையுள்ளவர்கள் |
| 𑌕𑌰𑍍𑌮𑍋𑌦𑌯𑍇 (𑌸𑌤𑌿) | கர்மமுண்டாகும்(பொழுது) |
| 𑌤𑌤𑍍𑌰 | அதிலே |
| 𑌅𑌨𑍁𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 | பின்செல்லுகிறூர்கள் ; |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍍 | மிருத்தியுவை |
| 𑌨 𑌤𑌰𑌨𑍍𑌤𑌿 | கடக்கிறூர்களில்லை. |
| 𑌦𑍇𑌹𑍀 | தேகத்தையுடையவன் |
| 𑌸𑌦𑌰𑍍𑌥𑌯𑍋𑌗𑌾𑌨𑌵𑌗𑌮𑌾𑌤𑍍 | உண்மைப்பொருளைக் கூடுதலை அறியாமையினுல் |
| 𑌸𑌮𑌨𑍍𑌤𑌾𑌤𑍍 | எப்புறத்தும் |
| 𑌭𑍋𑌗𑌯𑍋𑌗𑍇𑌨 | போகப்பற்றோடு |
| 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 | செல்லுகிறுன். |

---

௧௨.

| | |
|---|---|
| 𑌤𑌦𑍍 𑌵𑍈 | அதுவோ |
| 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 | இந்திரியங்கட்கு |
| 𑌮𑌹𑌾𑌮𑍋𑌹𑌨𑌂 | பெருமயக்க(மாம்). |
| 𑌅𑌸𑍍𑌯 | இவனுக்கு |
| 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌯𑍋𑌗𑍇 | பொய்ப்பொருள்களுடைய சம்பந்தத்தால் |
| 𑌗𑌤𑌿𑌃 | (ஸம்ஸார)நிலையானது |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 | நித்தியமாக |
| (𑌭𑌵𑌤𑌿) 𑌹𑌿 | (இருக்கின்றது). |
| 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌯𑍋𑌗𑌾𑌭𑌿𑌹𑌤𑌾𑌨𑍍𑌤-𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 | (இவன்) பொய்ப்பொருள்களுடைய சம்பந்தத்தால் ஆத்மா தாக்கப்பட்டவனுய் |

| | |
|---|---|
| விஷயாந் | விஷயங்களை |
| ஸ்மரந் | கருதுகின்றவனாய் |
| ஸர்வத: | எப்புறத்தும் |
| உபாஸ்தே | (அவற்றையே) தொழுகிறான். |

---

கக.

| | |
|---|---|
| த்யாநமேவ | (விஷயங்களைக்) கருதுதலே |
| ப்ரதமம் | முதலில் |
| ஏநம் | இவனை |
| ஹந்தி ச | கெடுக்கின்றது. |
| பஶ்சாத் | பின்பு |
| காமக்ரோதௌ ச | காமமும் கோபமும் |
| ஏநம் | இவனை |
| ஆக்ருஹ்ய | பிடித்து |
| (ஹத:) ச | (கெடுக்கின்றன). |
| ஏதே | இவை |
| பாலாந் | சிறுவர்களை |
| ம்ருத்யவே | மரணத்திற்கு |
| ப்ராபயந்தி | செலுத்துகின்றன. |
| தீராஸ்து | தீரர்களோ |
| தைர்யேண | தைரியத்தினால் |
| ம்ருத்யும் | மரணத்தை |
| தரந்தி | கடக்கிறார்கள். |

---

கஉ.

| | |
|---|---|
| ய: | எவன் |
| உத்பதிஷ்ணூந் | எழும்பி விழும்தன்மையுள்ள விஷயங்களை |

| | |
|---|---|
| 𑌅𑌭𑌿𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍 | (நிலையில்லவையாக) நினைக்கின்றவ றாய் |
| 𑌨𑌿𑌹𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌶𑍁 | விட்டிடுவானோ, |
| 𑌅𑌨𑌾𑌦𑌰𑍇𑌣 | அசட்டையினால் |
| 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍁𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 | (அவற்றை மறுபடியும்) நினையாத |
| 𑌯𑌃 | எந்த |
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 | ஞானி |
| 𑌏𑌵𑌂 𑌹𑌿 | இவ்வாறாக |
| 𑌇𑌹 | இங்கே |
| 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 | காமங்களை |
| 𑌅𑌭𑌿𑌹𑌂𑌤𑌿 | தொலைக்கின்றானோ, |
| 𑌸𑌃 𑌵𑍈 | அவன் |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 𑌇𑌵 | மிருத்தியுபோல |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | ஆகி |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 | மிருத்தியுவை |
| 𑌅𑌤𑍍𑌤𑌿 | விழுங்குகிறான். |

கரு.

| | |
|---|---|
| 𑌕𑌾𑌮𑌾𑌨𑍁𑌸𑌾𑌰𑍀 | காமங்களை அநுஸரிக்கின்ற |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | மனிதன் |
| 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌅𑌨𑍁 | காமங்களைத் தொடர்ந்து |
| 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 | அழிகின்றான். |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | மனிதன் |
| 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 | காமங்களை |
| 𑌵𑍍𑌯𑍁𑌦𑌸𑍍𑌯 | தள்ளி |
| 𑌯𑌤𑍍 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 | யாதோர் |
| 𑌰𑌜𑌃 | அழுக்கையும் |
| 𑌧𑍂𑌨𑍁𑌤𑍇 | உதறுகின்றான். |

௧௪.

| | |
|---|---|
| 𑌜𑌨𑍍𑌤𑍂𑌨𑌾𑌮𑍍 | பிராணிகளுடைய |
| 𑌅𑌸𑍍𑌯 | இந்த |
| 𑌦𑍇𑌹𑌃 | உடலானது |
| 𑌅𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌃 | பிரகாசமில்லதாக |
| 𑌨𑌰𑌕𑌃 | நரகமாக |
| 𑌪𑍍𑌰𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 | காணப்படுகின்றது. |
| 𑌮𑍃𑌗𑍍𑌯𑍃𑌜𑌾𑌃 𑌵𑌨𑌵 | (ஜனங்கள் விஷயங்களை) அவாவிக் கொண்டே |
| 𑌶𑍍𑌵𑌭𑍍𑌰𑌂 | பள்ளத்தை |
| 𑌉𑌦𑍍𑌗𑍍𑌰𑍀𑌵𑌾𑌃 | எதிர்நோக்குபவராகி |
| 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌃 | செல்பவராய் |
| 𑌧𑌾𑌵𑌂𑌤𑌿 | ஓடுகிறுர்கள். |

---

௧௫.

| | |
|---|---|
| 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯 | க்ஷத்திரிய ! |
| 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 | (விஷயங்களினும்) வேருன |
| 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 | ஒன்றையும் |
| 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌾𑌨𑌃 | நினையாதவன் (எவனே, அவன்) |
| 𑌨 𑌅𑌧𑍀𑌯𑌤𑍇 | (வேதாந்த நூல்களைப்) படிக்கிறுனில்லை. |
| 𑌅𑌸𑍍𑌯 | இவனது |
| (𑌦𑍇𑌹𑌃) | (சரீரம்) |
| 𑌤𑌾𑌰𑍍𑌣𑌃 | வைக்கோலினாலான |
| 𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌃 𑌇𑌵 | புலிபோல |
| (𑌅𑌸𑍍𑌤𑌿) | (இருக்கின்றது). |
| 𑌤𑍍𑌵𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑍇 | உனது சரீரத்தினுள் |

| | |
|---|---|
| 𑌯𑌃 | எவன் |
| 𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 | கோபத்தினல் |
| 𑌲𑍋𑌭𑌾𑌤𑍍 | லோபத்தினல் |
| 𑌮𑍋𑌹𑌭𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 | மயக்கத்தோடும் பயத்தோடும் கூடிய உள்ளேயுள்ள ஆத்மாவாய் |
| (𑌵𑌰𑍍𑌤𑌤𑍇) | (இருக்கின்றானோ), |
| 𑌸𑌃 𑌏𑌷𑌃 𑌵𑍈 | அந்த இவனே |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 | மிருத்தியு(வாம்). |

௪௬.

| | |
|---|---|
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 | (ஒருவன்) மிருத்தியுவை |
| 𑌏𑌵𑌂 | இவ்வாறு |
| 𑌜𑌾𑌤𑌂 | உண்டாகின்றதாக |
| 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 | அறிந்து |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 | ஞானத்திலே |
| 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍 | நிற்கின்றவனைப் |
| 𑌇𑌹 | இங்கே |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌃 | மிருத்தியுவினின்றும் |
| 𑌨 𑌬𑌿𑌭𑍇𑌤𑌿 | பயப்படுகிறானில்லை. |
| 𑌯𑌥𑌾 | எப்படி |
| 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌃 | மரிக்கக்கூடியது [சரீரம்] |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌃 | யமனுடைய |
| 𑌵𑌿𑌷𑌯𑌂 | கோசரத்தை |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 | அடைந்து |
| (𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿) | (அழிகின்றதோ), |
| (𑌤𑌥𑌾) | (அப்படி) |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 | (அஜ்ஞான)மிருத்தியுவானது |

| | |
|---|---|
| தஸ்ய | அவனுடைய |
| விஷயே | கோசரத்திலே |
| விநஶ்யதே | அழிந்திடுகின்றது. |

---

கஎ.

| | |
|---|---|
| த்ருதராஷ்ட்ர: | திருதராஷ்டிரன் |
| உவாச | சொன்னான் : |
| புண்யகாந் | (வேதங்கள்) மிகப்புண்ணியமான |
| ஸநாதநாந் | என்றுமுள்ள |
| யாந் | எந்த |
| ஸாதுலோகாந் ஏவ | நல்லலோகங்களையே |
| த்விஜாதீநாம் | இருபிறப்பாளர்க்கு |
| இஜ்யயா | யஜ்ஞத்தினால் |
| ஆஹு: | கூறுகின்றனவோ, |
| தேஷாம் | அவற்றிற்கு |
| இஹ | இங்கே |
| பரார்த்தம் | மேலான புருஷார்த்தத்தன்மையை |
| வேதா: | வேதங்கள் |
| கதயந்தி | கூறுகின்றன. |
| வித்வாந் | ஞானியானவன் |
| ஏதத் | இந்த |
| கர்ம | கர்மத்தை |
| ந வ்யேதி | அடைகிறானில்லை ; |
| கதம் நு | (என்ற இது) எப்படி ? |

---

கஅ.

| | |
|---|---|
| ஸநத்ஸுஜாத: | ஸநத்ஸுஜாதர் |
| உவாச | சொன்னார் : |
| அவித்வாந் | அஜ்ஞானி |
| ஏவம் | இவ்வாறு |
| தத்ர | அதிலே |
| உபயாதி [illegible] | செல்லுகிறான். |
| ததா | அப்படியே |
| வேதா: | வேதங்கள் |
| அர்த்தஜாதம் ச | பயன்களையெல்லாம் |
| வதந்தி | கூறுகின்றன. |
| ஸ: | அவன் |
| இஹ | இதிலே |
| ந ஶ்ரயாதி | செல்கிறானில்லை ; |
| மார்கேண | வழியினால் |
| பராத்மா | பரமாத்மாவாகி |
| பரம் | பரம்பொருளை |
| ப்ரயாதி | அடைகிறான் ; |
| அமார்காந் | வழியில்லாதவற்றை |
| நிஹந்தி | தொலைக்கிறான். |

---

ககூ.

| | |
|---|---|
| த்ருதராஷ்ட்ர: | திருதராஷ்டிரன் |
| உவாச | சொன்னான் : |
| ஸ: | அது |
| அநுக்ரமேண | முறையே |

| | |
|---|---|
| 𑌏𑌤𑌚𑍍𑌚𑍇𑌤𑍍 | இந்த |
| 𑌸𑌰𑍍𑌵𑌂 | எல்லாமாக |
| (𑌭𑌵𑌤𑌿) 𑌵𑍇𑌤𑍍𑌸𑌿 | இருந்தால், |
| 𑌅𑌜𑌂 | பிறவாத |
| 𑌪𑍁𑌰𑌾𑌣𑌂 | பழைமையான |
| 𑌤𑌤𑍍 | அதனை |
| (𑌯𑌃) | (எவன்) |
| 𑌨𑌿𑌯𑌚𑍍𑌛𑌤𑌿 | ஏவுகின்றானோ, |
| 𑌅𑌸𑍍𑌯 | அவன் |
| 𑌕𑌃 | யார் ? |
| 𑌅𑌸𑍍𑌯 | அதற்கு |
| 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌾 | செய்யவேண்டியதுதான் |
| 𑌕𑌿𑌂 | என்ன ? |
| 𑌅𑌥 𑌵𑌾 | அல்லது |
| 𑌅𑌸𑍁𑌖𑌂 𑌚 | தீங்குதான் |
| (𑌕𑌿𑌂) | (என்ன ?) |
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌨𑍍 | அறிந்தவரே ! |
| 𑌤𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌂 | அதனை யெல்லாம் |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌯𑌥𑌾𑌵𑌤𑍍 | உள்ளபடி |
| 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 | சொல்லுக. |

---

உ௦.

| | |
|---|---|
| 𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑌃 | ஸநத்ஸுஜாதர் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னார் : |
| 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 | இந்த |
| 𑌵𑌿𑌶𑍇𑌷𑌯𑍋𑌗𑍇 | வேற்றுமையுடைமையிலே |

| | |
|---|---|
| 𑌮𑌹𑌾𑌨𑍍 | பெரிய |
| 𑌦𑍋𑌷𑌃 | தீங்கு (வருகின்றது). |
| (𑌜𑍀𑌵𑌾𑌦𑌯𑌃) | (ஜீவன் முதலானோர்) |
| 𑌅𑌨𑌾𑌦𑌿𑌯𑍋𑌗𑍇𑌨 | ஆதியில்லா [மாயா] ஸம்பந்தத்தால் |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌃 | நித்யராக |
| 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌹𑌿 | இருக்கின்றார்கள். |
| 𑌤𑌥𑌾 | அவ்வாறாக |
| 𑌅𑌸𑍍𑌯 | இதனது |
| 𑌆𑌧𑌿𑌕𑍍𑌯𑌂 | பெருமை |
| 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 | சிறிதும் |
| 𑌨 𑌅𑌪𑍈𑌤𑌿 | குறைகின்றதில்லை. |
| 𑌪𑍁𑌂𑌸𑌃 | புருஷனுடைய [ப்ரஹ்மத்தினுடைய] |
| 𑌅𑌨𑌾𑌦𑌿𑌯𑍋𑌗𑍇𑌨 | அநாதி [மாயா] ஸம்பந்தத்தால் |
| 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 | (ஜீவர்கள் பற்பலராக) இருக்கின்றார்கள். |

௨௧.

| | |
|---|---|
| 𑌏𑌤𑌤𑍍 | இது |
| 𑌯𑌤𑍍 | எதுவாய் (இருக்கின்றதோ), |
| 𑌸𑌃 | அது |
| 𑌅𑌜𑌾 | மெய்ப்பொருளாகிய |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 | நித்யமான |
| 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 | பகவானாக (இருக்கின்றது); |
| 𑌵𑌿𑌕𑌾𑌰𑌯𑍋𑌗𑍇𑌨 | (அவன்) மாயா ஸம்பந்தத்தினால் |
| 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 | ஜகத்தை |

| | |
|---|---|
| 𑌕𑌰𑍋𑌤𑌿 | படைக்கின்றான். |
| 𑌤𑌥𑌾 𑌚 | அப்படியே |
| 𑌤𑌚𑍍𑌛𑌕𑍍𑌤𑌿𑌃 | அவனது சக்தி |
| 𑌇𑌤𑌿 | என |
| 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌹 | எண்ணுகிறேன். |
| 𑌵𑍇𑌦𑌾𑌃 | வேதங்கள் |
| 𑌤𑌦𑌰𑍍𑌥𑌯𑍋𑌗𑍇 | அப்பொருளினுடைய ஸம்பந்தத்திலே |
| 𑌸𑌨𑍍𑌤𑌿 𑌚 | (பிரமாணமாய்) உள்ளன. |

---

௨௨.

| | |
|---|---|
| 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌃 | திருதராஷ்டிரன் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னான் : |
| 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | எதனால் |
| 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍 | சிலர் |
| 𑌇𑌹 | இங்கே |
| 𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 | தர்மங்களை |
| 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 | அநுஷ்டிக்கிறார்களோ, |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍 | சிலர் |
| 𑌇𑌹 | இங்கே |
| 𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 | அதர்மங்களை |
| 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 | அநுஷ்டிக்கிறார்களோ, |
| (𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍) | (அதனால்) |
| 𑌧𑌰𑍍𑌮𑌃 | தர்மமானது |
| 𑌪𑌾𑌪𑍇𑌨 | பாவத்தினால் |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 𑌵𑌾 | எதிர்த்தடிக்கப்படுகின்றதா ? |

| | |
|---|---|
| 𑌉𑌤𑌾𑌹𑍋 | அல்லது |
| 𑌧𑌰𑍍𑌮𑌃 | தர்மம் |
| 𑌪𑌾𑌪𑌂 | பாவத்தை |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌹𑌂𑌤𑌿 (𑌕𑌿𑌂) | எதிர்த்தடிக்கின்றதா ? |

---

| | |
|---|---|
| 𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑌃 | ஸநத்ஸுஜாதர் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னார் : |
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 | ஞானி |
| 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 | அதிலே |
| 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌵𑌾 𑌅𑌪𑌿 | நின்றவனாயினும் |
| 𑌉𑌭𑌯𑌂 | இரண்டையும் |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 | ஞானத்தால் |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 | தவறாது |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌹𑌂𑌤𑌿 𑌹𑌿 | அடித்துவிடுகிறான் ; |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 | (இது) பிரசித்தமானது. |
| 𑌦𑍇𑌹𑍀 | சரீரத்தையுடையவன் |
| 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 (𑌅𑌨𑍍𑌯𑌾𑌥𑌾) 𑌅𑌯𑌂 | வேறுவிதமாயிருந்தால், |
| 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 | புண்ணியத்தை |
| 𑌉𑌪𑍈𑌤𑌿 | அடைகிறான் ; |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌆𑌗𑌤𑌂 | வந்த |
| 𑌪𑌾𑌪𑌂 | பாவத்தை |
| 𑌉𑌪𑍈𑌤𑌿 | அடைகிறான் ; |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 | (இது) பிரசித்தமானது. |

---

௨௪.

| | |
|---|---|
| 𑌮𑌤𑍍𑌵𑌾 | (பரலோகத்திற்குப்)போய், |
| 𑌸𑍁𑌖𑌸𑍍𑌯 | நல்வினையினுடைய |
| 𑌪𑌾𑌪𑌸𑍍𑌯 | தீவினையினுடைய |
| 𑌅𑌸𑍍𑌥𑌿𑌰𑌂 | நிலையில்லாத |
| 𑌉𑌭𑌯𑌂 | இரண்டும் |
| 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 | கர்மத்தால் |
| 𑌭𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 | அநுபவிக்கப்படுகின்றன. |
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 | தெரிந்த |
| 𑌸𑌃 𑌚 𑌕𑌰𑍍𑌮𑍀 | அவன் |
| 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 | கர்மத்தோடு (கூடியவனாய்) |
| 𑌧𑌰𑍍𑌮𑍇𑌣 | தர்மத்தினால் |
| 𑌪𑌾𑌪𑌂 | பாவத்தை |
| 𑌇𑌹 | இங்கே |
| 𑌪𑍍𑌰𑌣𑍁𑌦𑌤𑌿 | போக்கிக்கொள்கிறான். |
| 𑌤𑌸𑍍𑌯 | அவனுடைய |
| 𑌧𑌰𑍍𑌮𑌃 | தர்மம் |
| 𑌬𑌲𑍀𑌯𑌾𑌨𑍍 | வலியது |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 | அறிந்துகொள். |

---

௨௫, ௨௬.

| | |
|---|---|
| 𑌬𑌲𑌵𑌤𑌾𑌂 | வலிமையுடையவர்க்கு |
| 𑌬𑌲𑍇 𑌇𑌵 | வலிமையிலேபோல, |
| 𑌯𑍇𑌷𑌾𑌂 | எவர் ட்கு |
| 𑌧𑌰𑍍𑌮𑍇𑌷𑍁 | தர்மங்களிலே |
| 𑌵𑌿𑌸𑍍𑌪𑌰𑍍𑌧𑌾 | போட்டிசெய்தல் (உளதோ), |
| 𑌤𑍇 | அந்த |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃 | ப்ராஹ்மணர்கள் |

| | |
|---|---|
| 𑌇𑌤𑌃 | இங்கிருந்து |
| 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 | இறந்துபோய் |
| 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇 | ஸ்வர்க்கத்தில் |
| 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑌾𑌂 | விளங்குதலை |
| 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 | பெறுகிறார்கள். |
| 𑌯𑍇𑌷𑌾𑌂 | எவர்கட்கு |
| 𑌧𑌰𑍍𑌮𑍇 | தர்மத்தில் |
| 𑌸𑍍𑌪𑌰𑍍𑌧𑌾 | போட்டிசெய்தல் |
| 𑌨 (𑌭𑌵𑌤𑌿) 𑌵𑌾 | இல்லையோ, |
| 𑌤𑍇𑌷𑌾𑌂 | அவர்கட்கு |
| 𑌤𑌤𑍍 | அது |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌧𑌨𑌂 | ஞானத்திற்குக் கருவியாய் (உளது). |
| 𑌤𑍇 | அந்த |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃 | ப்ராஹ்மணர்கள் |
| 𑌇𑌤𑌃 | இதனினின்று |
| 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 | தப்பியவராய் |
| 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌪𑌂 | மூன்றும் நீங்கிய |
| 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 | ஸ்வர்க்கத்தை |
| 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 | அடைகிறார்கள். |

---

உஎ.

| | |
|---|---|
| 𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑌃 | வேதங்களை யறிந்த |
| 𑌜𑌨𑌾𑌃 | ஜனங்கள் |
| 𑌤𑌸𑍍𑌯 | அவனுடைய |
| 𑌸𑌦𑌾𑌚𑌾𑌰𑌂 | ஒழுக்கத்தை |
| 𑌸𑌦𑍍𑌯𑌂 | நல்லதாக |
| 𑌆𑌹𑍁𑌃 | சொல்லுகிறார்கள். |
| 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌃 | வெளியிலுள்ள |
| 𑌜𑌨𑌾𑌃 | ஜனமும் |

| | |
|---|---|
| 𑌆𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌾𑌃 | உள்ளேயுள்ள |
| (𑌜𑌨𑌾𑌶𑍍𑌚) | (ஜனமும்) |
| 𑌏𑌨𑌂 | இவனை |
| 𑌸𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌂 | அதிகமாக |
| 𑌨 𑌮𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 | மதியார். |

---

உஅ.

| | |
|---|---|
| 𑌪𑍍𑌰𑌾𑌵𑍃𑌷𑍀𑌵 | மாரிகாலத்தில் |
| 𑌤𑍃𑌣𑍋𑌦𑌕𑌂 𑌚 | புல்நீர்போல, |
| 𑌯𑌤𑍍𑌰 | எங்கே (துறவி) |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 | ப்ராஹ்மணனுக்கு |
| 𑌅𑌨𑍍𑌨𑌂 | உணவையும் |
| 𑌪𑌾𑌨𑌂 (𑌚) | பானத்தை(யும்) |
| 𑌸𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌂 | அதிகமாக |
| 𑌵𑌿𑌨𑍍𑌦𑍇𑌤 | அறிவானோ, |
| 𑌤𑌤𑍍𑌰 | அதனை(யடைந்து) |
| 𑌜𑍀𑌵𑍇𑌤 | உயிர்வாழவேண்டும் ; |
| 𑌨𑌾𑌨𑍁𑌸𑌂𑌜𑍍𑌵𑌰𑍇𑌤𑍍 | வருந்தக்கூடாது. |

---

உகூ.

| | |
|---|---|
| 𑌯𑌤𑍍𑌰 | எங்கே (ஒருவன்) |
| 𑌅𑌕𑌥𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌯 | பேசாதவனுக்கு |
| 𑌅𑌶𑌿𑌵𑌂 | நல்லதல்லாததை |
| 𑌭𑌯𑌂 | பயத்தை |
| 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿 | கொடுக்கின்றானோ, |
| 𑌅𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌂 𑌚 | அதிகத்தையே |
| 𑌅𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 | செய்யாதவனாய் (இருக்கின்றானோ), |
| 𑌸𑌃 | (அங்கே) அவன் |
| 𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍 | நல்லவன் ; |

| | |
|---|---|
| 𑌇𑌤𑌰𑌃 | மற்றைய |
| 𑌜𑌨𑌃 | மனிதன் |
| 𑌨 | அல்லன். |

---

௫௦.

| | |
|---|---|
| 𑌯𑌃 𑌵𑌾 | எவன் |
| 𑌅𑌵𑌦𑌮𑌾𑌨𑌸𑍍𑌯 | பேசாதவனுடைய |
| 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 | ஆத்மாவை |
| 𑌨 𑌅𑌨𑍁𑌸𑌂𑌜𑍍𑌵𑌰𑍇𑌤𑍍 𑌹𑌿 | வருத்தமாட்டானோ, |
| 𑌵𑌾 | அல்லது |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑍍𑌵𑌂 | ப்ராஹ்மணனுடைய சொத்தை |
| 𑌨 𑌉𑌪𑌹𑌨𑍍𑌯𑌾𑌤𑍍 | கெடுக்கமாட்டானோ, |
| 𑌤𑌦𑌨𑍍𑌨𑌂 | அவனது அன்னம் |
| 𑌸𑌤𑌾𑌂 | ஸாதுக்களுக்கு |
| 𑌸𑌂𑌮𑌤𑌂 | சம்மதமானது. |

---

௫௧.

| | |
|---|---|
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 | ப்ராஹ்மணன்,— |
| 𑌅𑌜𑍍𑌞𑌾𑌤𑌚𑌰𑍍𑌯𑌾 | "அறியப்படாத செய்கை |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 | எப்பொழுதும் |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) | (இருக்கக்கடவது)" |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌮𑌨𑍍𑌯𑍇𑌤 | கொள்ளவேண்டும். |
| 𑌜𑍍𑌞𑌾𑌤𑍀𑌨𑌾𑌂 | ஞாதிகளுடைய |
| 𑌮𑌧𑍍𑌯𑍇 | நடுவிலே |
| 𑌵𑌸𑌨𑍍 | வசிக்கின்ற |
| (𑌵𑌰𑍍𑌚𑌸𑌃) 𑌤𑍁 | (மனித)னே |
| 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨 | (ப்ராஹ்மநிஷ்டையைச்) சிறிதும் |
| 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑍇𑌤 𑌏𑌵 | அடையவேமாட்டான். |

(இச்சுலோகத்திற்கு வேறுவிதமான பதவுரை வருமாறு)

| | |
|---|---|
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 | ப்ராஹ்மணன் |
| 𑌜𑍍𑌞𑌾𑌤𑍀𑌨𑌾𑌂 | ஞாதிகளது |
| 𑌮𑌧𑍍𑌯𑍇 | நடுவிலே |
| 𑌵𑌸𑌨𑍍 𑌤𑍁 | வசிக்கிறவனாயினும், |
| 𑌅𑌜𑍍𑌞𑌾𑌤𑌚𑌰𑍍𑌯𑌾 | "அறியப்படாத (பொருளிலே) நிஷ்டை |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 | எப்பொழுதும் |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) | (இருக்கக்கடவது)" |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌮𑌨𑍍𑌯𑍇𑌤 | கொள்ளவேண்டும்; |
| 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨 | (ஞாதிகளுள்) ஒன்றையும் |
| 𑌨 𑌵𑌿𑌦𑍇𑌤 𑌵𑌾𑌚 | கொள்ளவேகூடாது. |

---

௫௨.

| | |
|---|---|
| 𑌸𑌃 𑌹𑌿 | எவன்தான், |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 (𑌸𑌨𑍍) | ப்ராஹ்மணனு(யிருந்து), |
| 𑌨𑌿𑌰𑍍𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 | குறியில்லதாய் |
| 𑌅𑌚𑌲𑌂 | அசையாததாய் |
| 𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 | சுத்தமாய் |
| 𑌸𑌰𑍍𑌵𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 | த்வந்துவமெல்லாம் ஒழிந்ததாய் |
| 𑌅𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 | உள்ளேயுள்ள ஆத்மாவை |
| 𑌏𑌵𑌂 | இவ்வாறு |
| 𑌵𑍇𑌤𑍍𑌤𑍁𑌂 | கொள்ள |
| 𑌅𑌰𑍍𑌹𑌤𑌿 | உரியவனாகிறான்? |

---

௫௩.

| | |
|---|---|
| 𑌯𑌃 | எவன் |
| 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 | வேறுவிதமாய் |

| | |
|---|---|
| 𑌸𑌨𑍍𑌤𑌂 | உள்ள |
| 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 | ஆத்மாவை |
| 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 | வேறுவிதமாய் |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 | கொள்கின்றானோ, |
| 𑌆𑌤𑍍𑌮𑌾𑌪𑌹𑌾𑌰𑌿𑌣𑌾 | ஆத்மாவைத் திருடுகின்ற |
| 𑌚𑍋𑌰𑍇𑌣 | கள்ளனாகிய |
| 𑌤𑍇𑌨 | அவனால் |
| 𑌕𑌿𑌂 𑌪𑌾𑌪𑌂 | என்ன பாவந்தான் |
| 𑌨 𑌕𑍃𑌤𑌂 | செய்யப்பட்டதில்லை ? |

௩௪.

| | |
|---|---|
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌤𑍍 | ப்ரஹ்மத்தை யறிந்த |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 | ப்ராஹ்மணனானவன் |
| 𑌕𑌵𑌿𑌃 | கவியானவன் |
| 𑌅𑌨𑌾𑌦𑌾𑌤𑌾 | பற்றுதவனாக |
| 𑌅𑌶𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌃 | சிரம மில்லாதவனாக |
| 𑌸𑌂𑌮𑌤𑌃 | நன்கு மதிக்கப்பெற்றவனாக |
| 𑌨𑌿𑌰𑍁𑌪𑌦𑍍𑌰𑌵𑌃 | உபத்திரவ மில்லாதவனாக |
| 𑌶𑌿𑌷𑍍𑌟𑌃 | ஆன்றோனாக |
| 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | இருப்பான் ; |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌶𑌿𑌷𑍍𑌟𑌵𑌤𑍍 | ஆன்றோன்போல |
| 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | இருக்கமாட்டான். |

௩௫.

| | |
|---|---|
| 𑌯𑌥𑌾 | எப்படி |
| 𑌶𑍍𑌵𑌾 | நாயானது |
| 𑌸𑍍𑌵𑌂 𑌵𑌾𑌨𑍍𑌤𑌂 | தான் கக்கியதை |

| | |
|---|---|
| 𑌅𑌶𑍍𑌨𑌾𑌤𑌿 𑌶𑍍𑌵𑌾 | தின்கின்றதோ, |
| 𑌏𑌵𑌂 | அப்படி |
| 𑌤𑍇 | அவர்கள் |
| 𑌸𑍍𑌵𑌵𑍀𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 | தமது வீரியத்தினுடைய |
| 𑌉𑌪𑌭𑍋𑌜𑌨𑌾𑌤𑍍 | அநுபவத்தினால் |
| 𑌵𑌾𑌨𑍍𑌤𑌂 | வாந்திசெய்ததை |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 | எப்பொழுதும் |
| 𑌅𑌭𑍂𑌤𑌯𑍇 | தீமைக்கு |
| 𑌅𑌶𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 | தின்கிறார்கள். |

௬௯.

| | |
|---|---|
| 𑌯𑍇 | எந்த |
| 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌃 | இருபிறப்பாளர் |
| 𑌮𑌾𑌨𑍁𑌷𑍇𑌷𑍁 | மநுஷ்யசம்பந்தமான |
| 𑌵𑌿𑌤𑍍𑌤𑍇𑌷𑍁 | செல்வத்திலே |
| 𑌅𑌨𑌾𑌢𑍍𑌯𑌾𑌃 | சம்பன்ன ரல்லாதவர்களாய் (இருக்கிறார்களோ), |
| 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 | வேதங்களிலே |
| 𑌆𑌢𑍍𑌯𑌾𑌃 | சம்பன்னர்களாய் இருக்கிறார்களோ, |
| 𑌤𑍇 | அவர்கள் |
| 𑌦𑍁𑌰𑌾𑌧𑌰𑍍𑌷𑌾𑌃 | வெல்லவொண்ணாதவராய் |
| 𑌦𑍁𑌷𑍍𑌪𑍍𑌰𑌕𑌂𑌪𑍍𑌯𑌾𑌃 | அசைக்கமுடியாதவராய் (இருக்கிறார்கள்). |
| 𑌤𑌾𑌨𑍍 | அவர்களை |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 | ப்ரஹ்மத்தினுடைய |
| 𑌤𑌨𑍁𑌂 | ஸ்வரூபமாக |
| 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 | (ஒருவன்) அறியவேண்டும். |

## ௩எ.

| | |
|---|---|
| 𑌇𑌹 | இங்கே |
| 𑌯𑌃 𑌕𑌶𑍍𑌚𑌨 | எவனொருவன் |
| 𑌸𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌕𑍃𑌤𑌃 | நன்ருக வேண்டியதைச் செய்கின்ற |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 | எல்லா |
| 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 | தேவர்களையும் |
| 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 | அறிவானோ, |
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 | ப்ராஹ்மணனுக்கு |
| 𑌸𑌮𑌃 | சமானனாக |
| 𑌨 (𑌭𑌵𑌤𑌿) | ஆகமாட்டான்; |
| 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 | (அவன்) எவன்விஷயத்திலே |
| 𑌸𑍍𑌵𑌯𑌂 | தானே |
| 𑌪𑍍𑌰𑌯𑌤𑌤𑍇 | முயலுகின்றானோ, |
| (𑌸𑌃 𑌅𑌪𑌿) | (அவனும்) |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 | ப்ராஹ்மணனுக்கு |
| 𑌸𑌮𑌃 | சமானனாக |
| 𑌨 (𑌭𑌵𑌤𑌿) | ஆகமாட்டான். |

---

## ௩அ.

| | |
|---|---|
| 𑌅𑌪𑍍𑌰𑌯𑌤𑌮𑌾𑌨𑌂 | முயலாத |
| 𑌯𑌂 | எவனை |
| 𑌮𑌾𑌨𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍁 | (ஸாதுக்கள்) மதிக்கிறார்களோ, |
| 𑌮𑌾𑌨𑌿𑌤𑌃 | மதிக்கப்பட்ட |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌮𑌾𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 | (தன்னை) மதிக்கப்படுகிறவனாக |
| 𑌨 𑌮𑌨𑍍𑌯𑍇𑌤 | நினைத்துக்கொள்ளக்கூடாது; |
| 𑌅𑌵𑌮𑌾𑌨𑍇𑌨 | அவமானத்திலே |
| 𑌨 𑌅𑌨𑍁𑌸𑌂𑌜𑍍𑌵𑌰𑍇𑌤𑍍 | எரிச்சலடையக்கூடாது. |

---

௩௯, ௪௦.

| | |
|---|---|
| விதா³ம்ஸ꞉ | "அறிவுடையோர் |
| இஹ | இங்கே |
| மாநயந்தி | (ஞானியை) மதிக்கிறார்கள்" |
| இதி | என்பது, |
| ஸதா³ | எப்பொழுதும் |
| நிமேஷோந்மேஷவத் | இமைமூடுவதும் திறப்பதும்போல் |
| லோகஸ்வபாவவ்ருத்தி꞉ | உலகஸ்வபாவப்போக்காய் |
| (வர்த்ததே) ஹி | (இருக்கின்றது) |
| (இதி) | (என்று),— |
| மாநித꞉ | மதிக்கப்பெற்றவன் |
| மந்யேத | கொள்ளவேண்டும். |
| அத⁴ர்மவிது³ஷ꞉ | 'தர்மத்தை யறியாதவராய் |
| லோகஶாஸ்த்ரவிவர்ஜிதா꞉ | உலகமும் சாஸ்திரமும் இல்லாத |
| மூடா⁴꞉ | மூடர்கள் |
| மாந்யம் | மதிக்கத்தகுந்தவனை |
| ந மாநயிஷ்யந்தி | மதிக்கிறார்களில்லை" |
| இதி | என,— |
| அமாநித꞉ | மதிக்கப்பெறாதவன் |
| மந்யேத | கொள்ளவேண்டும். |

---

௪௨.

| | |
|---|---|
| மாந꞉ ச | மானமும் |
| மௌநம் ச | மௌனமும் |
| ஸதா³ | எக்காலத்தும் |
| ஸஹிதௌ | சேர்ந்தவையாய் |
| ந வை வஸத꞉ | வசிக்கமாட்டா. |
| ஹி | ஏனெனில் |

| | |
|---|---|
| அயம் | இது |
| மாநஸ்ய | மாநத்திற்கு |
| விஷய: (அஸ்தி) | விஷயமாய் (இருக்கின்றது) ; |
| அஸௌ | அது |
| மௌநஸ்ய | மௌநத்திற்கு |
| (விஷய: அஸ்தி) | (விஷயமாய் இருக்கின்றது); |
| தத் | (சுருதியை யறிந்தோர் அதனை) அதுவாக |
| விது: | அறிகிறார்கள். |

---

சஉ.

| | |
|---|---|
| ஹி | ஏனெனில் |
| ஸ்ரீ: | சம்பத்து |
| மாநவிஷயஸம்வாஸாத் | மாநவிஷயத்தின் வாழ்க்கையினால் |
| (பவதி) | (ஆகின்றது). |
| ஸா ச அபி | அதுவோ |
| பரிவஹ்நிநீ | இடையூறாய் (உள்ளது). |
| க்ஷத்ரிய | க்ஷத்திரிய ! |
| ப்ராஹ்மீ | ப்ரஹ்மசம்பந்தமான |
| ஸ்ரீ: ஹி | சம்பத்தோ |
| ப்ரஜ்ஞாஹீநேந | ஞானமில்லாதவனால் |
| ஸுது:ப்ராபா | அடைதற்கு மிக்க அரிதாம். |

---

சங.

| | |
|---|---|
| ஸந்த: | சாதுக்கள்,— |
| து:ஸ்தராணி | அநுஷ்டிப்பதற்கு அரியவையாய் |
| பஹுவ்ராகாராணி | பலவிதமான |
| த்வாராணி | வழிகளை |

| | |
|---|---|
| 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 | நன்ருய் |
| 𑌪𑍍𑌰𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 | சொல்லுகிருர்கள் : |
| 𑌸𑌤𑍍𑌯𑌾𑌰𑍍𑌜𑌵𑍇 | ஸத்தியம், நேர்மை |
| 𑌹𑍍𑌰𑍀𑌃 | நாணம் |
| 𑌦𑌮𑌶𑍌𑌚𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌃 | அடக்கம், சுத்தம், அறிவு (என்பன, அவை). |
| 𑌷𑌟𑍍 | (இந்த) ஆறும் |
| 𑌮𑌾𑌨𑌮𑍋𑌹𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑌕𑌾𑌣𑌿 | மாநத்திற்கும், மயக்கத்திற்கும் இடறுகளாய் (உள்ளன). |

---

𑌅𑌥

𑌤𑍃𑌤𑍀𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

க.

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚—

𑌕𑌸𑍍𑌮𑍈𑌷 𑌮𑍌𑌨𑌃 𑌕𑌤𑌰𑌨𑍍𑌨𑍁 𑌮𑍌𑌨𑌂
𑌪𑍍𑌰𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌵𑌿𑌦𑍍𑌵𑌨𑍍𑌨𑌿𑌹 𑌮𑍌𑌨𑌭𑌾𑌵𑌮𑍍 ।
𑌮𑍌𑌨𑍇𑌨 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍁𑌤 𑌯𑌾𑌤𑌿 𑌮𑍌𑌨𑌂
𑌕𑌥𑌂 𑌮𑍁𑌨𑍇 𑌮𑍌𑌨𑌮𑌿𑌹𑌾𑌚𑌰𑌨𑍍𑌤𑌿 ॥

---

## மூன்றும் அத்தியாயம்.

சென்ற அத்தியாயமுடிவில், மௌநத்தின் மாட்சிமையும், ஸத்தியம் நேர்மை முதலியன மயக்கத்தைத் தொலைப்பவை என்றும் கூறப்பட்டன. அவற்றையே வினவிடைகளாக விரித்துணர்த்தும்பொருட்டு இவ்வத்தியாயம் தொடங்கப்படுகின்றது :

### மௌநம்.

க.

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான் :

இந்த மௌநம் எதற்கு? இரண்டனுள் எது மௌநம்? (எல்லாம்) அறிந்தவரே! இங்கு மௌநத்தின் இயல்பை அருளிச்செய்க. கற்றறிந்தவன் மௌநத்தால் மௌநத்தைப் பெறுகின்றானா? முனிவரே! (கற்றறிந்தவர்) இங்கே எவ்வாறு மௌநத்தை அநுஷ்டிக்கிறார்கள்?

மௌநம் என்னும் சொல் - "வாய் திறந்து பேசாமை," "இந்திரிய மனஅடக்கம்," "வாக்குமனாதீதநிலை" என்னும் மூன்று பொருளின்மேல் நிற்கின்றது.—முற்றுமுணர்ந்த பெரியோரே! க. இங்குச் சிறப்பித்துக் கூறிவரும் மௌநத்தின் பயன் யாது? உ. அம்மௌநம், வாய்

உ.

ஸநத்ஸுஜாத உவாச—
யதோ ந வேதா மநஸா ஸஹைந
மநுப்ரவிஶந்தி ததோத மௌநம் ।
யத்ரோத்திதோ வேதஶப்தஸ்ததாயம்
ஸ தந்மயத்வேந விபாதி ராஜந் ॥

---

திறந்து பேசாமையா? அல்லது, இந்திரியமனஅடக்கமா? ௩. அதனது தன்மை என்ன? ௪. அதனால், வாக்குமனாதீதநிலையைப் பெறுதலாகுமா? ௫. எதனால் அம்மௌநத்தை யநுஷ்டித்த லாகும்? என்பது தேர்ந்த பொருள். (௧)

உ.

பல பொருள்களும் தோன்றுமாறு ஓர் விளக்கை வைப்பதுபோல், பகவான் ஸநத்ஸுஜாதர் இவ்வினாக்கட்கு விடைகள் தோன்றுமாறு இதனை அருளிச்செய்கிறார்:

ஸநத்ஸுஜாதர் சொல்லலுற்றார்:

எதனால் வேதங்கள் மனத்தோடுகூட இதனைச் செல்லமாட்டாவோ, அதனால் (அது) மௌநமாம். அரசனே! வேதசப்தமும் இதுவும் [உலகசப்தமும்] எதனிடத்துத் தோன்றியுளதோ, அது அதுவாகவே விளங்குகின்றது.

இதனை - பரமாத்மாவை. அதுவாகவே - சப்தமயமாகவே, பிரணவமாகவே என்றபடி.

"யதோ வாசோ நிவர்த்தந்தே । அப்ராப்ய மநஸா ஸஹ"

"வாக்கும் மனமும் (எதனை) யடையமுடியாது, எதனினின்று திரும்பிச்செல்கின்றனவோ"—(தை - உப - உ - ௪)

என்னும் சுருதியினால் ப்ரஹ்மம் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத பொருளாதலால், அதனது பெயர் மௌந மாம். இதனால் - ௧. வாக்குமனாதீதநிலையை யடைதல் மௌநத்தின் பயன் என்றும்; ௨. அம்மௌநமாவது, இந்திரியமனஅடக்க மென்றும்; ௩. இந்திரியஅடக்கத்தால் வெளிப்பிரபஞ்சமும், மனஅடக்கத்தால் உள்பிரபஞ்சமும் தோன்று

௬.

த்ருதராஷ்ட்ர உவாச—

ருசோ யஜூம்ஷ்யதீதே ய: ஸாமவேதம் ச யோ த்விஜ: ।
பாபாநி குர்வந் பாபேந லிப்யதே கிம் ந லிப்யதே ॥

---

மையே அதனது இயல்பு என்றும்; ௪. அந்தத் தோன்றாமையினால், வாக்குமனாதீதநிலையை யடைதலாகுமென்றும்; முறையே முதல் நான்கு வினாக்கட்கு விடை கூறப்பட்டதாயிற்று. இனி, **வேதசப்தம்** என்பது - ஸகலவேதங்களின் ஸாரமாய் உண்மையினை விளங்கஉணர்த்தும் பிரணவத்தைக் குறிக்கின்றது; குறிக்கவே, பிரணவத்தால் மௌநத்தை யநுஷ்டித்த லாகுமென ஐந்தாம் வினாவிற்கு விடை கூறப்பட்டதென்க. இப் பிரணவத்தைப்பற்றி, பஞ்சீகரணத்தையும் அதனது வார்த்திகத்தையும் பார்க்க. (௨)

**வேதஇயல்பின் திறமை.**

௩.

ஆயின்,

"ஸர்வே வேதா யத்பதமாமநந்தி"

"வேதங்களெல்லாம் எந்த நிலையை உணர்த்துகின்றனவோ"—(கட - ௨ - ௧௫)

"வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:"

"எல்லா வேதங்களாலும் யானே உணர்த்தப்படும் (பொருள்)"—(வே - கீ - ௧௫ - ௧௫)

எனச் சுருதிஸ்மிருதிகள் கூறுமாறு, ப்ரஹ்மமான ஆத்மாவைக் காண்பதற்கு வேதங்கள் கருவியாதலால் - வேதங்களை யோதுவோன் மௌநமில்லாதவனாயினும், ஈடேறுவானோ? ஈடேறமாட்டானோ? எனச் சங்கித்து

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான்:

எந்த இருபிறப்பாளன் தீவினைகளைச் செய்பவனாய் ரிக்குக்களையும் யஜுஸ்களையும் ஸாமவேதத்தையும் ஓதுகின்றானோ, (அவன்) பாவத்தால் பற்றப்படுகின்றானா? பற்றப்படுகின்றானில்லையா?

பாவங்களைச் செய்துகொண்டு ரிக்வேதம்முதலான வேதங்களை ஓதுபவன் அதனால் [வேதமோதுவதனால்] சுத்தமாகின்றானா? இல்லையா? என்பது. (௩)

௪.

𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤 𑌉𑌵𑌾𑌚—

𑌨𑍈𑌨𑌂 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑍃𑌚𑍋 𑌵𑌾𑌪𑌿 𑌨 𑌯𑌜𑍂𑌂𑌷𑍍𑌯𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 ।
𑌤𑍍𑌰𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌪𑌾𑌪𑌾𑌤𑍍 𑌨 𑌤𑍇 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾 𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

௫.

𑌨 𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 𑌵𑍃𑌜𑌿𑌨𑌾𑌤𑍍𑌤𑌾𑌰𑌯𑌨𑍍𑌤𑌿
𑌮𑌾𑌯𑌾𑌵𑌿𑌨𑌂 𑌮𑌾𑌯𑌯𑌾 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌮𑍍 ।
𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑍍𑌯𑍇𑌨𑌂 𑌪𑍍𑌰𑌜𑌹𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇
𑌨𑍀𑌡𑌂 𑌶𑌕𑍁𑌨𑍍𑌤𑌾 𑌇𑌵 𑌜𑌾𑌤𑌪𑌕𑍍𑌷𑌾𑌃 ॥

---

௪.

ஸநத்ஸுஜாதர் சொல்லலுற்றார்:

ஸாமங்களாயினும், ரிக்குக்களாயினும், யஜுஸ்களாயினும் சாமர்த்தியமில்லாத இவனைப் பாவத்தினின்றும் காக்கமாட்டா. யான் உனக்குப் பொய்யைச் சொல்லமாட்டேன்.

சாமர்த்தியமில்லாத இவனை - இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கும் திறமையில்லாதவனைப், பாவகாரியங்களைச் செய்துகொண்டே வேதங்களை ஓதுவோனை. (௪)

௫.

வேதங்கள், கள்ளமாய் ஒழுகுகின்ற மாயாவியைப் பாவத்தினின்றும் தப்புவிக்கமாட்டா. இறகுமுளைத்த பறவைகள் கூட்டை (விட்டோடுமாறு)போல், வேதங்கள் (இவனது வாழ்க்கையின்)முடிவுகாலத்தில் இவனை விட்டொழிகின்றன.

கள்ளமாய் ஒழுகுகின்ற மாயாவியை - பாவங்களைச் செய்துகொண்டே வேதங்களை ஓதியுணர்பவனாய், தருமங்களை அநுஷ்டிப்பவன்போல் வெளிக்குப் பகட்டுகின்ற ஆசாரக்கள்ளனை என்க. வே - கீ - ௮ - ௬ ஐப் பார்க்க.

சங்கை:—அவன் பாவங்களைச் செய்வோனாயினும், இடைவிடாது செய்யும் வேதப்பயிற்சியின் வலிமையினால் மரணகாலத்திலே வேதப்பொருளை நினைந்து ஈடேறலாம்; அவ்வாறே,

“𑌯𑌂 𑌯𑌂 𑌵𑌾𑌪𑌿 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌭𑌾𑌵𑌂 𑌤𑍍𑌯𑌜𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌕𑌲𑍇𑌬𑌰𑌮𑍍 ।
𑌤𑌂 𑌤𑌮𑍇𑌵𑍈𑌤𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌸𑌦𑌾 𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌭𑌾𑌵𑌿𑌤𑌃 ॥”

சு.

ധൃതരാഷ്ട്ര ഉവാച—

ന വേദാ വിനാ ധർമ്മം ത്രാതും ശക്താ വിചക്ഷണ ।
അഥ കസ്മാത് പ്രലാപോഽയം ബ്രാഹ്മണാനാം സനാതനഃ ॥

"கௌந்தேய! (ஒருவன் தனது வாழ்வின்) முடிவுகாலத்திலே எந்தெந்தப் பொருளை நினைந்து சரீரத்தை விடுகின்றானே, அதனைப்பற்றிய பாவனையை எப்பொழுதும் பாவித்துக்கொண்டவனாய், அதனையே அடைகிறான்"—(வே - கீ - அ - சு)

எனப் பகவான் அருளிச்செய்கிறார். ஆகவே, மௌநத்தால் [இந்திரிய மனஅடக்கத்தால்] ஆவதென்ன?

ஸமாதானம்:—அப்படியன்று; அவ்வடக்க மில்லாவழி, மரணகாலத்திலே வேதங்கள் அவனது நினைவிற்கு எழமாட்டாவாதலின், ஆகவே, அவை அவனுக்குப் பயன்படா என்பதாம். (ரு)

சு.

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான்:

அறிஞரே! வேதங்கள் தர்மமில்லாது (ஒருவனைக்) காக்கவல்லவையில்லையாயின், அங்ஙனம் ஏன் ப்ராஹ்மணர்கட்கு இப் பேச்சு எப்பொழுது முள்ளது?

வினா:—வேதங்களை ஓதியுணர்ந்தும் தீவினைகளைச் செய்பவன், பாவலோகங்களை யடைந்து மீண்டும் வந்து பிறக்கிறான். அவ்வாறே வேதங்களை ஓதியுணர்ந்து நல்வினைகளைச் செய்பவனே புண்ணியலோகங்களை யடைந்து, அவனைப்போலவே மீண்டும் வந்து பிறக்கிறான். இவ்வாறு, இவ்விருவர்க்கும் போதலும்வருதலும் பிறப்பிறப்புத்துன்பங்களும் சமமா யுள்ளன. எனவே, வேதங்கள் தர்மமுடையவனையும் காக்கமாட்டா என்பதாயிற்று. இனி, இவ்வாறானவளவிலே, ப்ராஹ்மணர்கள் "வேதங்களை ஓதியுணர்ந்து நல்லொழுக்கத்தைக் கைக்கொண்டவனே, போதலும்வருதலும்நீங்கியவனாய்ப் பிறப்பிறப்புத்துன்பங்களைத் துடைத்துவிடுகின்றான்" என்று எதனால் கூறுகிறார்கள்? (சு)

எ.

ஸநத்ஸுஜாத உவாச—
தஸ்யைவ நாமாதிவிஶேஷரூபைஃ
இதம் ஜகத் பாதி மஹாநுபாவ ।

விடை:—உண்மை, தீவினையும் நல்வினையும் இரும்புவிலங்கும் பொன்விலங்கும்போல பந்தமாம் என்பது. ஆயினும், கர்மத்தின் பயனை எதிர்நோக்காது அதனை ஈச்வரார்ப்பணமாகச் செய்யின், அது முக்திக்குப் பரம்பரையான காரணமாம். (வே - கி - 7, 8 - ஆம் பக்கங்களைப் பார்க்க.) அதனால் அவர்கள் அவ்வாறு கூறுகிறார்கள். அன்றியும், வேதங்கள் மோக்ஷத்தையும் அதற்கு ஸாதநங்களையும் இவ்வாறு உணர்த்துகின்றமையால், பிறப்புஇறப்புத்துன்பங்களை நீக்கக் காரணமாகின்றன. ஆகவே, இதனால் - அவை, அவற்றை ஓதி யுணர்ந்து நல்லொழுக்கமுடையோனைக் காக்கவல்லவை என்பதையும் கண்டுகொள்க.

சங்கை:—தீவினையையும் ஈச்வரார்ப்பணமாகச் செய்தல் கூடுமோ? எனின்,—

ஸமாதாநம்:—கூடாது; அவன் மறுத்தவற்றைச் செய்தல் அவனது ஸந்தோஷத்திற்காகாதெனத் தானே தெற்றெனத் தெரியக்கிடத்தலின். தீவினையெல்லாம் அவனால் மறுக்கப்பட்டவை. அவற்றைச் செய்தல், அவனது கட்டளையை மீறுதலாகிய பெருங் குற்றமேயன்றோ.

ஸநத்ஸுஜாதர் இவையெல்லாவற்றையும் உட்கொண்டு, வருகின்ற மூன்று (எ, அ, கூ) சுலோகங்களையும் கூறுபவராய், "யாருக்காகக் கர்மத்தைச் செய்யவேண்டுமோ அவனை" அந்த ஈச்வரனை முதலில் அருளிச்செய்கிறார்:

ஈச்வரன்.

எ.

ஸநத்ஸுஜாதர் சொல்லலுற்றார்:

பெருந்தகைமையுள்ளவனே! இப் பிரபஞ்சம் அதே (பரம்பொருளினுடைய) பெயர்முதலிய சிறப்புவடிவங்களால் விளங்குகின்றது. வேதங்

நிர்திஶ்ய ஸர்வகார்யாணி வேதா:
தத்விஶ்வேப்யோ வ்யுதாஸயந்தி ||

கள் அதனைக் குறிப்பிட்டு நேராக உணர்த்துகின்றன; அதனைப் பிரபஞ்சத்திற்கு வேறாக(வும்) எடுத்துக்காட்டுகின்றன.

ஈச்வரன் நாமரூபவிகாரமான அந்தந்த மலை கடல் முதலிய சகல ப்ரபஞ்சமாக விளங்குகிறான்; உண்மையிலோ, வேறுபாடாகிய விகாரமென்பது ஒருபொருளன்று ஆதலால், அந்த நாமரூபவிகாரமெல்லாம் அகன்றுநிற்கும் தனிமுதற்பொருளான ப்ரஹ்மமாகவும் இருக்கிறான். ஆகவே, நாம் வாழ்கின்ற பற்பலவகையான ப்ரபஞ்சமனைத்தும் அவனினும் வேறாய் இல்லை என்பது. அவ்வாறே, சுருதிகள்

"யத்ர ஹி த்வைதமிவ பவதி ததிதர இதரம் பஶ்யதி"

"எங்கே இரண்டுபட்டதுபோல் உளதோ, அங்கே ஒன்று மற்றொன்றைக் காண்கின்றது"—(ப்ரு - ச - ரு - கரு)

எனக் கூறி

"யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத்கேந கம் பஶ்யேத்"—(ப்ரு - ச - ரு - கரு)

"எங்கே இவனுக்கு எல்லாம் ஆத்மாவாக இருந்ததோ, அங்கே எதனால் யாரைப் பார்க்கக்கூடும்?"

எனவும் கூறுவதையும்,

"அத யத்ராந்யத் பஶ்யத்யந்யச்ச்ருணோத்யந்யத்விஜாநாதி ததல்பம் ... யதல்பம் தந்மர்த்யம்"

"இனி, எங்கே வேறொன்றைக் காண்கின்றானோ, வேறொன்றைக் கேட்கின்றானோ, வேறொன்றை அறிகின்றானோ, அது அற்பமானது ... எது அற்பமானதோ, அது அழியக் கூடியது"—(சா - எ - உச - க)

எனக் கூறி

"யத்ர நாந்யத் பஶ்யதி நாந்யச்ச்ருணோதி நாந்யத்விஜாநாதி ஸ பூமா ... யோ வை பூமா ததம்ருதம்"

"எங்கே வேறொன்றைப் பார்க்கிறானில்லையோ, வேறொன்றைக் கேட்கிறானில்லையோ, வேறொன்றை அறிகிறானில்லையோ, அது பூமா [பெருமை, யாவற்றினும் மேம்பட்டது] ... எது பூமாவோ, அது சாகாமையாம்"—(சா - எ - உச - க)

எனவும் கூறுவதையும்,

"ஸவ்யாக்ருதஶாஸீத்தந்நாமரூபாப்யாமேவ வ்யாக்ரியத"

"வேறுபடாததா யிருந்தது; அது பெயரினாலுமே வடிவத்தினாலுமே வேறுபட்டது"—(ப்ரு - க - ச - எ)

எனக் கூறி

"நேதி நேதி ...　　...　　...　　"

"(ப்ரஹ்மம்) இப்படியன்று, இப்படியன்று ...　　..."—(ப்ரு - உ - ங - சு)

எனவும் கூறுவதையும்,

"தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூதஃ। ஆகாஶாத்வாயுஃ। வாயோரக்நிஃ। ... ..."

"அந்த இவ்வாத்மாவினின்றே ஆகாசம் உண்டாயிற்று; ஆகாசத்தினின்று வாயு; வாயுவினின்று அக்னி ... ..."

எனக் கூறி

"யதோ வாசோ நிவர்த்தந்தே। அப்ராப்ய மநஸா ஸஹ"

"சொற்கள் மனத்தோடுகூட (எதனை) அடையமுடியாது எதனின்று திரும்புகின்றனவோ"—(தை - உப - உ - ச-க)

எனவும் கூறுவதையும் ஆராய்க. அன்றியும், இதற்குஇணங்க.

"ஸகலவேதாந்தஸாரஸம்ஹிதா
ஸகலவேதாந்தஸமுத்யஸாரஹ ॥"

அ, கூ.

தஸ்ய-ஜ்ஞாநம் தப ஸதஸ்ஸ்ய
தாஸ்மைஸ்ஸ வஸ்ஷ்யைஸ்ஸ்வெதி விஸாது ।
வஸ்ஷ்யை நஸ்வாவம் விநிஷூதஸ்ஸ்ய வஸ்ஷாக
ஸ ஜாயதெ ஜ்ஞாநவிதீவிதாத்தா ॥

ஜ்ஞாநெந வாத்தா நஸ்வெதி விஸாது
ஸயாநஸ்யா வழுஷஸாந-ஸாக்ஷீ ।
ஸஷ்ஸிந்த்யூதம் தத்ஸிஸ்யூஸ்ஸ்ய ஸவஷ்
ஸஸ்த்ர ஹூஸ்க்தே வஸ்நஸெதி ஜாம்ஷ ॥

“வாக்குமனமெல்லாம் கடந்துநிற்கும் அறிவு - வாக்கு மனமெல்லாவற்றினுடைய வ்யவஹாரங்களையும் பெறுவதாம் [உண்மையிலே நிஷ்ப்ரபஞ்சமான பொருளே நமது அஜ்ஞானவாழ்க்கையில் ஸப்ரபஞ்சமாய்க் காணப்படுகின்றது]”—(ஸம்க்ஷேப - க - ௩௩க)

எனப் பெரியோரும் அருளிச்செய்ததை நோக்குக. (எ)

கர்மம்.

அ, கூ.

இனி, அந்த ஈச்வரனுக்கென்று கர்மங்களைச் செய்பவனுக்கு அவை முக்திக்குப் பரம்பரையாகப் பயன்படுதலையும், மற்றையோர்க்கு அவை அங்ஙன மாகாமையையும் அருளிச்செய்கிறார்:

அதற்காக இந்தத் தவமும் யாகமும் கூறப்பட்டுள்ளன. தெரிந்த அவன் அவற்றால் புண்யத்தைப் பெறுகிறான்; புண்யத்தால் பாவத்தைத்தொலைத்துப், பின்பு அவன் ஞானத்தால் ஆத்மாவிளங்கப்பெற்றவனாகிறான்.

(அவ்வாறு ஆத்மாவைக் கண்டு) உணர்ந்தவன் ஞாநத்தால் ஆத்மாவை யடைகின்றான். மற்று, மாறானவளவிலே, (அவன்) இந்திரியக்கூட்டத்திற்கு (இனிமையான) பயனைத் தொடர்ந்துவேண்டும் இயல்பினனாய், இங்கே அஃதனைத்தையும் எடுத்துக்கொண்டு மறுமையிலே அனுபவிக்கிறான்; (நீள (ஸம்ஸார) வழியை அடைகிறான்.

எது ப்ரபஞ்சத்திற்கு வேருக இல்லையென்று சொல்லப்பட்டதோ (௩ - எ), அதனை யடைதற்காக சாந்திராயணம் முதலிய தவங்களையும், ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்களையும் வேதங்கள் கூறுகின்றன. கர்மங்களினுடைய உபயோகத்தைத் தெரிந்தவன் அவற்றை ஈச்வரனுக்காக அனுஷ்டிக்க, அதனுல் புண்யம் உண்டாகின்றது; அப் புண்யத்திஞல் பாவம் தேய்கின்றது; பாவம் தேய, புத்தி திருந்துகின்றது. புத்திதிருந்தியவனுக்கே ஞானத்திஞல் ஆத்மஉண்மை விளங்குகின்றது. விளங்கவே, அவன் அந்த அறிவினுல் ஆத்மாவை அடைகிருன், ஆநந்த அறிவான ப்ரஹ்மஸ்வரூப மாகிருன் என்றபடி.

"ஆத்மாநம் சேத்விஜாநீயாதயமஸ்மீதி பூருஷ: । கிமிச்சந் கஸ்ய காமாய ஶரீரமநுஸஞ்ஜ்வரேத் ॥"

"மனிதன் ஆத்மாவை 'இதோ இருக்கிறேன்' என்று அறிவானுகில், எதனை விரும்பி எதனுடைய ப்ரயோஜனத்திற்காக உடம்பை யடுத்து வருந்துவான்?"—(ப்ரு - ச - ச - கஉ

"ஆத்மலாபாந்ந பரம் வித்யதே"

"ஆத்மாவை அடைவதினும் வேறு இல்லை"—(ஆப - க - உஉ - உ)

என்னும் சுருதிஸ்மிருதிகளால் ஆத்மாவைப் பெறுதலே மிக மேலான புருஷார்த்தமாம் என்பது கருத்து. வே - மா - க - உ - ஆம் சுலோகத்தைப் பார்க்க.

ஆனுல், இவ்வாறு கர்மத்தை ஈச்வரார்ப்பணமாகச் செய்யாதவனுக்கு ஆத்மஅறிவு பிறவாதாதலால், அவன் அநாத்மப்பொருளையே புருஷார்த்தமாகக் கொள்கிருன். கொள்ளவே, இந்திரியங்கட்கு ப்ரியமான விஷயஸுகத்தையே அடுத்தடுத்து நாடுபவனுய்த், தான் இம்மையிலே செய்த புண்யபாவங்களை எடுத்துக்கொண்டு மறுமையிலே ஸ்வர்க்கநரகங்களில் அவற்றினது பயனுகிய இன்பத்தையேனும் துன்பத்தையேனும் அநுபவிக்கிருன்; மீண்டும் இவ்வுலகிலே வந்து பிறக்கிருன். உ - அ - ஆம் சுலோகத்தைப் பார்க்க. (அ, கூ)

௧௦.

அஸ்மிம்ல்லோகே தபஸ்தப்தம் பலமந்யத்ர புஜ்யதே ।
ப்ராஹ்மணாநாம் தப: ஸ்வ்ருத்தமந்யேஷாம் தாவதேவ தத் ॥

௧௦.

ஒருகர்மத்தைத் தெரிந்து செய்தற்கும், தெரியாது செய்தற்கும் பயனிலே ஏற்றக்குறைவைக் கூறுகிறார் :

இவ்வுலகிலே தவம் செய்யப்படுகின்றது ; வேறு (உலகிலே) பயன் அநுபவிக்கப்படுகின்றது. ப்ராஹ்மணர்களுடைய தவம் ஓங்கிவளர்வது ; மற்றையோர்கட்கு அது அவ்வளவேதான்.

தவமாவது - உடம்பையும் இந்திரியங்களையுங் கொழுக்கச்செய்யாது, சாஸ்திரத்தில் கூறிய வழிகளால் அவற்றை வாடச்செய்தல். வே - கீ - ௧௭ - ௧௪, ௧௫, ௧௬ - ஆம் சுலோகங்களைப் பார்க்க. ப்ராஹ்மணர்களுடை - வேதங்களை ஓதி யுணர்ந்தவர்களுடைய. இம்மையிலே எந்தத் தவம் செய்யப்பட்டதோ, அதனது பயனை மறுமையிலே அநுபவித்தலென்பது யாவர்க்கும் சமமாம். என்றாலும், எவன் அக்கர்மத்தை எவ்வளவிற்கெவ்வளவு தெரிந்து செய்கின்றானோ, அவன் அவ்வளவிற்கவ்வளவு அதிகமான பயனைப் பெறுகிறான். தெரியாது செய்பவனோ, அக்கர்மத்திற்கு அமைந்த பயனைமாத்திரம் அடைகிறான், அதற்குச் சுருதியினுள் எவ்வளவு பயன் கூறப்பட்டுளதோ அவ்வளவுபயனையே பெறுகிறான் என்றபடி. பயன் மிகுதற்கு அவனது கர்மம் காரணமாகாது என்பது பொருள். அறிவு அதிகமாதற்குஏற்பப் பயனும் அதிகமாதலை,

“யதேவ வித்யயா கரோதி ... ... ததேவ வீர்யவத்த-
ரம் பவதி”

“(ஒருவன்) எதனை ஞானத்தோடு செய்கின்றானோ, ......
அதுதான் அதிகநலமுடையதாகும்”—(சா - க - க - ௧௦)

என்னும் சுருதியினாலும்

“உலகத்திலே, ரத்நம் விற்பவரான நகைவியாபாரியும் நாட்டுப்புரத்தானுமாகிய இவ்விருவருள், முந்தினவன் அந்த ரத்நத்தைப்பற்றி அதிகமாக அறிந்திருப்பதனாலன்றோ பிந்தினவனைக்காட்டிலும் அதிகமான பணத்தைப் பெறுகிறான்”

என்னும் பாஷ்யத்தினாலும் கண்டுகொள்க. (௧௦)

கக.

த்ருதராஷ்ட்ர உவாச—

கத²ம் ஸம்ருத்³த⁴ம்ருத்³தி⁴ம் தபோ ப⁴வதி கேவலம் ।
ஸநத்ஸுஜாத தத்³ ப்³ரூஹி கத²ம் வித்³யாம தத்³வயம் ॥

கஉ.

ஸநத்ஸுஜாத உவாச—

நிஷ்கல்மஷம் தபஸ்த்வேதத் கேவலம் பரிசக்ஷதே ।
ஏதத்ஸம்ருத்³த⁴ம்ருத்³தி⁴ம் தபோ ப⁴வதி நான்யதா² ॥

கங.

தபோமூலமித³ம் ஸர்வம் யன்மாம் க்ஷத்ரிய ப்ருச்ச²ஸி ।
தபஸா வேத³வித்³வாம்ஸ: பரம் த்வம்ருதமாப்நுயு: ॥

கக.

இதனைக் கேட்ட

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான் :

சுத்தமான தவம் வளர்ந்ததாயினும், எப்படி நிரம்ப வளர்ந்ததாக ஆகின்றது? ஸநத்ஸுஜாதரே! நான் அதனை எப்படி அறியக்கூடும்? ப்ரபுவே! அதனை அருளிச்செய்க.

கஉ.

இதற்கு விடையை

ஸநத்ஸுஜாதர் சொல்லலுற்றார் :

(ரிஷிகள்) இந்த சுத்தமான தபஸையே குற்றமற்றதாகக் கூறுகிறார்கள். இந்த தபஸ் நிரம்ப வளர்ந்த தாகின்றது; வேறுவகையாக இல்லை.

குற்றமில்லாத தபஸே நிரம்ப வளர்வதாம். குற்றமுடைய தபஸோ அவ்வாறு வளரமாட்டாததாம் என்பது கருத்து. (கஉ)

கங.

தபஸையே புகழ்கின்றார் :

க்ஷத்திரிய! நீ எதனை(ப்பற்றி) என்னை வினவுகின்றாயோ, அந்தத் தபஸையே இதெல்லாம் வேராகக் கொண்டது. வேதத்தை யுணர்ந்தவர்கள் தபஸால், சாகாமையை இறந்தபின்பு அடைந்தார்கள்.

கச.

த்ருதராஷ்ட்ர உவாச—

கல்மஷம் தபஸோ ப்ரூஹி ஶ்ருதம் நிஷ்கல்மஷம் தப: |
ஸநத்ஸுஜாத யேநேதம் வித்யாம் குஹ்யம் ஸநாதநம் ||

கரு.

ஸநத்ஸுஜாத உவாச—

க்ரோதாதயோ த்வாதஶ யஸ்ய தோஷா:
தயா ந்ருஶம்ஸாநி ச ஸப்த ராஜந் |
ஜ்ஞாநாதயோ த்வாதஶ சாததாநா:
ஶாஸ்த்ரே குணா யே விதிதா த்விஜாநாம் ||

---

தபஸையே இதெல்லாம் வேராகக் கொண்டது - நாம் அநுபவிக்கின்ற பொருள்களெல்லாம் தபஸினாலேயே கிடைக்கின்றன என்றவாறு. (கங)

கச.

ங - கஉ - ஆம் சுலோகத்திலே குற்றமற்ற தபஸ் கூறப்பட்டது; அதிலே, குற்றமென்பது யாது? என வினாவும்பொருட்டு

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான் :

குற்றமற்ற தபஸ் கேட்கப்பட்டது. தபஸின் குற்றத்தைக் கூறுக. ஸநத்ஸுஜாதரே! நான் எதனால் இந்த என்றுமுள்ள ரஹஸ்யத்தை அறியக்கூடுமோ, (அந்தக் குற்றத்தை அருளிச்செய்க.)

எதனால் - எந்தக்குற்றங்களை அகற்றி அநுஷ்டிக்கப்படும் தபஸினால். ரஹஸ்யத்தை - ஆத்மஅறிவை. (கச)

கரு-

இதற்கு விடையை

ஸநத்ஸுஜாதர் சொல்லலுற்றார் :

கோபம்முதலான பன்னிரண்டும், அரசனே! அவ்வாறே கொடுமைகள் ஏழும் அதனது குற்றங்களாம். எவை இருபிறப்பாளர்க்குத் தெரிந்து விரிக்கப்படுகின்றனவோ, (அந்த) ஞானம்முதலிய பன்னிரண்டு குணங்களும் சாஸ்திரத்தில் (கூறப்பட்டுள்ளன).

௧௬.

𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌕𑌾𑌮𑍌 𑌲𑍋𑌭𑌮𑍋𑌹𑍌 𑌵𑌿𑌧𑌿𑌤𑍍𑌸𑌾-
𑌕𑍃𑌪𑌾𑌸𑍂𑌯𑍇 𑌮𑌾𑌨𑌶𑍋𑌕𑍌 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 𑌚 ।
𑌈𑌰𑍍𑌷𑍍𑌯𑌾 𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑌾 𑌚 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌦𑍋𑌷𑌾𑌃
𑌵𑌰𑍍𑌜𑍍𑌯𑌾𑌃 𑌸𑌦𑌾 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑍈𑌤𑍇 𑌨𑌰𑍇𑌣 ॥

---

குற்றங்கள்.

௧௬.

*இனி, கீழ்க்கூறிய குற்றங்களுள் கோபம்முதலான பன்னிரண்டு குற்றங்களையும் கூறுகிறார் :*

கோபமும், காமமும், லோபமும், மோஹமும், தாகமுடைமையும், தயையின்மையும், அஸூயையும், மாநமும், சோகமும், அவாவும், ஈர்ஷ்யையும், ஜுகுப்ஸையும், மனிதருடைய குற்றங்களாம். மனிதர்கள் இப் பன்னிரண்டையும் எப்போழுதும் நீக்கவேண்டும்.

௧. கோபம் - *ஆசை தடைப்பட்டவிடத்து எழுவதாய், வைதல் அடித்தல் முதலியவற்றிற்குக் காரணமான மனக்கொதிப்பு.* ௨. காமம் - *ஸ்திரீகள்மீது ஆசை.* ௩. லோபம் - *தேடியபொருளைத் தக்கோர்க்குக் கொடாமையில்லை கடும்பற்று.* ௪. மோஹம் - *செய்வன செய்யாதன பகுத்தறியாமை.* ௫. தாகமுடைமை - *மேன்மேலும் கிடைக்கப்பெற்றாலும் திருப்தியின்மை விவித்ஸா என்னும் பாடத்தில், விஷயரஸங்களை மேன்மேலும் அறியவிரும்புதல்.* ௬. தயையின்மை - *நெஞ்சில் இரக்கமில்லாமை* ௭. அஸூயை - *பிறருடைய குணங்களில்லை குற்றத்தை ஏற்றுதல்.* ௮. மாநம் - *தற்பெருமை, தன்னை மிக்கு மதித்தல்.* ௯. சோகம் - *வேண்டிய பொருளை இழந்தவிடத்து மனநோய்ம்மை.* ௧௦. அவா - *அநுபவிக்கப்படும் பொருள்களின்மேல் ஆதரவு.* ௧௧. ஈர்ஷ்யை - *பிறராக்கம்பொறாமை.* ௧௨. ஜுகுப்ஸை - *பிறரை இகழ்தல்; அல்லது அருவருப்பு.* இப் பன்னிரண்டு குற்றங்களும் கேடுசெய்வனவாதலால், இவையனைத்தையும் அறத் தொலைக்கும்பொருட்டு எப்பொழுதும் முயலவேண்டும் என்பது பொருள். (௧௬)

கஎ.

ஊதெகெக்ஷெஷெதெ ராஜெஂஜ உநுஷும் வயஃவாஸதெ ।
மிஷசாநொஷரம் தெஷாழ் ஜ்ரமாணாமிவ மூஹுஃ ॥

கஅ.

ஸஂஹொமஸஂவிஷிஷமெயசாநஃ
உததாநுதாவீ கூவணொஜவஸீயாநு ।
வஃஷூரஸஂஸீ வநிதாஂ வ ஜெஷா
ஊதெ வரெ ஸது நூரஸஂஸாஃவாஃ ॥

---

கஎ.

*அவற்றை ஏன் எப்பொழுதும் நீக்கவேண்டும்? எனில்,—*

அரசிற் சிறந்தோனே! மிருகங்களுடைய ஓட்டைகளைக் கண்டுபிடிக்கக் கருதும் வேடன்போல, அவர்களுடைய (ஓட்டைகளைக் கண்டுபிடிக்கக் கருதிநிற்கும்) இவை - ஒவ்வோரு மனிதனையும் சூழ்கின்றன.

*எவ்வாறு வேடனானவன் மிருகங்களுடைய மெலிவுநிலைமைகளைத் தேடி மிருகங்களைத் தொடர்ந்து கொல்கின்றானோ, அவ்வாறு இந்தக் கோபம் முதலியன மனிதருடைய மெலிவுநிலைமைகளைத் தேடி அவர்களைத் தொடர்ந்து கெடுக்கின்றன என்பது தேர்ந்தகருத்து.* (கஎ)

கஅ.

*ரு - கரு - ஆம் சுலோகத்தினுள் கூறிய கொடுமைகள் ஏழும் இன்னவை என்று சொல்லுகிறார் :*

ஸம்போகத்திலே எண்ணமுள்ளவன், விஷம்(போல) வளர்பவன், கோடுத்தபின் வருந்துபவன், கிருபணன், திண்மையில்லாதவன், இந்திரியக்கூட்டத்தைப் புகழ்பவன், மனைவியைப் பகைப்பவன்,— இந்த வேறு எழுவரும் கோடுமைவடிவன ராம்.

ஸம்போகத்திலே - *விஷயங்களை அனுபவிப்பதிலே.* விஷம்(போல) வளர்பவன் - *விஷம்போலப் பிறர்க்கு உபத்திரவத்தைச் செய்து, செல்வத்தை யடைவோன். விஷமெயசாநஃ என்னும் பாடத்தில், வெறுக்கக்கூடிய செய்கையைச் செய்து, அதனால் செல்வத்தைப் பெறுவோன் என்பது பொருள்.* கோடுத்தபின் வருந்துபவன் - *முதலில் நல்ல எண்ணத்தோடு பணம்முதலியவற்றைக் கொடுத்துப், பின்பு,*

கக.

ஜ்ஞாநம் ச ஸத்யம் ச தம: ச்ருதம் ச
அமாத்ஸர்யம் ஹ்ரீஸ்திதிக்ஷாऽநஸூயா ।
யஜ்ஞச்ச தாநம் ச த்ருதி: சமச்ச
மஹாவ்ரதா த்வாதச ப்ராஹ்மணஸ்ய ॥

---

"ஐயோ! பொருள் போய்விட்டதே!" என்று வருந்துவோன். கிருபணன் - கிடைக்கும் பொருள் இம்மியளவாயினும், அதற்காக எத்தகைய அவமானங்களையும் பொறுத்துக்கொள்ளும் தன்மையன். திண்மையில்லாதவன் - ஞானவலிமையில்லாதவன்;

"நாயமாத்மா பலஹீநேந லப்ய:"
"இந்த ஆத்மா, வலிமையில்லாதவனால் அடையவொண்ணாதது"—(மு - ௩ - ௨ - ௪)

என்னும் சுருதியினா லென்க. மனைவியை - கணவனைக்காட்டிலும் வேறுகதியில்லாத மனையாளை. வேறு - கீழ்க்கூறிய கோபம்முதலியவற்றிற்கு வேறான. (கஅ)

குணங்கள்.

கக.

௩ - கரு - ஆம் சுலோகத்தினுள் கூறிய ஞானம்முதலிய குணங்கள் இன்னவை என்று சொல்லுகிறார்:

ஞானம், ஸத்யம், அடக்கம், கல்வி, மாத்ஸர்யமின்மை, நாணம், பொறுமை, அஸூயையின்மை, வேள்வி, கொடை, தைர்யம், அமைதி, —(இப்) பன்னிரண்டும் ப்ராஹ்மணனுக்குப் பெரிய விரதங்களாம்,

ஞானம் - உண்மைப்பொருளை யுணர்தல். ஸத்யம் - ப்ராணிகட்கு ஹிம்சையில்லாது ஹிதத்தோடுகூடிய செய்தியை உள்ளபடி கூறுதல். அடக்கம் - நாக்கு, உபஸ்தம் முதலியவற்றை அடக்குதல். கல்வி - ஆத்மநூல்களைப் படித்தல். மாத்ஸர்யமாவது - பிறரது குணங்களைப்பொறாமை; அஃதில்லாமை - மாத்ஸர்யமின்மை. நாணம் - செய்யாதன செய்தலிலே மனம் மடங்குதல். பொறுமை - குளிர் வெப்பம் முதலிய த்வந்த்வங்களைப் பொறுத்தல்; அல்லது, கோபித்தற்குக் காரணமுள்ளவழியும் அதனைக்கிளப்பாமை. அஸூயையின்மை - பிறரது குற்றங்களை

உ௦.

யஸ்மிந்நேதாநி ஸர்வாணி ஆத்மஸ்தாநி ஸுஜாநதம் ।
குர்வந்தி பாபகர்மாணி ந ஸ வேத்தி ந ஸித்யதி ॥

உக, உஉ, உ௩.

ஶோகக்ரோதஶ்ச லோபஶ்ச காமோ மாநஸ்ததைவ ச ।
அமர்ஷோ மத்ஸரஶ்சைவ ஈர்ஷ்யா ச கருணாऽப்யதோ ॥
லோகாநாம் தர்ஶநம் ப்ராப்ய மாநுஷ்யே து துரத்யயா ।
ஏதே தோஷா நராணாம் வை வர்ஜநீயா மஹாத்மநா ॥

வெளிப்படுத்தாமை. ... ... ... ... தைர்யம் - எத்தகைய ஆபத்திலும் நல்லொழுக்கத்தை விடாமை. அமைதி - மனஅடக்கம். ப்ராஹ்மண னுக்கு-ப்ரஹ்மத்தை யடையக் கருதுமவனுக்கு. பெரிய விரதங்களாம்- உறுதியான நன்மையைப்பெறுதற்கு ஸாதனங்களாம் என்றவாறு.(கக)

உ௦.

இந்த குணங்களைப் புகழ்கின்றார் :

எவன் இப்பன்னிரண்டும் இல்லாதவனாய் இல்லையோ, அவன் இப் பூமியனைத்தையும் ஆளுவான். (அவற்றுள்) மூன்றையாயினும், இர ண்டையாயினும், ஒன்றையாயினும் உடையவர் வரவர மேலானவராகி ப்ரஹ்மமாக ஆகிறார்கள்.

இப் பன்னிரண்டும் - கீழ்க்கூறிய ஞானம்முதலிய பன்னிரண்டு குணங்களும். மேலானவராகி - ஞானிகளாகி. இச் சுலோகத்தின் சொ ற்பொருளை பதவுரையில் காண்க. (உ௦)

அடக்கத்தைக் கெடுக்கும் குற்றங்கள்.

உக, உஉ, உ௩.

இனி, அடக்கத்திற்கு ஆகாத கசடுகளைக் கூறுகிறார் :

அடக்கமென்பது பதினெட்டுக் குற்றங்களை யுடையதாகும். (அவற் றுள், யாதாயினும் ஒன்றைச்)செய்தவிடத்துத் தீங்கு நிகழும். (அக் குற் றங்கள்) - பொய், கோட்சொல்லல், அவா, மாறுகொள்ளல், அஜ்ஞானம், சந்தோஷமின்மை, ஊரார்பகை, செருக்கு, கலகம்செய்தல், ப்ராணிகளை

அஸூயா பாபக்ருத்யம் ச ஹிம்ஸா சேதி ப்ரகீர்த்திதா: ।
ஏதைர்தோஷைர்விநிர்முக்தோ ய: ஸ தம: ஸத்பிருச்யதே ॥
உ௩.
மதோऽஷ்டாதஶதோஷ: ஸ்யாத் த்யாகோ பவதி ஷட்விதம்: ।
உச.
விபர்யயா: ஸ்ம்ருதா ஏதே மததோஷா உதாஹ்ருதா: ॥

---

வருத்துதல், வைதல், அலப்பு, பரிதபித்தல், போறுமையின்மை, தைர்ய மின்மை, கைகூடாமை, தீயசெய்கை, கோல்லுதல் எனக் கூறப்பட்டுள்ளன. இந்தக்குற்றங்களில்லாத (குணம்) எதுவோ, அது 'அடக்கம்' என்று ஸாதுக்களால் கூறப்படுகின்றது.

மாறுகோள்ளல் - யாவர்க்கும் ப்ரதிகூலமா யிருத்தல். சந்தோஷ மின்மை - திருப்தியின்மை. சேருக்கு - வணக்கமின்மை. அலப்பு - வீண்பேச்சுப்பேசுதல். பரிதபித்தல் – வீணுகத் துன்பத்தைச் சிந்தித்தல். கைகூடாமை - தர்மம், ஞானம, வைராக்யம் இவற்றைப் பெருமை. (உக, உஉ, உ௩)

இன்னும் தள்ளவேண்டிய குற்றங்களும், கோள்ளவேண்டிய குணங்களும்.

உ௩.

இனி, இறுமாப்பு என்னும் குற்றத்தையும், விட்டிடுதல் என்னும் குணத்தையும் கூறுகிறுர் :

இறுமாப்பு பதினேட்டுமுரிவுகளை யுடையதாகும். விட்டிடுதல் அறு வகைத்தாகும்.

உச.

அம் முரிவுகள் யாவை எனின்? —

மறுதலையாகக் கோள்ளப்பட்ட இவை, இறுமாப்பின் முரிவுகளாகக் கூறப்பட்டிருக்கின்றன.

உக, உஉ, உ௩ - ஆம் சுலோகங்களுள் பொய்முதலாக ஹிம்ஸை ஈருகச் சொல்லப்பட்ட குற்றங்கள் எவையோ, அவற்றிற்கு மாருன ஸத்யம்முதலியவை இறுமாப்பிற்கு முரிவுகளாம், இறுமாப்பைத் தொலைப்பனவாம் என்பது பொருள். இனி, அந்த ஸத்யம்முதலியவை வருமாறு :— க. ஸத்யம், உ. கோட்சொல்லாமை, ௩. அவாவி

உ௫.

ஶ்ரேயாம்ஸ்து ஷட்விதஸ்த்யாக: த்ருதீயஸ்து ஸுதுஷ்கர: ।
தேந து:கம் தரந்த்யேவ ப்ரஸ்மிந் த்யக்தே ஜிதம் பவேத் ॥

உசு, உஎ.

அர்ஹதே யாசமாநாய ப்ரதேயம் யச்ச வை ப்ரதிம் ।
இஷ்டாபூர்தம் த்விதீயம் ஸ்யாத் நித்யம் வைராக்யயோகத: ॥
காமத்யாகஸ்து ராஜேந்த்ர ஸ த்ருதீய இதி ஸ்ம்ருத: ॥
அப்ரமாதீ பவேதேதை: ஸ வாப்யஷ்டகுணோ மத: ॥

---

ன்மை, ச. மாறுகொள்ளாமை, ரு. ஞானம், சு. ஸந்தோஷம், எ. ஊரார்பகையின்மை, அ. செருக்கின்மை, கூ. கலகஞ்செய்யாமை, க௦. ப்ராணிகளை வருத்தாமை, கக. வைதலில்லாமை, கஉ. வீண் பேச்சுப்பேசாமை, க௩. பரிதபித்தலில்லாமை, கச. பொறுமை, க௫. தைர்யம், கசு. கைகூடுதல், கஎ. தீயசெய்கையில்லாமை, கஅ. ஹிம்ஸியாமை. (உச)

உ௫.

உ௩ - ஆம் சுலோகத்தினுள் "விட்டிடுதல் அறுவகைத்து" எனக் கூறப்பட்டது; அதனை அருளிச்செய்கிறார்:

அறுவகைத்தான விட்டிடுதேலும் சிறந்ததாம். அவற்றுள், மூன்றுவது செய்தற்கரியது. அதனால் (மனிதர்கள்) துன்பத்தைக் கடந்தே விடுகிறார்கள். அதனைச் செய்தவிடத்து (எல்லாம்) வெல்லப்பட்டதாகும்.

துன்பத்தை - ஆத்யாத்மிகம் முதலான துன்பத்தை. (உ௫)

உசு, உஎ.

விட்டிடுதல் என்பதனுடைய அறுவகைகளையும், அதனால் ஆகும் நன்மையையும் கூறுகிறார்:

யாசிக்கின்ற யோக்யனுக்கு மக்களை(யும்), பொருளை(யும்), கொடுப்பது எதுவோ, (அது முதலாவது.) வேள்விமுதலியவற்றைச் செய்தலும் கிணறு குளம் முதலியவற்றை வெட்டுதலும் இரண்டாவதாம். அரசரிற் சிறந்தோனே! எப்பொழுதும் வைராக்யவழியினால் (இம்மை மறுமை) ஆசைகளை யொழித்தல் (எதுவோ), அது மூன்றுவதாக எண்ணப்பட்டுளது. இவற்றால் (ஒருவன்) தவறில்லாதவனுவான். அது எட்டுகுணங்களை யுடையதாகக் கருதப்பட்டுளது.

உ அ.

ஸத்யம் த்யாகம் ஸமாதிஶ்ச விசாரஶ்ச வைராக்யமேவ ச ।
அஸ்தேயம் ப்ரஹ்மசர்யம் ச ததாऽஸங்க்ரஹமேவ ச ॥

உகூ.

ஏவம் தோஷா தமஸ்யோக்தாஸ் தாந்தோஷாந்பரிவர்ஜயேத் ।
தோஷத்யாகாதப்ரமாதஸ்ஸ சாஷ்டகுணோமதஃ ॥

---

க. மக்களைக் கொடுத்தலும், உ. பொருளைக் கொடுத்தலும் - முதல் வகுப்பு; ந. வேள்விமுதலியன செய்தலும், ச. கிணறு தண்ணீர்ப்பந்தல் முதலியன அமைத்தலும் - இரண்டாம் வகுப்பு; ரு. இவ்வுலகஆசையை ஒழித்தலும், சா. மறுமையுலகஆசையை ஒழித்தலும் - மூன்றும் வகுப்பு. விட்டிடுதலானது இவ்வாறு அறுவகைப்பட்டுநிற்பதைக் காண்க. இவற்றால் - விட்டிடுதல்களால். அது - தவறு. (உஎ)

உ அ.

அந்த எட்டு குணங்களும் யாவை?—கூறுவோம்:

(அவை) ஸத்யமும், த்யாகமும், ஸமாதியும், ஆராய்ச்சியும், வைராக்யமும், திருடாமையும், ப்ரஹ்மசர்யமும், அவ்வாறே உடைமையில்லாமையு மாம்.

ஆராய்ச்சி - "நான் யார்?" "நான் எங்கிருந்து வந்தேன்?" என்பன முதலியவற்றை ஆராய்தல். திருடாமை - ஆத்மாவைத் திருடாமை (உ - நந); அல்லது, பொருளைத் திருடாமை. ப்ரஹ்மசர்யம் - மாதரை நினைத்தலும் பேசுதலும் முதலியனஇல்லாமை. உடைமையில்லாமை - நிலம், பணம், மனைவி, மக்கள் முதலானோரைக் கொள்ளாமை.

உகூ.

குற்றங்களைத் தவிர்க்கவேண்டும் என்று சொல்லுகிறார்:

இவ்வாறு அடக்கத்தின் குற்றங்கள் கூறப்பட்டன; அக் குற்றங்களைத் தள்ளவேண்டும். குற்றங்களைத் தள்ளினவழி, தவறின்மை உண்டாகும். அதுவும் எட்டு குணங்களை யுடையதாகக் கருதப்பட்டுளது.

இந்த எட்டுகுணங்களையும் உஅ - ஆம் சுலோகத்தினுள் காண்க.

௨௦.

𑌸𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑌵 𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌸𑌤𑍍𑌯𑍇 𑌲𑍋𑌕𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃।
𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌸𑌤𑍍𑌯𑌮𑍁𑌖𑌾𑌨𑌾𑌹𑍁𑌃 𑌸𑌤𑍍𑌯𑍇 𑌹𑍍𑌯𑌮𑍃𑌤𑌮𑌾𑌹𑌿𑌤𑌮𑍍 ॥

௨௧.

𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌨𑍈𑌵 𑌦𑍋𑌷𑍇𑌣 𑌤𑌪𑍋𑌵𑍍𑌰𑌤𑌮𑌿𑌹𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 ।
𑌏𑌤𑌦𑍍𑌧𑌾𑌤𑍃𑌕𑍃𑌤𑌂 𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌸𑌤𑍍𑌯𑌮𑍇𑌵 𑌸𑌤𑌾𑌂 𑌵𑍍𑌰𑌤𑌮𑍍 ॥

௨௨.

𑌦𑍋𑌷𑍈𑌰𑍇𑌤𑍈𑌰𑍍𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌤𑍁 𑌗𑍁𑌣𑍈𑌰𑍇𑌤𑍈𑌃 𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌮𑍍
𑌏𑌤𑌤𑍍𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌮𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌤𑌪𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌕𑍇𑌵𑌲𑌮𑍍 ॥

---

௨௦.

*அடக்கமும், விட்டிடுதலும், தவறின்மையும் கூறப்பட்டன; இனி, அவற்றிற்கு முதன்மையான ஆதாரம் ஸத்யமேயாம் என்பதை விவரிக்கிறார் :*

அரசிற்சிறந்தோனே! ஸத்யத்திலேயே சித்தமுடையவனாக இருக்கக்கடவாய். உலகங்கள் ஸத்யத்திலே நிலைத்திருக்கின்றன. அவற்றிற்கு ஸத்யமே ப்ரதானமாம். ஸத்யத்திலேயன்றோ சாகாமை சார்ந்துளது.

அவற்றிற்கு - *அடக்கம், விட்டிடுதல், தவறின்மை என்பவற்றிற்கு.* சாகாமை - *மோக்ஷம்.* (௨௦)

௨௧.

*குற்றங்களுடைய நீக்கத்தினாலேயே தபஸ் நன்கு கைகூடுகின்றது என்பதைக் கூறுகிறார் :*

குற்றம்நீங்கியே, தபோவ்ரதத்தை இங்கு அனுஷ்டிக்கவேண்டும். இது, படைப்பவனால் அமைக்கப்பட்ட ஒழுக்கம். ஸத்யமே ஸாதுக்களுக்கு வ்ரதம்.

குற்றம் - *கீழ்க்கூறிய கோபம்முதலிய தோஷம்.* படைப்பவனால் - *ஈச்வரனால்.* (௨௧)

௨௨.

*இனி, ௨ - ௧௧ - ஆம் சுலோகத்தில் தொடங்கிய விஷயத்தை முடிக்கிறார் :*

இக் குற்றங்களால் நீங்கப்பெற்றதாகி இக் குணங்களோடுகூடிய இந்தச் சுத்தமான தவம் வளர்ந்ததாயினும், ஓங்கிவளர்ந்த தாகின்றது.

௩௩.

ய-நூ◦ வ்ருஷவி ராஜெ◦ஷ்ர வெ◦க்ஷெவா தஷ வீமி தெ।
வண தத்த்வவஹர◦ ம◦ஙஷ் ஜநூஜ்ந்ருஜராவஹம்॥

௩௪.

ஹ◦ஜீ ரயெஹ்யூ வ◦வஹ்: உநஷயெ்ஷவ ஹாரத।
ஈதீதா நாமதெஹ்யூ உ◦க்தெஷ்த ஸ◦வீ ஹவெஜ॥

---

குற்றங்களால் - கீழ்க்கூறிய கோபம் முதலியவற்றால். குணங்க ளோடு - கீழ்க்கூறிய ஞானம்முதலியவற்றோடு. (௩௨)

௩௩.

*விரித்துச் சொல்லி என்ன?—*

அரசிற் சிறந்தோனே! நீ எதனைப்பற்றி என்னை வினவுகின்றாயோ, அதனை நான் உனக்குச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன்: இது பாவத் தைப் போக்குவது, சுத்தமானது, பிறப்புஇறப்புமூப்புக்களைத் தொலைத் திடுவது.

இது - இனி ௩௪ - ஆம் ச்லோகத்தினுள் கூறப்படுவது. (௩௩)

௩௪.

*அது யாதெனில்,— அருளிச்செய்கிறார்:*

பாரத! ஐந்து இந்திரியங்களினின்றும், மனத்தினின்றும், சென்ற னவற்றினின்றும், வருவனவற்றினின்றும் நீங்கியவனாயின், அவனே சுகி யாவான்.

*கண் செவி முதலிய ஐந்து இந்திரியங்களினின்றும் ஆறாவதான மனத்தினின்றும் அவ்வவற்றிற்கு உரிய விஷயங்களிலே விருப்புவெறுப் புக்களா லாகும் தவறுகள் ஆறு; இறந்தபுத்ரசோகத்தாலும், இழ ந்தபணமயக்கத்தாலும், இவைபோன்ற பிறவற்றாலும் உண்டாகும் தவ று ஒன்று; பொருள் மக்கள் முதலானோரை யடையாவழிப் படும் தொந்தரவினா லாகும் தவறு ஒன்று. ஆக இவ்வெட்டுத் தவறுகளி னின்றும் தப்புவோனுக்கே ஸுக மென்பது.* (௩௪)

ப்ராஹ்மணன் [ப்ரஹ்மத்தை யறிந்தவன்].

*இவ்வாறு ஞானத்திற்கு ஸாதநங்கள் கூறப்பட்டன; இனி, அந்த ஸாதநங்களால் ஞானமுதிக்கப்பெற்றவன் யாவன்? என்பதைத் தெ ரிய விரும்பியவனாய்*

௩௫, ௩௬.

த்ருதராஷ்ட்ர உவாச—

ஆக்யாநபஞ்சமைர்வேதைர் பூயிஷ்டம் கத்யதே ஜந: |
ததா சாந்யே சதுர்வேதாஸ் த்ரிவேதாஸ்ச ததாபரே ||

த்விவேதாஸ்சைகவேதாஸ்ச அந்ருசஸ்ச ததாபரே |
தேஷாம் து கதம: ஸ்வித்ஸ்யாத் யமஹம் வேத ப்ராஹ்மணம் ||

---

௩௫, ௩௬.

திருதராஷ்டிரன் சொல்லலுற்றான் :

ஒருவன், இதிஹாஸபுராணங்களை ஐந்தாவதாகக்கொண்ட வேதங்களால் மிகப் பெருமைபாராட்டுகிறான்; அப்படியே, சிலர் நான்குவேதமுடையவர்; அவ்வாறே, சிலர் மூன்றுவேதமுடையவர்;

அப்படியே, சிலர் இரண்டுவேதமுடையவர்; சிலர் ஒருவேதமுடையவர்; சிலர் ரிக்இல்லாதவர். இவருள் மேலானவனை, எவனை நான் ப்ராஹ்மணனாக அறியலாமோ (அவனை), எனக்கு அருளிச்செய்க.

"ஆதர்வணம் சதுர்த்தம் இதிஹாஸபுராணம் பஞ்சமம்"

"ஆதர்வணம் நான்காவது; இதிஹாஸபுராணம் ஐந்தாவது"—(சா - எ - க - உ)

என்னும் சுருதியினால், இதிஹாஸபுராணங்கள் ஐந்தாம் வேதம் எனப்படும். மனிதர்கள்,—ரிக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் ஆதர்வணவேதம் என்றவற்றோடு இதிஹாஸபுராணங்களையும் கற்றவர் சிலரும், அவற்றுள் நான்கு வேதங்களைமாத்திரம் கற்றவர்சிலரும், மூன்று வேதங்களைமாத்திரம் கற்றவர் சிலரும், இரண்டு வேதங்களைமாத்திரம் கற்றவர் சிலரும், ஒரு வேதத்தைமாத்திரம் கற்றவர் சிலரும், ரிக்வேதம் முதலிய ஒருவேதத்தையேனும் கல்லாதவர் சிலருமாய் இருக்கிறார்கள்; அவரில் மேலானவனைக் கூறவேண்டும், ப்ரஹ்மத்தைக் கண்டறிந்தவன் எவனோ அவனை இன்னான் என்று சொல்லவேண்டும் என்பது பொருள். (௩௫, ௩௬)

௩௭, ௩௮.

ஸநத்ஸுஜாத உவாச—

ஏகஸ்ய வேதஸ்யாஜ்ஞாநாத் வேதாஸ்தே பஹவோ(அ)பவந் |
ஸத்யஸ்யைகஸ்ய ராஜேந்த்ர ஸத்யே கஶ்சிதவஸ்தித: ||
ஸத்யாத்ப்ரத்யவஸந்நாநாம் ஸங்கல்பா விததா பவந் |
தத: கர்ம ப்ரதாயேத ஸத்யஸ்யாநவதாரணாத் ||

---

௩௭, ௩௮.

இனி ப்ராஹ்மணனை [ப்ரஹ்மத்தை யுணர்ந்தவனை] விரிவாகச் சிறப்பித்துக் கூறுபவராய், முதலில், அவனது அருமையைக் காட்டுகிறார் :

ஒரேஅறிவான ஒரேஉண்மையை அறியாமையினாலன்றோ அந்த வேதங்கள் பல வாயின. அரசரிற் சிறந்தோனே! ஒருவன் உண்மையிலே நிலைத்தவ னுவான்.

உண்மையினின்றும் தவறியவர்களுடைய எண்ணங்கள் வீணாகின்றன ; அங்ஙனம் உண்மையினை அறியாமையினால் கர்மம் விரிந்துளது.

“ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம”

“ப்ரஹ்மம் உண்மையானது, அறிவானது, முடிவில்லது”

—(தை - உப - ௨ - ௧)

எனக் கூறப்படும் மெய்ப்பொருளை உணர்த்தும்பொருட்டு வேதங்கள் பலவகையாக ஆராய்ச்சி செய்கின்றமையால், அநேகங்களாம் என்க. ப்ரஹ்மத்தில் நிலைத்தல் அரிதென்பார் “ஒருவன் உண்மையிலே நிலைத்தவ னுவான்” என்றார். வே - கி - ௭ - ௩ - ஆம் சுலோகத்தைப் பார்க்க. அந்த - கீழ்க்கூறிய. (௩௭)

அநாத்மாவான உடம்புமுதலியவற்றையே ஆத்மாவாகக்கொண்டவர் உண்மைப்பொருளை உணரமாட்டாதவராய், ஆதலால் தமது எண்ணங்களெல்லாம் நிறைவேறப்பெறாது நிற்கிறார்கள் ; நிற்கவே, இம்மைக்காக மறுமைக்காகச் செய்யவேண்டிய கர்மங்கள் அவர்கட்கு அளவில்லாது பரந்து கிடப்பனவே யாகின்றன என்பது பொருள். (௩௮)

இவ்வாறு ஞானியினது அருமையைக் காட்டி, இப்பொழுது அவனது லக்ஷணத்தை அருளிச்செய்கிறார் :

௩௯.

விச்வாஸ்யைவம் தம் தஸ்யைவாஸீதி ப்ராஹ்மணம் |
ய ஏவ ஸத்யாந்நாபைதி ஸ ஜ்ஞேயோ ப்ராஹ்மணஸ்த்வயா ||

௪௰.

ச²ந்தாம்ஸி நாம த்விபதாம் வரிஷ்ட²
ஸ்வச்ச²ந்தயோகேந பவந்தி தத்ர |

---

௩௯.

அந்த மிகப்படித்த ப்ராஹ்மணனை 'சோல்மிகுந்தவன்' என்று அறிய வேண்டும். எவனே உண்மையினின்றும் கலையமாட்டானோ, அவனை(யே) நீ ப்ராஹ்மணனாக அறியக்கடவாய்.

அந்த - ஐந்து வேதங்களையும் படித்திருக்கின்ற ப்ராஹ்மணவர்ணத்தான் முதன்மையான ப்ராஹ்மண னல்லன்.—மற்றென்னவெனில்,—ஆநந்தஅறிவான தனி முதற்பொருளாகிய ப்ரஹ்மமான ஆத்மாவாகவே எவன் தன்இயல்பிலே நிற்கின்றானோ, அவனே முதன்மையான ப்ராஹ்மணனும். அவ்வாறே, சுருதியானது ப்ரஹ்மத்தை யறிந்தவனையே ப்ராஹ்மணனாகக் காட்டுகின்றது :

"ஆமௌநம் ச மௌநம் ச நிர்விச்யாத² ப்ராஹ்மணஃ"

"அமௌநத்தையும், மௌநத்தையும் மிச்சமில்லாது செய்தபின்பு ப்ராஹ்மண னாகிறான்"—(ட்ரு - ௩ - ௫ - ௧)

'விபாபோ விரஜோऽவிசிகித்ஸோ ப்ராஹ்மணோ பவதி"

"பாவமும் காமமும் நீங்கிச் சம்சயமற்றவனாய் ப்ராஹ்மண னாகிறான்"—(ப்ரு - ௪ - ௪ - ௨௩) (௩௯)

௪௰.

ஆக்ஷேபம் :—ஆயின், அந்த ப்ரஹ்மமே அமைந்தாலன்றோ இது இவ்வாறாகும்; ப்ரஹ்மமோ அமைத லில்லை. ஏனெனில், வேதங்கட்குப் பொருள் ப்ரஹ்ம மன்று ; வேறு எதோ ஒன்றாம் எனில்,—

ஸமாதாநம் :— கூறுவோம் :

மனிதரில் உயர்ந்தோனே! வேதங்கள் தமது இஷ்டப்படியே அதில் இருக்கின்றன. ஆகவே, வேதங்களை யறியும் பண்டிதர்கள் அவற்றை

ஸஹோவிஷயேந து தாநயீத<br>மதா ஹி வேஷவஸ்ய ந வேஷ்யஶாயமூ: ||

ஆராய்ச்சிசெய்து அறிவையே அடைகிறார்கள்; அறியப்படுவதை (யடைவ)தில்லை.

அதில் - ப்ரஹ்மத்தில். அறிவை - அறிவான ப்ரஹ்மத்தை. அறியப்படுவதை - ப்ரபஞ்சத்தை. மனிதர்களால் வேண்டப்படுவது, நிலையுள்ளதாய் சுத்தமாய் இன்பமா யிருக்கும் பொருள்; நிலையில்லதாய் அசுத்தமாய்த் துன்பமா யிருக்கும் பொருளோ, மனிதர்களால் வேண்டப்படாத தாம். ஆகவே, அவர்களால் வேண்டப்படுகின்ற அத்தகைய பொருள் இன்னது என்பதையும், அதனை யடைதற்கான வழிகளையும் வேதங்கள் தாமாகவே உணர்த்துகின்றமையால், அவ்விஷயத்திலே ப்ரமாண மாகின்றன. அவ்வண்ணமே,

"ஸவெவூ வெஶா யதூஶாஶநஜி"

"வேதங்களெல்லாம் எந்த நிலையை உணர்த்துகின்றனவோ"—(கட - உ - கரு)

என்னும் சுருதியையும்,

"வெஷெஶ்ஸ ஸவெவூாஹஜெவ வெஷ்யூ:"

"எல்லா வேதங்களாலும் நானே அறியக்கூடியவன்"—(வே - கீ - கரு - கரு)

என்னும் ஸ்மிருதியையும் காண்க. மற்றையது வெளிப்படை. (௪0)

அப்பொழுது வேதங்களைக்கொண்டு பரம்பொருளை அறியக்கூடு மாயின்,—

"அநூஜெவ தஜிஷிதாஷயொ அவிஷிதாஷயி"

"அது, அறியப்பட்டதற்கு வேறானதே; அறியப்படாததற்கும் வேறானதே"—(கேந - க - ௩)

"யதொ வாவொ நிவதூதெ | அவூாவூ ஶநஸா ஸஹ |"

"சொற்கள் மனத்தோடுகூட (எதனை) யடையாது, எதனினின்று திரும்புகின்றனவோ"— (தை - உப - உ - ௪)

என்பனமுதலான சுருதிகட்கு விரோத மாகும் எனில்,— ஸமாதானம் கூறுவோம்:

சக.

ந வெதா நாம் வெதிதா கஸ்சிதஸ்தி
வெதெந வெதம் ந விதுர்ந வெத்யம் ।
யோ வெத வெதம் ஸ ச வெத வெத்யம்
யோ வெத வெத்யம் ந ஸ வெத ஸத்யம் ॥

சக.

வேதங்களுள் ஒன்றும் (பரம்பொருளை) அறிவதாயில்லை. வேதத்தால் அறிவை அறிவதில்லை: அறியப்படுவதை(யும்) அறிவதில்லை. எவன் அறிவை அறிகின்றானோ, அவன் அறியப்படுவதை அறிகின்றான். எவன் அறியப்படுவதை அறிகின்றானோ, அவன் உண்மையை அறியமாட்டான்.

அறிவை - அறிவுவடிவான பரமாத்மாவை. அறியப்படுவதை - ப்ரபஞ்சத்தை. ரிக்வேதம்முதலிய வேதங்களுள் ஒருவேதமாயினும், அறிவுவடிவாய் வாக்குமனங்களைக் கடந்துநிற்கும் பரம்பொருளை அறிவதில்லை.—ஏன்?—ரிக்முதலானவடிவமாய் ஜடமான வேதத்தால் அறிவான ஆத்மாவை அறிதலேலாது, அவ்வாறே ப்ரபஞ்சத்தையும் அறிதலேலாது; எதுவும் அமைதல் அறிவைச் சார்ந்துள்ளமையின். ஆதலால், ஒன்று அமைதலென்பது அறிவைச் சார்ந்துநிற்றலால், அறிவான ப்ரஹ்மமாகிய ஆத்மாவை அறிபவனே அனைத்தையும் அறிபவனுவான். அவ்வாறே, சுருதி கூறுகின்றது:

“ஆத்மநா........விஜ்ஞாதெநெதம் ஸர்வம் விதிதம்॥”

“ஆத்மாவை யறிவதனால் இதெல்லாம் அறியப்பட்டதாகின்றது”—(ப்ரு - உ - ச - ரு)

எவன் வெளியிலுள்ள மரம்மலை முதலிய அநாத்மப்பொருள்களை அறிகின்றானோ, அவன் உண்மையை அறிவதில்லை. அவ்வாறே, சுருதி கூறுகின்றது:

“பராங் பஸ்யதி நாந்தராத்மந்”

“வெளியே பார்க்கிறான்; உள்ளேயுள்ள ஆத்மாவைப் பார்ப்பதில்லை”—(கட - ச - க) (சக

௪௨.

யொ வெஜ வெஜாஙூ௯ வெஜ வெஜ்ஹ்

ந தம் விஜுர்வெஜவிஜொ ந வெஜாஃ ।

ததாபி வெஜெந விஜந்தி வெஜ்

யெ ஸ்ராஹ்மணா வெஜவிஜொ ஹவந்தி ॥

௪௩.

யாசாம்ஸசாமவஸ் ததா ஹி வெஜாஃ

யதா ச ஸாவா ஹி உஹீரூர்ஹவஸ் ।

---

௪௨.

அன்றியும்,

எவன் வேதங்களை அறிகின்றானோ, அவன் அறியப்படுவேதை யறிகின்றான். வேதங்களை யறிந்தவர் அதனை யறிவதில்லை ; வேதங்கள் அதனை யறிவதில்லை. ஆயினும், எந்த ப்ராஹ்மணர்கள் வேதத்தை யுணர்பவராய் இருக்கிறார்களோ, (அவர்கள்) வேதத்தால் அறிவை யறிகிறார்கள்.

அறியப்படுவேதை - ப்ரபஞ்சத்தை அதனை - ப்ரஹ்மத்தை. அறிவை - அறிவுப்பொருளான உண்மையை. வேதங்களைப் பாடமாத்திரத்தால் அறிந்தவர் இந்த ப்ரபஞ்சத்தைக் காணுமாறுபோல, ப்ரஹ்மத்தைக் காணுதல் இயலாது. வாக்குமனதீதமான அந்த ப்ரஹ்மம் வேதங்கட்கும் எட்டாதது. எட்டாத தாயினும், வேதத்தைக்கொண்டே அதனைக் கண்டுணர்கிறார்கள்.—யார் ?— வேதங்களைப் பாடத்தினும் அர்த்தத்தினும் அநுஷ்டானத்தினும் அறிந்தவர்கள், ப்ரஹ்மத்தை உணர்த்துகின்ற அவற்றின் வகையைத் தெளிந்து அதற்குஏற்ப வாழ்பவர்கள் என்க. (௪௨)

௪௩.

அப்பொழுது, ஒன்றுக்கும் எட்டாத ப்ரஹ்மத்தை வேதங்கள் உணர்த்துகின்றன என்பது எப்படி ? — இதனை, சாகாசந்திரநியாயத்தினால் விளங்கக் காட்டுகிறார் : [சாகா - மரத்தின் கொப்பு]

எப்படி ஒருமரத்தின் கோப்பானது சந்திரனுடைய ஒருகலையை உணர்த்துவதிலே (ஸாதநமாகின்றதோ), அப்படியே வேதங்கள் பரமாத்மாவை உணர்த்துவதிலே (ஸாதநமாகின்றன) ; அந்த அழியாத புருஷார்

ஸம்வேதநே சைவ யதாம்நாதமுக்தி
தஸ்மிந் திஷ்டந்தி ப்ரவதாம் வரிஷ்டா: ||

சச.

அபிஜாநாமி ப்ராஹ்மணம் வ்யாக்யாதாரம் விசக்ஷணம் |
யச்சிந்நவிசிகித்ஸஸ்ஸந் வ்யாசஷ்டே ஸர்வஸம்ஶயாந் ||

சரு.

நாஸ்ய பர்யேஷணம் கச்சேத் ப்ரத்யர்திஷு கதாசந |
அவிசிந்வந்நிமம் வேதே தத: பஶ்யதி தம் ப்ரபும் ||

---

த்தத்திலே இவ்வாறு (வேதங்கள் பயன்படுகின்றன என்று ரிஷிகள்) கூறுகிறார்கள்.

ஒருகலையை - பூர்வபக்ஷத்து ப்ரதமாதிதியிலுள்ள முதல் பிறையை. அந்த - ப்ரஹ்மத்தை உணர்தலாகிய. (சங.)

சச.

இவ்வாறு ப்ரஹ்மத்தைக் கண்டு தேறியவனே ப்ராஹ்மணன் எனப்படுவான் :

உரைக்கின்ற ஸமர்த்தனை ப்ராஹ்மணனாக அறிகின்றேன். எவன் சம்சயமற்றவனோ, அவன் எல்லா சம்சயங்களையும் விவரிக்கிறான்.

உரைக்கின்ற - முதலுக்கும் முடிபிற்கும் ஒற்றுமைகாட்டுதல் முதலியவற்றால் மகாவாக்யப்பொருளை வர்ணித்தலிலே தேர்ச்சியுடைய. ஸமர்த்தனை - வேதப்பொருளை யுக்தியொடு சிந்தித்தலிலே சாமர்த்தியமுள்ளவனை. சம்சயமற்றவன் - நிதித்யாஸநமுதிர்ச்சியினால் ஸந்தேகம் நீங்கப்பெற்றவன். எல்லா சம்சயங்களையும் விவரிக்கிறான் - பிறருடைய எத்தகைய ஸந்தேகங்களையும் போக்குகிறான் என்றபடி. (சச)

ப்ராஹ்மணனுதற்கு வழிகள்.

சரு.

அத்தகைய ப்ராஹ்மணனுதற்கு உபாயங்கள் யாவை? — கூறுவோம் :

(ஒருவன் தனது) விரோதிகளிடத்து இதனைத் தேடிச்செல்லுதல் ஒருகாலும் கூடாது. (அவன் அதனை) அங்கே தேடாதவனாய், அந்த இப்பிரபுவை வேதத்தால் காண்கிறான்.

சசு.

தஞுஷீஂஹஞுத உவாஷீத ந வெஷெ-நூநஷா சுவி ।
சுஹ்ராவதெ-ுத ஸு்ஹூாzவெஷூ வஷ்ஹ நஞுரஶாநு-யாசு ॥

சஎ.

ஶா நாஷீ வ ஶ-நிஹ-ுவதி நாzரணு்வவஸநா-நூ-ஜீஃ ।

---

இதனை - ஆத்மாவை. வேதத்தால் - "தத் த்வமஸி" முதலான் வாக்கியங்களால். ஓசை உருவம் முதலான விஷயங்கள், வெளிப்பகைவர்; உடம்பு இந்திரியங்கள் முதலியவை, உள்பகைவர். பகைவரான ஓசைமுதலியவற்றையாயினும், உடம்புமுதலியவற்றையாயினும், அவற்றினது தன்மைகளேயாயினும் ஆத்மாவாக மயங்குதல் கூடாது. அவ்வாறு மயங்காதவனே சுருதியினால் ஆத்மாவை அறியக்கூடும், பரம்பொருளே ஆத்மாவாகக் காணக்கூடும் என்பது கருத்து. (சரு)

சசு.

மேலும்,

மௌநியாக (ஆத்மாவைத்) தொழுதல் வேண்டும்; மனத்தாலும் அசைதல் கூடாது. இவனுக்கு ப்ரஹ்மம் எதிர்ப்படும்; பின்பு (இவன்) பூமாவைப் பெறுவான்.

ஸாதகனுக்கு ஆத்மா வெளிப்படுதலை,

"யமெவெஷ வ்ருணுதெ தெந லஹ்யஸ்தஸ்யைஷ
ஆத்மா விவ்ருணுதெ தநூம் ஸ்வாம் ॥"

"இவன் எதனையே வேண்டுகின்றானோ, அதனால் (அது) அடையத்தக்கது. இந்த ஆத்மா அவனுக்குத் தன் உடம்பை வெளிப்படுத்துகின்றது" — (கட - உ - உங)

என்னும் சுருதியினாலும் காண்க. பூமாவைப்பற்றி 90, 91 - ஆம் பக்கங்களிலுள்ள சாந்தோக்யசுருதிகளைப் பார்க்க. (சசு)

(க) ஞானியே முனிவன்.

சஎ.

முனிவனும் இவனேதான் என்று கூறுகிறார்:

(மனிதன்) மௌநத்தினாலேயே முனிவனாகிறான்; காட்டிலே வஸித்தல் (மாத்திரத்தால்) முனிவனாகமாட்டான். மற்று, (அம் முனிவரில்)

ஸாக்ஷாத்ஸம் தம் து யோ வேத ஸ ஜ்ஞானிச்ரேஷ்ட உச்யதே ||

௪௬.

ஸர்வார்த்தானாம் வ்யாகரணாத் வையாகரண உச்யதே |
தந்மூலதோ வ்யாகரணம் வ்யாகரோதீதி தத்ததா ||

௪௯.

ப்ரத்யக்ஷதர்சீ லோகானாம் ஸர்வதர்சீ பவேந்நர: |
ஸத்யே வை ப்ராஹ்மணஸ்திஷ்டந் தத்வித்வான் ஸர்வவித்பவேத் ||

---

எவன் அந்த அழியாப்பொருளை அறிகின்றானோ, அவன் "முநிச்ரேஷ்டன்" எனப்படுகிறான்.

மௌனத்தினாலேயே - ஏகாக்ரமாக ஆத்மாவைச் சிந்தித்தலென்னும் நிதித்யாஸநத்தினாலேயே. (௪எ)

(உ) ஞானியே வையாகரணன்.

௪௬.

வையாகரணனும் இவனேதான் என்று கூறுகிறார் :

(ஒருவன்) எல்லாப்பொருள்களையும் விவரித்தலால், "வையாகரணன்" எனப்படுகிறான் ; அதுமூலமாக விவரித்த லாகின்றது. ஆகவே, விவரிக்கிறான் என அவ்வாறு (அவன் கூறப்படுகிறான்).

வையாகரணன் - வ்யாகரணத்தை யுணர்ந்தவன் ; வ்யாகரணம் - விவரித்தல், சொல்லிலக்கணம் கூறுதல். அது - ப்ரஹ்மம. அவ்வாறு - வையாகரணன் என்று. சொற்களினுடைய மூலத்தைத் தெரிந்து அவற்றை விவரிப்பவனுக்கு, வையாகரணன் என்று பெயர். என்றாலும், சொல்லிலக்கணமாகிய ஏகதேசத்தை யறிந்தவன், அவன். ஞானியோ, இந்த மண் விண் முதலான அனைத்திற்கும மூலத்தை [ப்ரஹ்மத்தை]த் தெரிந்து அவற்றை விவரித்தலால், முதன்மையான வையாகரணனும் என்பது தேர்ந்த பொருள். (௪அ)

(௩) ஞானியே எல்லாம் அறிந்தவன்.

௪௯.

இப்படிப்பட்ட

மனிதன் லோகங்களை நேரே காண்பவனாய், அனைத்தையும் காண்பவனும் ; (இவ்வாறு) உண்மையில் நிற்பவனே ப்ராஹ்மணனாக, அதனை அறிந்தவனாக, எல்லாமுணர்ந்தவ னாகிறான்.

௫௦.

ஜ்ஞாநாதிஷு ஸ்தித꞉ ஸர்வேஷு க்ஷத்ரிய ப்ரஹ்ம பஶ்யதி ।
வேதாநாம் சாநுபூர்வ்யேண ஏததி வித்ரவீமி தே ॥

இதி ஶ்ரீஸநத்ஸுஜாதீயே த்ருதீயோ(அ)த்யாய꞉ ॥

---

லோகங்களை நேரே காண்பவனாய் - புல்முதலாக ப்ரஹ்மா ஈறாக வுள்ள ஸகல ப்ரபஞ்சத்தையும் ஆத்மஸ்வரூபமாகப் பார்ப்பவனாய். அதனை - ப்ரஹ்மத்தை. (சகூ)

ப்ரஹ்மத்தைக் காணுதல்.

௫௦.

இவ்வத்தியாயத்தினுள் கூறிவந்த பொருளை முடிக்கிறார் :

கற்றறிந்தோனே ! யான் உனக்கு இதனைச் சொல்லுகிறேன், (கேட்பாயாக); ஞானம்முதலியவற்றிலே இவ்வாறு நிற்பவன்தான் க்ஷத்திரிய ! வேதங்களை ஆராய்ச்சிசெய்து ப்ரஹ்மத்தைக் காண்கிறான்.

ஸ்ரீமத் ஸநத்ஸுஜாதீயத்தில் மூன்றும் அத்தியாயம் முற்றும்.

இவ்வாறு - சுகூ ஆம் சுலோகம் முதலியவற்றுள் கூறியபடி, தீயொழுக்கத்தை விட்டு, நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்தவனாய் வேதப்பொருளை ஆராய்ச்சிசெய்வோனே உண்மையினைக் காணத் தகுந்தவனாதலால், நீ அவ்வாறு முயலவேண்டும் என்பது தேர்ந்தகருத்து.

---

# மூன்றாம் அத்தியாயம்.

## பதவுரை.

க,

| | |
|---|---|
| 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌃 | திருதராஷ்டிரன் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னான் : |
| 𑌏𑌷𑌃 | இந்த |
| 𑌮𑍌𑌨𑌃 | மௌநம் |
| 𑌕𑌸𑍍𑌯 | எதற்கு ? |
| 𑌕𑌤𑌰𑌤𑍍 𑌨𑍁 | இரண்டனுள் எது |
| 𑌮𑍌𑌨𑌂 (𑌭𑌵𑌤𑌿) | மௌநமா (யிருக்கின்றது) ? |
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌨𑍍 | அறிந்தவரே ! |
| 𑌇𑌹 | இங்கு |
| 𑌮𑍌𑌨𑌭𑌾𑌵𑌂 | மௌநத்தன்மையை |
| 𑌪𑍍𑌰𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 | சொல்லுக. |
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 | கற்றறிந்தவன் |
| 𑌮𑍌𑌨𑌂 | மௌநத்தை |
| 𑌮𑍌𑌨𑍇𑌨 | மௌநத்தால் |
| 𑌯𑌾𑌤𑌿 𑌉𑌤 | அடைகின்றானா ? |
| 𑌮𑍁𑌨𑍇 | முனிவரே ! |
| (𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑌃) | (கற்றறிந்தவர்கள்) |
| 𑌇𑌹 | இங்கே |
| 𑌮𑍌𑌨𑌂 | மௌநத்தை |
| 𑌕𑌥𑌂 | எப்படி |
| 𑌚𑌰𑌨𑍍𑌤𑌿 | அநுஷ்டிக்கிறார்கள் ? |

௨.

| | |
|---|---|
| ஸநத்ஸுஜாத: | ஸநத்ஸுஜாதர் |
| உவாச | சொன்னார் : |
| யத: | எதனால் |
| வேதா: | வேதங்கள் |
| மநஸா ஸஹ | மனத்தோடுகூட |
| ஏநம் | இதனை |
| ந அநுப்ரவிஶந்தி | நுழையமாட்டாவோ, |
| தத: அத | அதனால் |
| (தத்) | (அது) |
| மௌநம் (ஸ்யாத்) | மௌந (மாம்). |
| ராஜந் | அரசனே ! |
| வேதஶப்த: | வேதவார்த்தையும் |
| அயம் ததா | இதுவும் |
| யத்ர | எதனிடத்து |
| உத்தித: | உண்டாகியுள்ளதோ, |
| ஸ: | அது |
| தந்மயேந | அதுவாகவே |
| விபாதி | விளங்குகின்றது. |

---

௩.

| | |
|---|---|
| த்ருதராஷ்ட்ர: | திருதராஷ்டிரன் |
| உவாச | சொன்னான் : |
| ய: | எவன் |
| பாபாநி | தீய செய்கைகளை |
| குர்வந் | செய்கிறவனாய் |
| ருச: | ரிக்குக்களை(யும்) |
| யஜூம்ஷி | யஜுஸ்களை(யும்) |
| அதீதே | படிக்கின்றானோ, |

| | |
|---|---|
| 𑌯𑌃 | எந்த |
| 𑌦𑍍𑌵𑌿𑌜𑌃 | இருபிறப்பாளன் |
| 𑌸𑌾𑌮𑌵𑍇𑌦𑌂 𑌚 | ஸாமவேதத்தையும் |
| (𑌤𑌥𑌾) | (அவ்வாறே) |
| (𑌅𑌧𑍀𑌤𑍇) | (படிக்கின்றானோ) |
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌪𑌾𑌪𑍇𑌨 | பாவத்தால் |
| 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌕𑌿𑌂 | பற்றப்படுகின்றானா ? |
| 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 (𑌕𑌿𑌂) | பற்றப்படுகின்றானில்லையா ? |

---

௪.

| | |
|---|---|
| 𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑌃 | ஸநத்ஸுஜாதர் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னார் : |
| 𑌸𑌾𑌮𑌾𑌨𑌿 | ஸாமங்களாயினும் |
| 𑌋𑌚𑌃 𑌅𑌪𑌿 𑌵𑌾 | ரிக்குக்களாயினும் |
| 𑌅𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌂 | ஸாமர்த்யமில்லாத |
| 𑌏𑌨𑌂 | இவனை |
| 𑌪𑌾𑌪𑌾𑌤𑍍 | பாவமான |
| 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 | கர்மத்தினின்றும் |
| 𑌨 𑌤𑍍𑌰𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 | காப்பாற்றமாட்டா ; |
| 𑌯𑌜𑍂𑌂𑌷𑌿 (𑌚) | யஜுஸ்க(ளும்) |
| (𑌏𑌨𑌂) | (இவனை) |
| 𑌨 (𑌤𑍍𑌰𑌾𑌯𑌨𑍍𑌤𑍇) | (காப்பாற்ற) மாட்டா. |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾 | பொய்யை |
| 𑌨 𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿 | சொல்லமாட்டேன். |

---

௫.

| | |
|---|---|
| 𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 | வேதங்கள் |
| 𑌮𑌾𑌯𑌯𑌾 | கள்ளத்தோடு |

| | |
|---|---|
| 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌂 | இருக்கின்ற |
| 𑌮𑌾𑌯𑌾𑌵𑌿𑌨𑌂 | மாயாவியை |
| 𑌵𑍃𑌜𑌿𑌨𑌾𑌤𑍍 | பாவத்தினின்று |
| 𑌨 𑌤𑌾𑌰𑌯𑌨𑍍𑌤𑌿 | மீட்பிக்கமாட்டா; |
| 𑌜𑌾𑌤𑌪𑌕𑍍𑌷𑌾𑌃 | இறகுமுளைத்த |
| 𑌶𑌕𑌨𑍍𑌤𑌾𑌃 | பறவைகள் |
| 𑌨𑍀𑌡𑌂 𑌇𑌵 | கூட்டை (விட்டுப்போவன) போல, |
| 𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 | வேதங்கள் |
| 𑌅𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇 | முடிவுகாலத்திலே |
| 𑌏𑌨𑌂 | இவனை |
| 𑌪𑍍𑌰𑌜𑌹𑌤𑌿 | விட்டொழிகின்றன. |

---

௬.

| | |
|---|---|
| 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌃 | திருதராஷ்டிரன் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னான் : |
| 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣 | அறிஞரே ! |
| 𑌵𑍇𑌦𑌾𑌃 | வேதங்கள் |
| 𑌧𑌰𑍍𑌮𑌂 𑌵𑌿𑌨𑌾 | தர்மமில்லாது |
| 𑌤𑍍𑌰𑌾𑌤𑍁𑌂 | (ஒருவனைக்) காப்பாற்ற |
| 𑌨 𑌶𑌕𑍍𑌤𑌾𑌃 𑌚𑍇𑌤𑍍 | வல்லன இல்லையானால், |
| 𑌅𑌥 | அங்ஙனம் |
| 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | எதனால் |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌨𑌾𑌂 | ப்ராஹ்மணர்கட்கு |
| 𑌅𑌯𑌂 | இந்த |
| 𑌪𑍍𑌰𑌲𑌾𑌪𑌃 | பேச்சு |
| 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 (𑌭𑌵𑌤𑌿) | எப்பொழுதுமுள்ள(தாகின்றது)? |

---

௭.

| | |
|---|---|
| 𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑌃 | ஸநத்ஸுஜாதர் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னார் : |

| | |
|---|---|
| 𑌮𑌹𑌾𑌨𑍁𑌭𑌾𑌵 | பெருந்தகைமையுடையவனே ! |
| 𑌇𑌦𑌂 | இந்த |
| 𑌜𑌗𑌤𑍍 | ப்ரபஞ்சம் |
| 𑌤𑌸𑍍𑌯 𑌏𑌵 | அதே (பரம்பொருளினுடைய) |
| 𑌨𑌾𑌮𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌰𑍂𑌪𑍈𑌃 | பெயர்முதலிய சிறப்புவடிவங்களால் |
| 𑌭𑌾𑌤𑌿 | விளங்குகின்றது. |
| 𑌵𑍇𑌦𑌾𑌃 | வேதங்கள் |
| 𑌤𑌤𑍍 | அதனை |
| 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 | குறிப்பிட்டு |
| 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 | நேராக |
| 𑌵𑌦𑌂𑌤𑌿 | உரைக்கின்றன ; |
| 𑌵𑌿𑌶𑍍𑌵𑌵𑍈𑌰𑍂𑌪𑍍𑌯𑌂 | ப்ரபஞ்சத்திற்கு வேறாக (வும்) |
| 𑌉𑌦𑌾𑌹𑌰𑌂𑌤𑌿 | எடுத்துக்காட்டுகின்றன. |

---

அ, கூ.

| | |
|---|---|
| 𑌤𑌦𑌰𑍍𑌥𑌂 | அதற்காக |
| 𑌏𑌤𑌤𑍍 | இந்த |
| 𑌤𑌪𑌃 | தவம் |
| 𑌉𑌕𑍍𑌤𑌂 | கூறப்பட்டது ; |
| 𑌇𑌜𑍍𑌯𑌾 (𑌚) | வேள்வி(யும்) |
| (𑌉𑌕𑍍𑌤𑌾) | (கூறப்பட்டது.) |
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 | தெரிந்த |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 | அவற்றால் |
| 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 | புண்யத்தை |
| 𑌉𑌪𑍈𑌤𑌿 | அடைகிறான் ; |
| 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇𑌨 | புண்யத்தால் |
| 𑌪𑌾𑌪𑌂 | பாவத்தை |
| 𑌵𑌿𑌨𑌿𑌹𑌤𑍍𑌯 | தொலைத்து |
| 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 | பின்பு |

| | |
|---|---|
| 𑌸𑌃 | அவன் |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌦𑍀𑌪𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 | அறிவினுல் ஆத்மாவிளங்கப்பெற்றவனுக |
| 𑌜𑌾𑌯𑌤𑍇 | ஆகிறுன். |
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 | அறிந்தவன் |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 | அறிவினுல் |
| 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 | ஆத்மாவை |
| 𑌉𑌪𑍈𑌤𑌿 | அடைகின்றுன். |
| 𑌚 | மற்று |
| 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 | மாறுனவளவிலே |
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍁𑌸𑌾𑌰𑍀 | இந்திரியப்பயனேயே தொடர்ந்து நாடும் தன்மையனுய், |
| 𑌇𑌹 | இங்கே |
| 𑌕𑍃𑌤𑌂 | செய்யப்பட்ட |
| 𑌤𑌤𑍍 | அந்த |
| 𑌸𑌰𑍍𑌵𑌂 | அனைத்தையும் |
| 𑌪𑌰𑌿𑌗𑍃𑌹𑍍𑌯 | எடுத்துக்கொண்டு |
| 𑌪𑌰𑌤𑍍𑌰 | மறுமையிலே |
| 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 | அநுபவிக்கிறுன் ; |
| 𑌪𑍁𑌨𑌃 | மறுபடியும் |
| 𑌮𑌾𑌰𑍍𑌗𑌂 | (ஸம்ஸார) வழியை |
| 𑌯𑌾𑌤𑌿 | அடைகிறுன். |

---

௧௦.

| | |
|---|---|
| 𑌇𑌹 | இந்த |
| 𑌲𑍋𑌕𑍇 | உலகத்திலே |
| 𑌤𑌪𑌃 | தவம் |
| 𑌤𑌪𑍍𑌤𑌂 | செய்யப்பட்ட (தாகின்றது) ; |

| | |
|---|---|
| ஃலம் | பயன் |
| அந்யத் | வேறு (உலகத்திலே) |
| புஜ்யதே | அநுபவிக்கப்படுகின்றது. |
| ப்ராஹ்மணாநாம் | ப்ராஹ்மணர்களுடைய |
| தப: | தவம் |
| ருத்தம் | ஓங்கி வளர்ந்த (தாகின்றது); |
| அந்யேஷாம் | மற்றையோர்கட்கு |
| தத் | அது |
| தாவத் ஏவ | அவ்வளவேதான். |

கக.

| | |
|---|---|
| த்ருதராஷ்ட்ர: | திருதராஷ்டிரன் |
| உவாச | சொன்னான் : |
| கேவலம் | சுத்தமான |
| தப: | தவம் |
| ருத்தம் அபி | வளர்ந்ததாயினும், |
| கதம் | எப்படி |
| ஸம்ருத்தம் | நன்கு வளர்ந்ததாக |
| பவதி | ஆகின்றது. |
| ஸநத்ஸுஜாத | ஸநத்ஸுஜாதரே ! |
| அஹம் | நான் |
| தத் | அதனை |
| கதம் | எப்படி |
| வித்யாம் | அறியமுடியும்? |
| ப்ரபோ | பிரபுவே ! |
| ப்ரூஹி | (அதனைச்) சொல்லுக. |

கஉ.

| | |
|---|---|
| ஸநத்ஸுஜாத: | ஸநத்ஸுஜாதர் |

| | |
|---|---|
| உவாவ | சொன்னார் : |
| (ஜஷய:) | (ரிஷிகள்) |
| ிகவஸம் | சுத்தமான |
| ஸ தத் | இந்த |
| தவ: தத் | தபஸையே |
| நிஷ்க்ருஷ்டம் | குற்றமில்லாததாக |
| வஸிவக்ஷதே | கூறுகிறார்கள். |
| ஸ தத் | இந்த |
| தவ: | தபஸ் |
| ஜஸ்ரு அவி | வளர்ந்ததாயினும், |
| ஸவ்ருஸம் | நன்கு வளர்ந்ததாக |
| ஹவதி | ஆகின்றது ; |
| அந்யா | வேறுவிதமாக |
| ந | இல்லை. |

கரு.

| | |
|---|---|
| க்ஷத்ரிய | க்ஷத்திரிய ! |
| (க்ஷம்) | (நீ) |
| யக் | எதனை (ப்பற்றி) |
| ஓம் | என்னை |
| வரூஹஸி | வினவுகின்றாயோ, |
| தவொமூலம் | (அந்தத்) தபஸையே வேராக யுடையதாய் |
| உதம் | இந்த |
| ஸவும் | எல்லாம் |
| ஹவதி) | (இருக்கின்றது.) |
| வெஉவிஷாஂஸ: | வேதத்தை யுணர்ந்தவர்கள் |
| தவஸா | தபஸினால் |
| ம்ருதம் | சாகாமையை, |

| | |
|---|---|
| ப்ரேத்ய | இறந்தபின்பு |
| ஜக்மு: | அடைந்தார்கள். |

கச.

| | |
|---|---|
| த்ருதராஷ்ட்ர: | திருதராஷ்டிரன் |
| உவாச | சொன்னான் : |
| நிஷ்கல்மஷம் | குற்றமற்ற |
| தப: | தபஸ் |
| ஶ்ருதம் | கேட்கப்பட்டது. |
| தபஸ: | தபஸினுடைய |
| கல்மஷம் | குற்றத்தை |
| ப்ரூஹி | சொல்லுக. |
| ஸநத்ஸுஜாத | ஸநத்ஸுஜாதரே ! |
| யேந | எதனால் |
| (அஹம்) | (நான்) |
| இதம் | இந்த |
| ஸநாதநம் | என்றுமுள்ள |
| குஹ்யம் | ரஹஸ்யத்தை |
| வித்யாம் | அறியக்கூடுமோ, |
| (தத்) | (அந்த) |
| (கல்மஷம்) | (குற்றத்தை) |
| (ப்ரூஹி) | (கூறுக.) |

கரு.

| | |
|---|---|
| ஸநத்ஸுஜாத: | ஸநத்ஸுஜாதர் |
| உவாச | சொல்லலுற்றார் : |
| ராஜந் | அரசனே ! |
| க்ரோதாதய: | கோபம் முதலான |
| த்வாதஶ | பன்னிரண்டும் |

| | |
|---|---|
| 𑌤𑌥𑌾 | அவ்வாறே |
| 𑌨𑍃𑌶𑌂𑌸𑌾𑌨𑌿 | கொடுமைகள் |
| 𑌸𑌪𑍍𑌤 𑌚 | ஏழும் |
| 𑌤𑌸𑍍𑌯 | அதனுடைய |
| 𑌦𑍋𑌷𑌾𑌃 | குற்றங்களாக |
| (𑌭𑌵𑌨𑍍𑌤𑌿) | (உள்ளன.) |
| 𑌯𑍇 | எவை |
| 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌂 | இருபிறப்பாளர்க்கு |
| 𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌃 | அறியப்பட்டிருக்கின்றனவோ, |
| 𑌶𑍍𑌰𑍁𑌤𑌾𑌃 𑌚 | விரிக்கப்பட்டிருக்கின்றனவோ, |
| (𑌤𑍇) | (அந்த) |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑌯𑌃 | ஞானம் முதலான |
| 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶 | பன்னிரண்டு |
| 𑌗𑍁𑌣𑌾𑌃 | குணங்களும் |
| 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 | சாஸ்திரத்தில் |
| (𑌉𑌕𑍍𑌤𑌾𑌃) | (கூறப்பட்டுள்ளன.) |

---

௧௬.

| | |
|---|---|
| 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 | கோபமும் |
| 𑌕𑌾𑌮𑌃 | காமமும் |
| 𑌲𑍋𑌭𑌮𑍋𑌹𑍌 | லோபமும், மயக்கமும் |
| 𑌵𑌿𑌧𑌿𑌤𑍍𑌸𑌾 | தாகமுடைமையும் |
| 𑌅𑌕𑍃𑌪𑌾 | தயையின்மையும் |
| 𑌅𑌸𑍂𑌯𑌾 | அஸூயையும் |
| 𑌮𑌾𑌨𑌶𑍋𑌕𑍌 | மானமும், சோகமும் |
| 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 𑌚 | அவாவும் |
| 𑌈𑌰𑍍𑌷𑍍𑌯𑌾 | ஈர்ஷ்யையும் |
| 𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑌾 𑌚 | ஜுகுப்ஸையும் |
| 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌦𑍋𑌷𑌾𑌃 | மனிதருடைய குற்றங்களாக |

| | |
|---|---|
| (𑌸𑌨𑍍𑌤𑌿) | (உள்ளன.) |
| 𑌨𑌰𑍇𑌣 | மனிதனால் |
| 𑌏𑌤𑍇 | இந்த |
| 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶 | பன்னிரண்டும் |
| 𑌸𑌦𑌾 | எப்பொழுதும் |
| 𑌵𑌰𑍍𑌜𑍍𑌯𑌾𑌃 | நீக்கப்படவேண்டும். |

கஎ.

| | |
|---|---|
| 𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 | அரசரில் சிறந்தோனே! |
| 𑌮𑍃𑌗𑌾𑌣𑌾𑌂 | மிருகங்களுடைய |
| 𑌛𑌿𑌦𑍍𑌰𑌂 | ஓட்டையை |
| 𑌲𑌿𑌪𑍍𑌸𑌮𑌾𑌨𑌃 | கண்டுபிடிக்கக் கருதும் |
| 𑌲𑍁𑌬𑍍𑌧𑌕𑌃 𑌇𑌵 | வேடன்போல, |
| 𑌤𑍇𑌷𑌾𑌂 | அவர்களுடைய |
| (𑌛𑌿𑌦𑍍𑌰𑌂) | (ஓட்டையை) |
| (𑌲𑌿𑌪𑍍𑌸𑌮𑌾𑌨𑌾𑌃) | (கண்டுபிடிக்கக்கருதும்) |
| 𑌏𑌤𑍇 | இவை |
| 𑌏𑌕𑍈𑌕𑌂 | ஒவ்வொரு |
| 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌂 | மனிதனையும் |
| 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 | சூழ்கின்றன. |

கஅ.

| | |
|---|---|
| 𑌸𑌂𑌭𑍋𑌗𑌸𑌂𑌵𑌿𑌤𑍍 | ஸம்போகத்திலே நினைப்பை யுடையவன் |
| 𑌵𑌿𑌷𑌂 (𑌇𑌵) | விஷம் (போல) |
| 𑌏𑌧𑌮𑌾𑌨𑌃 | வளர்கிறவன், |
| 𑌦𑌤𑍍𑌤𑌾𑌨𑍁𑌤𑌾𑌪𑍀 | கொடுத்தபின் வருந்துபவன், |
| 𑌕𑍃𑌪𑌣𑌃 | கிருபணன் |
| 𑌅𑌬𑌲𑍀𑌯𑌾𑌨𑍍 | வலிமையில்லாதவன் |

| | |
|---|---|
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌭𑌿𑌶𑌂𑌸𑍀 | இந்திரியக்கூட்டத்தைப் புகழ்பவன் |
| 𑌵𑌨𑌿𑌤𑌾𑌂 | மனைவியை |
| 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾 𑌚 | பகைப்பவன் (ஆகிய) |
| 𑌏𑌤𑍇 | இந்த |
| 𑌵𑍈 | வேறு |
| 𑌸𑌪𑍍𑌤 | எழுவரும் |
| 𑌨𑍃𑌶𑌂𑌸𑌵𑌰𑍍𑌣𑌾𑌃 | கொடுமைவடிவினராக |
| (𑌸𑌨𑍍𑌤𑌿) | (இருக்கின்றார்கள்.) |

௧௯.

| | |
|---|---|
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚 | ஞானமும் |
| 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌚 | ஸத்யமும் |
| 𑌦𑌮𑌃 | அடக்கமும் |
| 𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 𑌚 | கல்வியும் |
| 𑌅𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌯𑌂 | மாத்ஸர்யமின்மையும் |
| 𑌹𑍍𑌰𑍀𑌃 | நாணமும் |
| 𑌤𑌿𑌤𑌿𑌕𑍍𑌷𑌾 | பொறுமையும் |
| 𑌅𑌨𑌸𑍂𑌯𑌾 | அஸூயையின்மையும் |
| 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌚 | வேள்வியும் |
| 𑌦𑌾𑌨𑌂 𑌚 | கொடையும் |
| 𑌧𑍃𑌤𑌿𑌃 | தைர்யமும் |
| 𑌶𑌮𑌃 𑌚 | அமைதியும் (ஆகிய) |
| 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶 | பன்னிரண்டும் |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 | ப்ராஹ்மணனுக்கு |
| 𑌮𑌹𑌾𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 (𑌸𑍍𑌯𑍁𑌃) | பெரிய விரதங்க (ளாம்). |

௨௦.

| | |
|---|---|
| 𑌯𑌃 𑌤𑍁 | எவன் |
| 𑌏𑌤𑍇𑌭𑍍𑌯𑌃 | இந்த |

| | |
|---|---|
| த்வாதஶப்⁴ய꞉ | பன்னிரண்டினின்றும் |
| ப்ரவஸேத் | பயணம்போகமாட்டானே, |
| ஸ꞉ | அவன் |
| இமாம் | இந்த |
| ஸர்வாம் | எல்லா |
| ப்ருதி²வீம் | பூமியையும் |
| ப்ரஶிஷ்யாத் | ஆளுவான். |
| த்ரிபி⁴꞉ | மூன்றாலாவது |
| த்³வாப்⁴யாம் | இரண்டாலாவது |
| ஏகேந வா | ஒன்றாலாவது |
| அவிமுக்தா꞉ | விடப்படாதவர் |
| க்ரமேண | (காலக்) கிரமத்தால் |
| விஶிஷ்டா꞉ (ஸந்த꞉) | சிறந்தவராகி |
| ப்³ரஹ்மபூ⁴தா꞉ | ப்ரஹ்மமாக |
| ப⁴வந்தி | ஆகிறார்கள். |

உக, உஉ, உங.

| | |
|---|---|
| த³ம꞉ | அடக்கம் |
| அஷ்டாத³ஶதோ³ஷ꞉ | பதினெட்டுக் குற்றங்களை யுடையதாக |
| ஸ்யாத் | ஆகும். |
| க்ருதே (ஸதி) | (அவற்றுள் ஒன்றைச்) செய்தவளவிலே |
| ப்ரதிகூலம் | தீங்கு |
| ப⁴வேத் | உண்டாகும். |
| அந்ருதம் | பொய் |
| பைஶுந்யம் | கோட்சொல்லல் |
| த்ருஷ்ணா | அவா |
| ப்ராதிகூல்யம் | மாறுகொள்ளல் |

| | |
|---|---|
| தம: | அஜ்ஞானம் |
| அதுஷ்டி: | ஸந்தோஷமின்மை |
| லோகத்வேஷ: | ஊரார்பகை |
| அபிமான: ச | செருக்கு |
| விவாத: | கலகஞ்செய்தல் |
| ப்ராணிபீடனம் | ப்ராணிகளை வருத்துதல் |
| பரிவாத: | வைதல் |
| அதிவாத: ச | அலப்பு |
| பரிதாப: | பரிதபித்தல் |
| அக்ஷமா | பொறுமையின்மை |
| அத்ருதி: | தைர்யமின்மை |
| அஸித்தி: | கைகூடாமை |
| பாபக்ருத்யம் ச | தீய செய்கை |
| ஹிம்ஸா ச | கொல்லுதல் |
| இதி | என |
| (தே) | (அந்த) |
| (தோஷா:) | (குற்றங்கள்) |
| ப்ரகீர்த்திதா: | கூறப்பட்டுள்ளன. |
| ய: | எது |
| ஏபி: | இந்த |
| தோஷை: | குற்றங்களோடு |
| வியுக்த: | சேராததோ, |
| ஸ: | அது |
| ஸத்பி: | ஸாதுக்களால் |
| தம: | அடக்கமாக |
| உச்யதே, | கூறப்படுகின்றது. |

---

௧௨௯.

| | |
|---|---|
| தர்ப: | இறுமாப்பு [தாக |
| அஷ்டாதசதோஷ: | பதினெட்டுக் குற்றங்களை யுடைய |

| | |
|---|---|
| ஸ்யாத் | ஆகும். |
| த்யாக: | விட்டிடுதல் |
| ஷட்வித: | ஆறுவகை யுடையதாக |
| பவதி | ஆகின்றது. |

உச.

| | |
|---|---|
| விபர்யயா: | மறுதலையாக |
| ஸ்ருதா: | கொள்ளப்பட்ட |
| வேதே | இவை |
| த்வேஷா: | இருமாப்பின் முறிவுகளாக |
| உதாஹ்ருதா: | கூறப்பட்டுள்ளன. |

உரு.

| | |
|---|---|
| ஷட்வித: | அறுவகைத்தான |
| த்யாக: து | விட்டிடுதலும் |
| ச்ரேயான் (ஸ்யாத்) | சிறந்த (தாம்). |
| தத்ர | அவற்றுள் |
| த்ருதீய: | மூன்ருவது |
| துஷ்கர: | செய்தற்கு அரிதாய் |
| (பவதி) | (இருக்கின்றது.) |
| தேந | அதனால் |
| (மநுஷ்யா:) | (மனிதர்கள்) |
| து:கம் | துன்பத்தை |
| தரந்தி வை | கடந்தே விடுகிறுர்கள். |
| தஸ்மிந் | அது |
| க்ருதே (ஸதி) | செய்தவளவிலே |
| (ஸர்வம்) | (எல்லாம்) |
| ஜிதம் | வெல்லப்பட்டதாக |
| பவேத் | ஆகும். |

௨௬, ௨௭.

| | |
|---|---|
| (𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍) | (ஒருவன்) |
| 𑌯𑌾𑌚𑌮𑌾𑌨𑌾𑌯 | இரக்கின்ற |
| 𑌅𑌰𑍍𑌹𑌤𑍇 | யோக்யனுக்கு |
| 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌨𑍍 | மக்களை(யும்) |
| 𑌵𑌿𑌤𑍍𑌤𑌂 (𑌚) | பொருளை(யும்) |
| 𑌦𑌦𑌾𑌤𑌿 | கொடுக்கிறான் |
| (𑌇𑌤𑌿) 𑌯𑌤𑍍 | (என்பது) எதுவோ, |
| (𑌤𑌤𑍍) | (அது) |
| (𑌪𑍍𑌰𑌥𑌮𑌂) | (முதலாவது) |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) | (ஆகும்.) |
| 𑌇𑌷𑍍𑌟𑌾𑌪𑍂𑌰𑍍𑌤𑌂 | யாகம் ஹோமம் முதலியவற்றைச் செய்தலும், கிணறு முதலியவற்றை வெட்டுதலும் |
| 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂 | இரண்டாவது |
| 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | ஆகும். |
| 𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 | அரசரில் சிறந்தோனே ! |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 | எப்பொழுதும் |
| 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌮𑌾𑌰𑍍𑌗𑌤𑌃 | வைராக்யவழியினால் |
| 𑌕𑌾𑌮𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌚 | ஆசைகளை ஒழித்தல் (எதுவோ), |
| 𑌸𑌃 | அது |
| 𑌤𑍃𑌤𑍀𑌯𑌃 | மூன்றாவது |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 | எண்ணப்பட்டுளது. |
| 𑌏𑌤𑍈𑌃 | இவற்றால் |
| (𑌨𑌰𑌃) | (மனிதன்) |
| 𑌅𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍀 | தவறில்லாதவன் |
| 𑌭𑌵𑍇𑌤𑍍 | ஆவான். |
| 𑌸𑌃 𑌚 𑌅𑌪𑌿 | அதுவும் |
| 𑌅𑌷𑍍𑌟𑌗𑍁𑌣𑌃 | எட்டு குணங்களை யுடையதாக |

| | |
|---|---|
| 𑌉𑌕𑍍𑌤𑌃 | கருதப்பட்டுளது. |

உஅ.

| | |
|---|---|
| (𑌤𑍇) | (அவை) |
| 𑌸𑌤𑍍𑌯𑌂 | ஸத்யமும் |
| 𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 | த்யாநமும் |
| 𑌸𑌮𑌾𑌧𑌾𑌨𑌂 | ஸமாதியும் |
| 𑌚𑍋𑌦𑍍𑌯𑌂 | ஆராய்ச்சியும் |
| 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚 | வைராக்யமும் |
| 𑌅𑌸𑍍𑌤𑍇𑌯𑌂 | திருடாமையும் |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌂 𑌚 | ப்ரஹ்மசர்யமும் |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌅𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌮𑍇𑌵 𑌚 | உடைமையில்லாமையுமாக |
| (𑌉𑌕𑍍𑌤𑌾𑌃) | (கூறப்பட்டுள்ளன.) |

உக.

| | |
|---|---|
| 𑌏𑌵𑌂 | இவ்வாறு |
| 𑌦𑌮𑌸𑍍𑌯 | அடக்கத்தினுடைய |
| 𑌦𑍋𑌷𑌾𑌃 | குற்றங்கள் |
| 𑌉𑌕𑍍𑌤𑌾𑌃 | சொல்லப்பட்டன ; |
| 𑌤𑌾𑌨𑍍 | அந்த |
| 𑌦𑍋𑌷𑌾𑌨𑍍 | குற்றங்களை |
| 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 | (ஒருவன்) நீக்கவேண்டும். |
| 𑌦𑍋𑌷𑌤𑍍𑌯𑌾𑌗𑍇 | குற்றங்களை நீக்கினவளவிலே |
| 𑌅𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌃 | தவறின்மை |
| 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | ஆகும். |
| 𑌸𑌃 𑌚 𑌅𑌪𑌿 | அதுவும் |
| 𑌅𑌷𑍍𑌟𑌗𑍁𑌣𑌃 | எட்டு குணங்களை யுடையதாக |
| 𑌉𑌕𑍍𑌤𑌃 | எண்ணப்பட்டுளது. |

௬௦.

| | |
|---|---|
| 𑌰𑌾𑌜𑍇𑌂𑌦𑍍𑌰 | அரசரில் மேலோனே ! |
| 𑌸𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 | ஸத்யத்திலே மனமுடையவனய் |
| 𑌭𑌵 | இருப்பாயாக. |
| 𑌲𑍋𑌕𑌾𑌃 | உலகங்கள் |
| 𑌸𑌤𑍍𑌯𑍇 | ஸத்யத்திலே |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃 | தங்கியுள்ளன. |
| 𑌤𑌾𑌨𑍍 𑌤𑍁 | அவற்றையோ |
| 𑌸𑌤𑍍𑌯𑌮𑍁𑌖𑌾𑌨𑍍 | ஸத்யத்தையே முக்கியமாகக் கொண்டவையாக |
| 𑌆𑌹𑍁𑌃 | (அறிஞர்) கூறுகிருர்கள். |
| 𑌸𑌤𑍍𑌯𑍇 𑌹𑌿 | ஸத்யத்திலேயன்றே |
| 𑌅𑌮𑍃𑌤𑌂 | சாகாமை |
| 𑌆𑌹𑌿𑌤𑌂 | சார்ந்துளது. |

௬௧.

| | |
|---|---|
| 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌨 𑌚 | நீங்கியேயுள்ள |
| 𑌦𑍋𑌷𑍇𑌣 | குற்றத்தோடே |
| 𑌤𑌪𑍋𑌵𑍍𑌰𑌤𑌂 | தபோவ்ரதத்தை |
| 𑌇𑌹 | இங்கே |
| 𑌆𑌵𑌶𑍍𑌯𑌂 | (ஒருவன்) அநுஷ்டிக்கவேண்டும். |
| 𑌏𑌤𑌤𑍍 | இது |
| 𑌧𑌾𑌤𑍃𑌕𑍃𑌤𑌂 | படைப்பவனல் செய்யப்பட்ட |
| 𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 | ஒழுக்கமாய் |
| (𑌭𑌵𑌤𑌿) | (உள்ளது.) |
| 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌚 | ஸத்யமே |
| 𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌂 | ஸாதுக்களுக்கு |
| 𑌵𑍍𑌰𑌤𑌂 | வ்ரதமாய் |
| (𑌭𑌵𑌤𑌿) | (இருக்கின்றது.) |

௩௨.

| | |
|---|---|
| ஏதை: | இந்த |
| தோஷை: | குற்றங்களோடு |
| வியுக்தம் | சேராததாய் |
| ஏதை:, | இந்த |
| குணை: | குணங்களோடு |
| ஸமந்விதம் | சேர்ந்ததாய் |
| கேவலம் | சுத்தமான |
| ஏதத் | இந்த |
| தப: து | தபஸானது |
| வ்ருத்தம் அபி | வளர்ந்ததாயினும், |
| ஸம்ருத்தம் | நன்கு வளர்ந்ததாக |
| பவதி | ஆகின்றது. |

௩௩.

| | |
|---|---|
| ராஜேந்த்ர | அரசரில் மேலோனே! |
| யத் | எதனை(ப்பற்றி) |
| மாம் | என்னை |
| ப்ருச்சஸி | (நீ) வினவுகின்றனையோ, |
| தத் | அதனை |
| தே | உனக்கு |
| ஸங்க்ஷேபத: | சுருக்கமாக |
| ப்ரவீமி | சொல்லுகிறேன் : |
| ஏதத் | இது |
| பாபஹரம் | பாவத்தைத் தொலைப்பதாய் |
| புண்யம் | சுத்தமானதாய் |
| ஜந்மம்ருத்யுஜராபஹம் | பிறப்புஇறப்புமூப்புக்களைப் போக்(கு)வதாய் |
| (பவதி) | (இருக்கின்றது.) |

௩௪.

பாதவம்சத்தானே !
ஐந்து
இந்திரியங்களினின்றும்
மனத்தினின்றும்
சென்றனவற்றினின்றும், வருவன வற்றினின்றும்
(ஒருவன்) நீங்கியவனாயின்,
அவன்
இன்பமுடையவன்
ஆவான்.

---

௩௫, ௩௬.

திருதராஷ்டிரன்
சொன்னான் :
மனிதன்
இதிஹாஸபுராணங்களை ஐந்தாவதாகவுடைய
வேதங்களால்
அதிகமாக
பெருமைபாராட்டுகிறான்.
அப்படியே
சிலர்
நான்கு வேதமுடையவராயும்,
அப்படியே
சிலர்
மூன்று வேதமுடையவராயும்,
இரண்டு வேதமுடையவராயும்
ஒருவேதமுடையவராயும்,

| | |
|---|---|
| ததா | அப்படியே |
| அபரே | சிலர் |
| அந்ருசஃ ச | ரிக்இல்லாதவராயும் |
| (ஸந்தி) | (இருக்கிறார்கள்.) |
| தேஷாம் | இவர்களில் |
| யம் | எவனை |
| அஹம் | நான் |
| ப்ராஹ்மணம் | ப்ராஹ்மணனாக |
| வேத | அறியலாமோ, |
| (தம்) | (அந்த) |
| அதிகம் | மேலானவனை |
| மே | எனக்கு |
| ப்ரூஹி | சொல்லுக. |

௧௭, ௧௮.

| | |
|---|---|
| ஸநத்ஸுஜாதஃ | ஸநத்ஸுஜாதர் |
| உவாச | சொன்னார் : |
| ஏகவேத்யஸ்ய | ஒரே அறிவான |
| ஏகஸ்ய | ஒரே |
| ஸத்யஸ்ய | உண்மையினுடைய |
| அஜ்ஞாநாத் வை | அறியாமையினாலன்றோ |
| தே | அந்த |
| வேதாஃ | வேதங்கள் |
| பஹவஃ | அநேகமாக |
| அபவந் | ஆயின. |
| ராஜேந்த்ர | அரசரில் சிறந்தோனே ! |
| கஶ்சித் | ஒருவன் |
| ஸத்யே | உண்மையிலே |
| அவஸ்திதஃ | நிலைத்தவன். |
| ஸத்யாத் | உண்மையினின்றும் |

உஉ, உஉஎ.

ஃயம வஸ்டிாகயம வடா ஐஸ்ரூவம நாநாவுதீதிஷு।
ஃகவுஹேவ ஜ்ஞாநம தஸ் ஸ்வயமேவ வுகாஶதே ॥
ஜ்ஞாநம ந வேஸ் ஸ்வயம் ஸிஸம ஜமனுஸம தமோ ஹவெஸ் ।

உங, உச, உரு.

ந வேஷஸ்ய கிரியா காஜிஸ் வ்யவஹாரஃ கயம ஹவெஸ் ॥

---

யுமாகிய இந்த ஈச்வர சக்திகள் ஜீவர்களிடத்து உள்ளமையால், அவர்கள் ஈச்வரனும் என்க; எனவே, ஈச்வரனேதான் எல்லாவற்றினுடைய ஆத்மாவாய் இருக்கிறான் என முடிந்தது.

ஆரும் பக்கத்தில் வினவிய நான்காம் வினாவிற்கு, இதனால் விடை கூறப்பட்டது. (உக)

அறிவு.

உஉ, உஉஎ.

"இது குடம்" "இது ஆடை" என இத்தகைய வேறுவேறான உணர்ச்சிகளுள் அந்த அறிவு ஸூர்யன் ஒளிபோல, தானே விளங்குகின்றது.

அறிவு தானே அமையாத தாயின், உலகம் குருடான இருட்டாகும்.

"இது குடம்" எனக் குடத்தை அறியும் அறிவு எதுவோ, "இது ஆடை" என ஆடையை அறியும் அறிவு எதுவோ, "இது புஸ்தகம்" எனப் புஸ்தகத்தை அறியும் அறிவு எதுவோ, அஃதெல்லாம் அறிவா தலால், அறிவென்பது ஒன்றென்க. இனி, அவ்வறிவு தானே விளங்குவ தன்றாயின், உலகத்தில் ஒருவர்க்கும் ஒன்றும் தெரியமாட்டாது. ஆனால், அப்படி இல்லை. நள்ளிருளில் இருக்கின்ற குருடனுக்கும் நாற்றம் புலப்படுகின்றது; "இது மல்லிகையின் மணம்" என்னும் அறிவு தானே விளங்குகின்றது. ஆதலால், அறிவு ஸ்வயம் பிரகாச மாம். (உஉ, உஉஎ)

செயல்.

உங, உச, உரு.

இவனது செயலொன்று இல்லையாயின், வியவஹாரம் எவ்வாறு நிகழும்?

𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌨𑌾𑌮 𑌪𑌰𑌿𑌸𑍍𑌪𑌨𑍍𑌦𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌿𑌣𑍀 ।
𑌸𑍍𑌪𑌨𑍍𑌦𑌨𑍇𑌨 𑌬𑌹𑌿𑌰𑍍𑌜𑌨𑍍𑌤𑍋𑌸𑍍𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌙𑍍𑌕𑍁𑌰𑌵𑌤𑍍𑌸𑌤𑌃 ॥
𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑍍𑌯𑌾𑌪𑍍𑌯𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌯𑌾 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 ।
𑌕𑌰𑍋𑌤𑌿 𑌶𑌬𑍍𑌦𑌤𑌾𑌤𑍍𑌪𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌸𑌿𑌧𑍍𑌯𑌤𑍀𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍀𑌯𑌤𑍇 ॥

---

செயலென்பது - அசைவுவடிவாக, திரிபுவடிவாக இருக்கின்றது; அறிவு வெளியே செல்லுமிடத்து அதனது முளைபோல உண்டாகின்றது.

இனி, அந்தத் திரிபாகிய செயல் எவ்வாறு காணப்படுகின்றது ?

செயலானது - "இயற்றுகிறுன்," "அடைகிறுன்," "சுத்தப்படுத்துகிறுன்," "குறைக்கிறுன்" என ஆக்கப்படுவதும், அடையப்படுவதும், ஸம்ஸ்கரிக்கப்படுவதும் வேறுபடுத்தப்படுவதுமாகிய இவற்றைச் சார்ந்ததாகப் புலப்படுகின்றது.

அசைவு - அசைதல். திரிபு - திரிதல், வேறுநிலையைப் பெறுதல். அசைதலென்னும் செயல் - எறிந்த அம்பிலும், திரிதலென்னும் செயல் - நகையாயுள்ள பொன்னிலும் காணப்படுகின்றது. இனி, இவற்றிற்கு இச் செயலானது - அறிவென்னும் சேதநப்பொருளா லாவது ; ஆதலால், "அசேதநமான ஜடப்பொருள் சேதநத்தால் செய லுறுகின்றது" எனக் காட்டுவார் "அதனது [அறிவினது] முளைபோல" என்ருர். எங்ஙனமெனில்,—கண்ணின்வழியாக வெளியே செல்லுகின்ற அகக்கரணத்தோடு அறிவும் செல்ல, குடம் என்னும் அறிவு உண்டாக, பார்த்தல் என்னும் செயல் நிகழ்கின்றது. ஜடப்பொருளாகிய கண்ணிற்குப் பார்த்தல் என்னும் செயலானது உள்ளேயுள்ள ஆத்மாவான அறிவுப்பொருளினுல் ஆகின்றது : வண்டிக்கு ஓடுதல்போல.

இவ்வாருக, ஜடப்பொருள்கள் தாமாகத் தொழிற்பட ஏலாவாதலால், பார்த்தல் கேட்டல் முதலிய உலகவியவஹாரங்களெல்லாம் நடைபெருதிருத்தல் வேண்டும். ஆனல், அப்படியில்லை. ஆகவே, பிராணன் முதலியவற்றினுடைய செயலும் - அந்தர்யாமியாய் உள்ளேநின்று அனைத்தையும் நியமித்து வருகின்ற ஈச்வரனது ஸந்நிதிமாத்திரத்தா லாகின்றது ; எனவே, எல்லாச் செயலும் அவனது செயலாம் என்றபடி. நான்காம் உல்லாஸத்தினுள் எ, அ - ஆம் சுலோகங்களைப் பார்க்க.

திரிதலாகிய செயலானது - இயற்றப்படுவதும், அடையப்படுவதும், ஸம்ஸ்கரிக்கப்படுவதும், வேறுபடுத்தப்படுவதும் என நால்வகைத்தான செயப்படுபொருளைச்சார்ந்துளது. க. "வீட்டைக் கட்டுகிருன்"; உ. "பாலைக் கறக்கிருன்";

௨௬.

ஶிவோ ப்ரஹ்மாதிதேஹேஷு ஸர்வஜ்ஞ இதி பாஸதே ।
தேவதிர்யங்மநுஷ்யேஷு கிஞ்சிஜ்ஜ்ஞஸ்தாரதம்யத: ॥

௨௭.

ஜராயுஜோऽண்டஜஶ்சைவ ஸ்வேதஜ: ஸ்தாவரோத்பித: ।
ஸந்த்யேதே தாரதம்யேந தேஹா: க்ரமேண ந்யூநவ்ருத்தய: ॥

---

௩. "தரையை ப்ரோக்ஷிக்கிருன்"; ௪. "நெல்லைக் குத்துகிருன்" என்பன முறையே உதாரணம். இங்கே, இயற்றுதலாவது - முன் இல்லாத வீட்டை உண்டாக்குதல்; அடைதலாவது - கறக்கும் வரையிலும் பாலைப் பெறுதல்; ஸம்ஸ்கரித்தலாவது - ஜலத்தைத் தெளித்தலால், தரையைச் சுத்தஞ்செய்தல்; வேறுபடுத்தலாவது - முன் உள்ள உமியைப் பிரித்தல். (௨௩, ௨௪, ௨௫)

௨௬.

இப்பொழுது, முற்றுணர்வுடைமையும் சிற்றுணர்வுடைமையும் உபாதிபேதத்தா லாகின்றன எனக் காட்டுகிருர்:

ஈச்வரன் (உபாதியினுடைய) ஏற்றத்தாழ்ச்சிக்கு ஏற்ப ப்ரஹ்மா முதலானவருடைய உடம்புகளில் முற்றுணர்வினனுக விளங்குகிருன்; தேவர் விலங்கு மனிதர்களில் சிற்றுணர்வினனுக விளங்குகிருன். (௨௬)

௧௪, ௧௫, ௧௬ - ஆம் பக்கங்களைப் பார்க்க.

௨௭.

அந்த ஏற்றத்தாழ்ச்சி, உடம்பு என்னும் உபாதியிஞ லாகின்றது எனக் கூறுகிருர்:

பையிற் பிறப்பதும், முட்டையிற் பிறப்பதும், வியர்வையிற் பிறப்பதும், நிலத்திற் பிறப்பதுமாகிய இந்நால்வகை உடல்களும் முறையே தாழ்ந்த தன்மையன.

பையிற் பிறப்பவை - மனிதர் மாடு முதலியன. முட்டையிற் பிறப்பவை - பறவை, பாம்பு முதலியன. வியர்வையிற் பிறப்பவை - பேன், கொசு முதலியன. நிலத்திற் பிறப்பவை - மரம், செடி முதலியன. இவற்றினுள், முந்தினதைக் காட்டிலும் பிந்தினது தாழ்ந்தது. அவ்வாறே, மனிதனது உடம்பிற்கும், மாட்டினது உடம்பிற்கும் வேற்றுமை உள்ளமையால், பையிற் பிறப்பனவற்றினுள்ளும் அறிவு முதலியவற்றினுடைய ஏற்றத்தாழ்ச்சிகளை நோக்குக. (௨௭)

உ௮.

ப்ரஹ்மாதிஸ்தம்பபர்யந்தா ஸ்வப்நகல்பைவ கல்பநா |
ஸாக்ஷாத்க்ருதே(அ)நவச்சிந்நே ப்ரகாசே பரமாத்மநி ||

உ௯.

அணோரணீயாந்மஹதோ மஹீயாநிதி வேதவாக் |
ருத்ரோபநிஷதப்யாஹ ஸர்வாத்மகம் சிவம் ||

---

**வேற்றுமைக்கு மாயையே காரணம்.**

உ௮.

ஜீவன் ஈச்வரன் முதலிய வேறுபாடுகளெல்லாம் மாயாமயம் என்று கீழே உணர்த்தியதை இப்பொழுது முடிக்கிறார் :

அளவிலா ஒளியான பரமாத்மாவை நேராகக் கண்டவிடத்து, ப்ரஹ்மாமுதல் புல்ஈறாகவுள்ள கற்பனை(யெல்லாம்) கனவை நிகர்த்ததே என்க.

எங்குமுள்ள ஆத்மாவைக் கண்டு எல்லாம் தானானவிடத்து, யார் யாரைக் காண்பான்? அதாவது - கனவு, நனவிலே எதிர்ப்படாது சடக்கென்று பொய்ம்மையாகக் கரைந்துபோவதுபோல, த்வைதப்பிரபஞ்சம் நிர்விகல்ப ஸமாதியிலே இல்லாமற் போகின்றது.

(உ௮)

உ௯.

வினா :—ஆயின், எல்லாம் ஆத்மஸ்வரூபந்தான் என்பதற்குப் பிரமாணம் யாது?

விடை :— வருமாறு :

(ப்ரஹ்மம்) "சிறிதினும் சிறிது, பெரிதினும் பெரிது" என்பது - வேதத்தின் திருவாக்கு. இவ்வாறு ருத்ரோபநிஷத்தும் ஈச்வரனை ஸர்வாத்மாவாக [எல்லாவற்றினுடைய ஆத்மஸ்வரூபமாக]ப் புகழ்கின்றது.

"அணோரணீயாந் மஹதோ மஹீயாந் ஆத்மா(அ)ஸ்ய
ஜந்தோர்நிஹிதம் குஹாயாம் |"

"ஆத்மா சிறிதினும் சிறிது : பெரிதினும் பெரிது : இந்தப் பிராணியினுடைய ஹிருதயத்திலே இருப்பது" (கட - உ - ௨௰ ; ச்வே - ௩ - ௨௰ ; ம - நா - ௮ - ௩).

"யஸ்மாந்நாணீயோ(அ)ஸ்தி ந ஜ்யாயோ(அ)ஸ்தி கச்சித்"

"எதனைக்காட்டிலும் நுண்மையானது இல்லையோ, பருமையானதொன்று இல்லையோ"—(ச்வே - ௩ - ௯ ; ம - நா - ௧௰ - ௪).

𑌅𑌶𑌿𑌤𑌵𑌾𑌨𑍍 । 𑌤𑍇𑌨 𑌸 𑌏𑌷𑌃 𑌅𑌪𑌾𑌨𑌵𑌾𑌯𑍁𑌃 𑌅𑌨𑍍𑌨𑌸𑍍𑌯 𑌗𑍍𑌰𑌹𑌃 𑌅𑌨𑍍𑌨𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌃 𑌇𑌤𑌿 𑌏𑌤𑌤𑍍, 𑌯𑌦𑍍𑌵𑌾𑌯𑍁𑌃 𑌯𑍋 𑌵𑌾𑌯𑍁𑌃 । 𑌅𑌨𑍍𑌨𑌾𑌯𑍁𑌃 𑌅𑌨𑍍𑌨𑌬𑌨𑍍𑌧𑌨𑌃 𑌅𑌨𑍍𑌨𑌜𑍀𑌵𑌨𑍋 𑌵𑍈 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌸 𑌏𑌷 𑌯𑍋 𑌵𑌾𑌯𑍁𑌃 ॥ ௩......௧௦ ॥

௧௧. 𑌸 𑌈𑌕𑍍𑌷𑌤 𑌕𑌥𑌂 𑌨𑍍𑌵𑌿𑌦𑌂 𑌮𑌦𑍃𑌤𑍇 𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑌿 𑌸 𑌈𑌕𑍍𑌷𑌤 𑌕𑌤𑌰𑍇𑌣 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌾 𑌇𑌤𑌿 । 𑌸 𑌈𑌕𑍍𑌷𑌤 𑌯𑌦𑌿 𑌵𑌾𑌚𑌾𑌭𑌿𑌵𑍍𑌯𑌾𑌹𑍃𑌤𑌂 𑌯𑌦𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑌾𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌤𑌂 𑌯𑌦𑌿 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 𑌯𑌦𑌿 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇𑌣 𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 𑌯𑌦𑌿 𑌤𑍍𑌵𑌚𑌾 𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑌂 𑌯𑌦𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌧𑍍𑌯𑌾𑌤𑌂 𑌯𑌦𑍍𑌯𑌪𑌾𑌨𑍇𑌨𑌾𑌭𑍍𑌯𑌪𑌾𑌨𑌿𑌤𑌂 𑌯𑌦𑌿 𑌶𑌿𑌶𑍍𑌨𑍇𑌨 𑌵𑌿𑌸𑍃𑌷𑍍𑌟𑌮𑌥 𑌕𑍋𑌽𑌹𑌮𑌿𑌤𑌿 ॥

𑌸 𑌏𑌵𑌂 𑌲𑍋𑌕𑌲𑍋𑌕𑌪𑌾𑌲𑌸𑌙𑍍𑌘𑌾𑌤𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌂 𑌅𑌨𑍍𑌨𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌪𑍁𑌰𑌪𑍌𑌰𑌤𑌤𑍍𑌪𑌾𑌲𑌯𑌿𑌤𑍃𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌸𑌮𑌾𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑍀 𑌇𑌵 𑌈𑌕𑍍𑌷𑌤 ; 𑌕𑌥𑌂 𑌨𑍁 𑌕𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌤𑌰𑍍𑌕𑌯𑌨𑍍 𑌇𑌦𑌂 𑌮𑌦𑍃

---

அதனுல் - (வாய்துவாரத்தின்வழியாக உணவை உள்ளே விழுங்குதலைச் செய்கின்ற) வாயு எதுவோ, அந்த இவ்வபாநவாயு உணவைப் பிடிப்பதென்பது. இந்த வாயு எதுவோ, அது உணவை ஆயுளாகக்கொண்டது, உணவைச் சார்ந்துநிற்பது, உணவையே உயிராகவுடையது (என்பது யாவர்க்கும்) தெரிந்திருப்ப தென்க. (௩......௧௦)

௧௧. அவன் " இது நானில்லாது எப்படித்தான் வாழக்கூடும் ? " என்று ஆலோசித்தான். அவன் " இரண்டனுள் எதனுல் புகலாம் ? " என்று ஆலோசித்தான். அவன் "வாக்கினுல் பேசுத லாகுமாயின், ப்ராணனுல் [மூக்கினுல்] முகர்த லாகுமாயின், கண்ணினுல் காண்ட லாகுமாயின், செவியினுல் கேட்ட லாகுமாயின், த்வக்கினுல் தொடுத லாகுமாயின், மனத்தினுல் நினைத்த லாகுமாயின், அபாநனுல் விழுங்குத லாகுமாயின், சிச்நத்தினுல் விடுத லாகுமாயின்,— அப்பொழுது நான் யார்?" என்று ஆலோசித்தான்.

அவன் இவ்வாறு லோக லோகபாலர்களுடைய தொகுதியின் நிலையை - உணவைச் சார்ந்ததாகவும், பட்டணம் பட்டணத்தார் அவரைக் காப்போர் என்பவருடைய நிலைக்குச் சமமாகவும் செய்து, சொந்

ऐक्षत मामन्तरेण पुरस्वामिनम् । यदिदं कार्यकारण-संघातं कार्यं वक्ष्यमाणं कथं नु खलु मामन्तरेण स्यात् परार्थं सत् । यदि वाचाभिव्याहृतमि-त्यादि केवलमेव वाग्व्याहरणादि, तन्निरर्थकं न किञ्च-न भवेत्, बलिस्तुत्यादिवत् । पौरजानपदादिभिः प्रयुज्य-मानं स्वाम्यर्थं सत् तत् स्वामिनं मामन्तरेण असति स्वा-मिनि, तद्वत् । तस्मात् मया परेण स्वामिना अधिष्ठात्रा कृताकृतफलसाक्षिभूतेन भोक्त्रा भवितव्यं, पुरस्य इव राज्ञा । यदि नाम एतत् संहतकार्यस्य परार्थत्वं परार्थिनं मां चेतनं मामन्तरेण भवेत्, पौरजन-

---

தக்காரன்போல் ஆலோசித்தான்; "பட்டணத்திற்குச் சொந்தக்காரனை நானில்லாது இது எவ்விதமாக (வாழும்)?" என்று ஆலோசிப்பவனாய் (இருந்தான்). கார்யகாரணங்களின் தொகுதியாகிய இனிக் கூறப்படும் கார்யம் எதுவோ, (அது) நானில்லாது பிறர்பொருட்டாய் எவ்வாறு இருக்கக்கூடும்? வாக்கினால் பேசுதல் முதலியன தனியே [அநுபவிப்பவனில்லாது] இருக்குமாயின், அவை பயனில்லன வாகும்; தீர்வை புகழ்ச்சி முதலியனபோல, ஒருவிதத்தாலும் அமையா. குடிகளாலும் கவிவாணராலும் இன்னும் இத்தன்மையராலும் வழங்கப்படுகின்றனவாய் உடையவன்பொருட்டாயுள்ள அந்த(த் தீர்வைமுதலியன) உடையவ னில்லாவழி உடையவனை யின்றி (எப்படி அமையமாட்டாவோ), அதுபோல என்க. ஆதலால், பட்டணத்திற்கு அரசன்போல நான் மேலான சொந்தக்காரனாக, கொண்டுசெலுத்துவோனாக, செய்ததற்கும் செய்யாததற்கும் (அவற்றின்) பயன்கட்கும் ஸாக்ஷியாக, அநுபவிப்போனாக இருக்கவேண்டும் (என்று அவன் ஆலோசித்தான். நகரத்தின் கார்யமும் குடிகளின் கார்யமும் அவரது சொந்தக்கார(னாகிய அரசனில்லாது அமைந்தாற்)போல, இந்தத் தொகுதியாகிய (வாக்முதலான) கார்யம் உபகாரப்படுத(லாகிய பேசுதல்முதலியன) - உபகாரத்தைப் பெறும் அறிவுப்பொருளான நானில்லாது அமையு மாயி

கார்யாணீவ தத்ஸ்வாமிந:—அத கோ(அ)ஹம் கிம்ஸ்வரூப: கஸ்ய வா ஸ்வாமீ? யத்யஹம் கார்யகாரணஸங்காதம் அநுப்ரவிஶ்ய வாகாத்யபிவ்யாஹ்ருதாதிபலம் ந உபலபேய, ராஜா இவ புரம் அநுப்ரவிஶ்ய அதிக்ருதபுருஷக்ருதாக்ருதாவேக்ஷணம்— ந கஶ்சித் ஸ்யாத் "அயம் கலு ஏவம்ரூப:" இதி அபிஜ்ஞஶ்ச விசாரயேயம்। விபர்யயே து "ய: அயம் 'வாகாத்யபிவ்யாஹ்ருதாதி இதம்' இதி வேத, ஸ: கலு வேதநாரூப:" இதி அபிஜ்ஞேய: அஹம் ஸ்யாம், "யதர்தம் இதம் ஸம்ஹதாநாம் வாகாதீநாம் அபிவ்யாஹ்ருதாதி"; யதா ஸ்தம்பகுட்யாதீநாம் ப்ராஸாதாதிஸம்ஹதாநாம் ஸ்வாவயவைர் அஸம்ஹதஸ்வாம்யர்தம், தத்வத் இதி। ஏவம்

---

ன்,— அங்ஙனம் நான் யார்? எனது இயல்பு யாது? அன்றியும், நான் யாருக்குச் சொந்தக்காரன்? அதிகாரத்தில் நியமிக்கப்பட்ட வேலைக்காரர்செய்ததையும் செய்யாததையும் அரசன் நகரத்தினுள் புகுந்து கருத்தொடு பார்ப்பதுபோல, நான் கார்யகாரணத்தொகுதியினுள் புகுந்து வாக்முதலியவ்வற்றின் பேசுதல்முதலானபயனை உணர்வேன் [அநுபவிப்பேன்] இல்லையாயின்,— "இதோ இருக்கிறவனும், இப்படிப் பட்டவனு மாம்" என்று என்னை ஒருவனும் அறியமாட்டான், ஆராய மாட்டான் [நான் இருப்பதாகவே ஒருவர்க்கும் தெரியமாட்டாது; அவ்வண்ணமே, நான் இப்படிப்பட்டவன் என்பதும் தெரியவாராது; என்னைப்பற்றிய எண்ணமே உண்டாதற்கு இடமில்லை]. ஆனால், மாறுன வளவிலே [புகுந்து, பேசுதல்முதலியவற்றை உணருங்கால்], "'இது - வாக்முதலியவற்றின் பேசுதல்முதலான (தொழிலாம்)' என எவன் இதோ அறிகின்றானோ, அவன் அறிதல்வடிவின னும்" என்று நான் அறியக்கூடியவ னுவேன்; "சேர்ந்துநிற்கின்ற வாக்முதலியவற்றின் இந்தப் பேசுதல்முதலியன யாருக்காக உள்ளனவோ, அவன் உள்ளவ னு மாம்" என்றுநான் அறியக்கூடியவ னுவேன்: மேல்மாடம்முதலிய வற்றோடு சேர்ந்துநிற்கும் தூண் சுவர் முதலியன - தமது உறுப்புக்க ளோடுசேராத வேறொன்றற்கு எப்படிப் பயன்படுத லாகின்றதோ

ஸங்கல்ப்ய, “ கதரேண ப்ரபத்யை ? ” இதி । ப்ரப-
தம் ச மூர்தா ச அஸ்ய ஸங்காதஸ்ய ப்ரவேசமார்கௌ ; அந-
யோ: கதரேண மார்கேண இதம் கார்யகாரணஸங்காதலக்ஷ-
ணம் புரம் ப்ரபத்யே ப்ரபத்யேய ? இதி ॥ ௧௧ ॥

ஏவம் ஸங்கல்ப்ய,

௧௨. ஸ ஏதமேவ ஸீமானம் விதார்யைதயா த்வாரா ப்ராபத்யத । ஸைஷா விதிருதிர்நாம த்வாஸ்ததேதந்நாந்தனம் । தஸ்ய த்ரய ஆவஸதாஸ்த்ரய: ஸ்வப்னா அயமாவஸதோ(அ)யமாவஸதோ(அ)யமாவஸத இதி ॥

ந தாவத் ஸ்வப்ருத்யஸ்ய ப்ராணஸ்ய ப்ரவேசமார்கேண ப்ரபதாப்யாம் அஹம் ப்ரபத்யே । கிம் தர்ஹி ? — பாரிசேஷ்யாத் அஸ்ய மூர்தானம் விதார்ய ப்ரப-

---

அதுபோல என்பது. இவ்வாறு ஆலோசித்துப் பின்பு, “ (நான் உடம்பி)னுள்ளே எதனுல் புகுவேனுக ? ” என்று (அவன் ஆலோசித்தான்).— கால்நுனியும் உச்சியும் இச் சமுதாயத்திற்கு இரண்டு நுழைகடவுகள். நான் இக் கார்யகாரணசமுதாயமாகிய பட்டணத்தினுள், இவ்விரண்டில் எந்த வழியினுல் புகுதல்வேண்டும் என்று (அவன் ஆலோசிக்கலானுன்).
(௧௧)

இவ்வாறு ஆலோசித்து,

௧௨. அவன் இதே உச்சியைப் பிளந்து, இவ்வாசல்வழியாக (உள்ளே) புகுந்தான். அந்த இது “ விதிருதி ” என்னும் வாசலாம் ; அந்த இது நாந்தநம். அவனுக்கு மூன்று இடங்கள், மூன்று கனவுகள். இது இடம், இது இடம், இது இடம் என்க.

இனி, யான் - என்னுடைய எல்லாக் கார்யங்களையும் நடத்திவரும்படி நியமிக்கப்பட்டிருக்கிற என்வேலைக்காரனை பிராணன் நுழையும் வாசலான இரண்டுகால்நுனிகள்வழியாகக் கீழே நுழையமாட்டேன்.—அங்ஙனமென்ன ? — (இந்த வேறு வாசல்ஒன்றே) மிஞ்சிநிற்றலால், இ(ப் பிண்டத்)தினுடைய உச்சியைப் பிளந்து புகுவேனுக

ஜ்ஞேயம் இதி, லோக இவ ஸஂசிந்திதகாரீ ஸ ஸ்ரஷ்டா ஈஶ்வர: ஏதமேவ மூர்தஸீமானம் கேஶவிபாகாவஸானம் விதார்ய சித்ரம் க்ருத்வா ஏதயா த்வாரா மார்கேண இமம் லோகம் கார்யகரணஸஂகாதம் ப்ராபத்யத ப்ரவிவேஶ ॥

ஸேயம் ஹி ப்ரஸித்தா த்வா:; தைலாதிதாரணகாலே தத³ந்த:ஸ்த²ரஸாதிஸஂவேதனாத். ஸைஷா விதிருதி: விதாரிதத்வாத் விதிருதி: நாம ப்ரஸித்தா த்வா:। இதராணி து ஶ்ரோத்ராதித்வாராணி ப்ருத்யாதிஸ்தானீயஸாதாரணமார்கத்வாத் ந ஸம்ருத்தீனி ந நந்தஹேதூனி। இதம் து த்வாரம் பரமேஶ்வரஸ்ய ஏவ கேவலஸ்ய இதி। ததேதத் நாந்தனம் நந்தனமேவ நாந்தனம் இதி தைர்க்யம் சாந்தஸம்। நந்ததி அனேன த்வாரேண கத்வா பரஸ்மின் ப்ரஹ்மணி இதி॥

---

என (நிச்சயித்து), அந்த சிருஷ்டிகர்த்தாவான ஈச்வரன் - மயிரை வகிர்தற்கு முடிவிடமான இதே தலையுச்சியைப் பிளந்து துவாரம் செய்து இந்த வாசல்வழியாக 'இக் கார்யகாரணத்தொகுதியினுள் புகுந்தான்; உலகிலே, ஆலோசித்ததைச் செய்கிறவன்போல [எப்படி ஒருவன் தான் முதலில் ஆலோசித்ததைப் பின்பு செய்கின்றானோ, அப்படிப்போல].

தலையிலே தைலம் முதலியவற்றை வைத்துக்கொண்டிருக்கும் பொழுது அவற்றின் சுவைமுதலியவற்றை உணர்வதனால், அந்த இவ் வாசல் (யாவர்க்கும்) தெரிந்திருப்பதன்றோ. அந்த இது பிளக்கப் பட்டமையால், விதிருதி [பிளவு] என்னும் பெயருடைய வாசலாகப் பிரசித்தமா யுளது. செவிமுதலான மற்றைய வாசல்களோ வேலைக் காரருடைய நிலைக்கும் அவர்போன்றவருடைய நிலைக்கும் உரிய பொதுவழி யாதலால் வளமில்லாதவையாய் [இன்பமில்லாதவையாய்], இன்பத்திற்குக் காரண(மு)மாகாதவையா யுள்ளன. ஆனால், இந்த வாசல் பரமேச்வர னொருவனுக்கே (உரியது) என்பது. அந்த இது நாந்தநம். நந்தநமே நாந்தநம் என்பது - சந்தத்திற்குரிய நீட்டல். இந்த வாசலால் சென்று ப்ரஹ்மத்தில் ஆநந்த மடைகிறான் என (நந்தநம், அல்

𑌤𑌸𑍍𑌯 𑌏𑌵𑌂 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌸𑍍𑌯 𑌜𑍀𑌵𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾 𑌰𑌾𑌜𑍍𑌞 𑌇𑌵 𑌪𑍁𑌰𑌂 **𑌤𑍍𑌰𑌯 𑌆𑌵𑌸𑌥𑌾𑌃**— 𑌜𑌾𑌗𑌰𑌿𑌤𑌕𑌾𑌲𑍇 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃, 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌕𑌾𑌲𑍇 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌮𑌨𑌃, 𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑌿𑌕𑌾𑌲𑍇 𑌹𑍃𑌦𑌯𑌾𑌕𑌾𑌶𑌃 𑌇𑌤𑌿 ; 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑌾 𑌵𑌾 **𑌤𑍍𑌰𑌯 𑌆𑌵𑌸𑌥𑌾𑌃** —𑌪𑌿𑌤𑍃𑌶𑌰𑍀𑌰𑌂, 𑌮𑌾𑌤𑍃𑌗𑌰𑍍𑌭𑌾𑌶𑌯𑌃, 𑌸𑍍𑌵𑌂 𑌚 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍 𑌇𑌤𑌿 । **𑌤𑍍𑌰𑌯𑌃 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌾𑌃** 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑍍𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌃 ॥

𑌨𑌨𑍁 𑌜𑌾𑌗𑌰𑌿𑌤𑌂 𑌪𑍍𑌰𑌬𑍋𑌧𑌰𑍂𑌪𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌨 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌃 ॥

𑌨 𑌏𑌵𑌮𑍍 ; 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨 𑌏𑌵 ॥

---

லது நாந்தநம் எனப்படுகின்றது ; நந்தி - இன்பமுறுகிறான், ஆநந்த மடைகிறான்).

இவ்வாறு உடம்பினுள் ஜீவாத்மாவாகப் புகுந்த அவனுக்கு - அரசனுக்கு (விளையாட்டிற்காக மேல்மாடம்முதலிய இடங்கள் அமைக்கப்படுமாறு)போல, மூன்று இடங்கள் (அமைக்கப்பட்டன ; அவை) நனவுகாலத்திலே இந்திரியநிலையாகிய வலது கண்ணும், கனவுகாலத்திலே உள்ளேயுள்ள மனதும், உறக்கக்காலத்திலே ஹிருதயஆகாசமுமாம் என்க. அல்லது, மேல்(வரும் அத்தியாயத்தினுள்) கூறப்படுகின்ற தந்தையுடம்பு தாயுடம்பு தன்உடம்பு என்னும் மூன்று இடங்கள் (அமைக்கப்பட்டன என்னலாம். அந்த ஆத்மாவினால்) - நனவு, கனவு, உறக்கம் என்னும் பெயருடைய மூன்று கனவுகள் (காணப்படுகின்றன).

(சங்கை) :— ஆயின், நனவு அறிவுவடிவிற்றாதலால் கனவாகாது நனவிலே குடம்முதலிய உள்பொருள்களைக் காண்கின்றோம் ; கனவிலோ இல்பொருள்களைக் காண்கின்றோம். ஆதலால், முந்தின நிலையாகிய நனவு தெளிவாம் ; பிந்தின நிலையாகிய கனவு மயக்கமாம்].

(ஸமாதாநம்) :— இப்படியன்று ; (நனவும்) கனவேதான் [கனஅறிவொடு நனவுஅறிவு சமமாய்நிற்றலால், நனவும் கனவுதான் ன்பது].

कथम्? —

परमार्थस्वात्मप्रबोधाभावात्, स्वप्नवदसद्वस्तुदर्शना-च्च ॥

अयमेव आवसथः चक्षुर्दक्षिणं प्रथमः । अन्तर्मनो द्वितीयः । हृदयाकाशस्तृतीयः । "अयमावसथः" इत्युक्तानुवाद एव । तेषु ह्ययमावसथेषु पर्यायेणात्मभावेन वर्तमानोऽविद्यया दीर्घकालं गाढं प्रसुप्तः स्वाभाविक्या न प्रबुध्यते अनेकशतसहस्रानर्थसन्निपातजदुःखमुद्गराभिघातानुभवैरपि ॥ १२ ॥

---

(சங்கை) :— எப்படி?

(ஸமாதாநம்) :— பரமார்த்தமான தன்ஆத்மஅறிவு இல்லாமை யினுலும், கனவினுள்போல இல்பொருள்களைக் காண்டலாலும் என்க. [கனவாவது - உள்ளபொருளை மறைத்து எழுவதாய், இல்பொருளைக் காட்டும் தோற்றம். நனவும் - உள்ளபொருளான ப்ரஹ்மத்தை மறைத்து எழுவதாய், இல்பொருளான ஜகத்தைக் காட்டும் தோற்ற மாதலால், கனவாம். அவ்வாறே, உறக்கத்தையும் கண்டுகொள்க. உலகிலே அவிவேகிகட்கு அமைந்த கனவு ஒன்ருயிருந்தாலும், அக்கனவின் லக்ஷணத்திஞல் விவேகிகட்கு அமைந்த கனவு மூன்றென்க.]

இதே இடமாகிய வலது கண் முதலாவது: உள்ளேயுள்ள மனம் இரண்டாவது: ஹிருதயஆகாசம் மூன்ருவது. "இது இடம்" எனப்பது - கூறினதை மீண்டும் கூறுதலே யாம். [இடம் வெளியிலே உள்ளது என்னும் மயக்கத்தைப் போக்கும்பொருட்டு, கண்முதலிய இடங்கள் கைவிரலிஞல் "இது இடம்" எனச் சுட்டிக்காட்டப்படுகின்றன.— ஆ இவன் அந்த இடங்களிலேயன்ருே முறையே ஆத்மாவாக வாழ்பவனாய், இயல்பிலேஅமைந்த அவித்யையினுல் நெடிதுகாலமாய் அயர்ந்து உறங்கிக்கொண்டிருக்கிருன்; பல நூருயிரமான தீங்குகள் நேரிட்டு அதனுலாகும் துன்பங்களாகிய செம்மட்டிகளால் அடிக்கப்பெற்ற அனுபவங்களாலுங்கூட விழித்துக்கொள்கிருனில்லை. (கஉ)

௧௩. 𑌸 𑌜𑌾𑌤𑍋 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌭𑌿𑌵𑍍𑌯𑍈𑌖𑍍𑌯𑌤𑍍𑌕𑌿𑌮𑌿𑌹𑌾𑌨𑍍𑌯𑌂 𑌵𑌾𑌵𑌦𑌿𑌷𑌦𑌿𑌤𑌿। 𑌸 𑌏𑌤𑌮𑍇𑌵 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌤𑌮𑌮𑌪𑌶𑍍𑌯𑌦𑌿𑌦𑌮𑌦𑌰𑍍𑌶𑌮𑌿𑌤𑍀3 ॥

𑌸 𑌜𑌾𑌤𑌃 𑌶𑌰𑍀𑌰𑍇 𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑍋 𑌜𑍀𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌅𑌭𑌿𑌵𑍍𑌯𑍈𑌖𑍍𑌯𑌤𑍍 𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑍋𑌤𑍍 । 𑌕𑌿𑌮𑍍 𑌇𑌹 𑌅𑌨𑍍𑌯𑌂 𑌵𑌾𑌵𑌦𑌿𑌷𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌸 𑌕𑌦𑌾𑌚𑌿𑌤𑍍 𑌪𑌰𑌮𑌕𑌾𑌰𑍁𑌣𑌿𑌕𑍇𑌨 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑍇𑌣 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌬𑍋𑌧𑌕𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾𑌂 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑌾𑌭𑍇𑌰𑍍𑌯𑌾𑌂 𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌣𑌮𑍂𑌲𑍇 𑌤𑌾𑌡𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌯𑌾𑌂, 𑌏𑌤𑌮𑍍 𑌏𑌵 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑍁𑌰𑌿 𑌶𑌯𑌾𑌨𑌂 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌬𑍃𑌹𑌤𑍍—𑌤𑌤𑌮𑌂 𑌤𑌕𑌾𑌰𑍇𑌣 𑌏𑌕𑍇𑌨 𑌲𑍁𑌪𑍍𑌤𑍇𑌨 𑌤𑌤𑌤𑌮𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌤𑌮𑌂—𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌆𑌕𑌾𑌶𑌵𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌪𑌶𑍍𑌯𑌤𑍍 𑌅𑌪𑌶𑍍𑌯𑌤𑍍।

---

உண்மையினைக் காணுதல்.

௧௩. அவன் பிறந்தவனாகி, பொருள்களை ஆராயலானான். "நான் இங்கே வேறானதைக் கூறுவேனா?" என அவன், இதே புருஷனாய் வியாபித்துநிற்கும் ப்ரஹ்மத்தைக் காணலாயினான்:— "இதனைக் கண்டிருக்கிறேன்" என்பதாஉ.

அவன் உடம்பினுள் ஜீவாத்மாவாகப் புகுந்தவனாகிப் பொருள்களை ஆராயலானான். (அவன் உடம்பினுள் புகுந்துநிற்கையால் பிறப்பு இறப்பு நனவு கனவு உறக்கம் முதலியவற்றால் உழன்று அலைபவனாகி, "காணப்படுகின்ற மண் விண் முதலியவையும், காண்கின்ற ஜீவர்களும் என்ன?" என ஆராய்ந்தவிடத்து, "ப்ரஹ்மத்தினும்) வேறானதைக் கூறுவேனோ?" எனச் சொல்லலுற்றான்: ஜகத்திலே ப்ரஹ்மத்திற்கு வேறாய் ஒன்றைக் கூறுதல் இயலாது என நிச்சயித்தான். இனி,) ஆத்மஅறிவு என்னும் விழிப்பைக் கொடுக்கும் ஆரவாரத்தைச் செய்கின்ற வேதாந்தம் என்னும் பெரிய பேரிகையானது பேரருளுடைய ஆசார்யனால் ஒருகாலத்து அந்த (ஜீவனுடைய) காதடியிலே முழக்கப்பட, அவன் - படைப்புமுதலியவற்றிற்குக் கர்த்தாவாகப் பிரகிருதத்தில் பேசப்பட்டுவருவதாய், உடம்பினுள் தங்கிநிற்கும் ஆத்மாவாய், ஆகாசம்போல எங்கும் நிறைந்த ப்ரஹ்மத்தை, பெருமையைத்

— कथम्? — इदं ब्रह्म मम आत्मनः स्वरूपमदर्शं दृष्टवानस्मि । अहो इति विचारणार्था प्लुतिः ॥ ௧௩ ॥

௧௪. तस्मादिदन्द्रो नामेदन्द्रो ह वै नाम तमिदन्द्रं सन्तमिन्द्र इत्याचक्षते परोक्षेण । परोक्षप्रिया इव हि देवाः परोक्षप्रिया इव हि देवाः ॥ इत्यैतरेयोपनिषदि प्रथमाध्याये तृतीयः खण्डः ॥

यस्मात् "इदम्" इत्येवं 'यत्साक्षादपरोक्षाद्ब्रह्म' सर्वान्तरमपश्यन्न परोक्षेण, तस्मादिदं पश्यतीति इदन्द्रो नाम परमात्मा । इदन्द्रो ह वै नाम प्रसिद्धो लोके ईश्वरः । तमेवमिदन्द्रं सन्तमिन्द्र इति परोक्षेण परोक्षाभिधानेनाचक्षते ब्रह्म-

---

தெளிந்து பார்த்தான்.—எப்படி ?—"ப்ரஹ்மத்தை என் ஆத்மாவின் வடிவாகக் கண்டவனாகிறேன்."—இ தர்ஶம் (என்னும் சொல் - இடையில்) கெட்டுநிற்கும் ஒருதகாரத்தோடு (தோன்ற), த தர்ஶம் (என்று ஆகும். என்பதுஉ என்னும்) அளபெடையானது - "ஆஅ! நன்று!" என்னும் ஆராய்ச்சிப்பொருளின்மேல் நிற்பதாம். (௧௩)

பரமாத்மாவிற்கு இதந்திரன் (இந்திரன்) என்று பெயர்.

௧௪. அதனால், இதந்திரன் என்று பெயர்; (ஈச்வரன்) இதந்திரன் என ப்ரஸித்தன். (ஞானிகள்) - இதந்திரனாகஇருக்கின்ற அவனை இந்திரன் என்று மறைவாகச் சொல்லுகிறார்கள்; ஏனெனில், பெரியோராவார் மறைவிலே பிரியமுள்ளவர்போலும்; ஏனெனில், பெரியோராவார் மறைவிலே பிரியமுள்ளவர்போலும்.

ஐதரேயஉபநிஷத்திலே முதல்அத்தியாயத்தில் மூன்றாம் பிரிவு முற்றும்.

'எது இடையீடில்லாது தெரியும் ப்ரஹ்மமாய்' (ப்ர - ௩-௪-௧) எல்லாவற்றினுள்ளும் உள்ளதோ, அது "இதுதான்" என்றிவ்வாறு (ஜீவன்) நேரே கண்டமையால் - "இதனைக் காண்கிறான்" என 'இதந்திரன்' என்னும் பெயரைப் பரமாத்மா (அடையலானான்). உலகிலே ஈச்வரன் இதந்திரனாகவே பிரஸித்தமானவன். இவ்வாறு இதந்திரனாகவுள்ள அவனை - இந்திரன் என்னும் மறைவான பெயரினால், ப்ரஹ்ம

விஷ: ஸம்வ்யவஹாராயைவ ப்ரஜ்ஞாதஜ்ஞாதவ்யஸமாநஸ்ஸ ப்ரத்யக்ஷநாமக்ரஹணஸயாத்; ததா ஹி பரோக்ஷப்ரியா: பரோக்ஷநாமக்ரஹணப்ரியா இவ ஹி ஸவ ஹி யஸ்மாத் தேவா: । கிமுத ஸர்வதேவாநாம் அபி தேவோ மஹேச்வர: । த்விருக்தவசநம் அத்யாயபரிஸமாப்த்யர்த்தம் ॥ கச ॥

இதி ஶ்ரீமதைதரேயோபநிஷத்பாஷ்யே ப்ரதமாத்யாயே

த்ருதீய: கண்ட: ॥

---

ஞானிகள் நன்கு வியவஹரித்தற்காகக் கூறுகிறார்கள்; பூஜிக்கத்தக்கோர்க்கும் பூஜிக்கத்தக்கோனாதலால், நேராகப் பெயரெடுத்துக்கூறுதலை அஞ்சி யென்க. [பூஜிக்கத்தக்கோர் - பெரியோர். அவன் பெரியோர்க்கும் பெரியோனாதலின், அவனது பெயரை உள்ளபடி முழுதும் எடுத்துக்கூறலை அஞ்சும் ஞானிகள் - அதனைக் கூசாமல் வியவஹரிக்கும்பொருட்டு அதிலுள்ள ஒரு எழுத்தை நீக்கி, இதந்திரன் என்றற்கு ஈடாக இந்திரன் என்கிறார்கள்.] ஏனெனில், பெரியோர்கள் - பெயரை மறைவாக எடுத்துரைத்தலிலேயே பிரியமுடையவராம்; பெரியோரெல்லார்க்கும் பெரியவனான மஹேச்வரன் (அத்தகையோன் எனக்) கூறவும் வேண்டுமோ? (அதுபற்றியன்றோ உலகிலே ஒருவன் தனது குருவாகிய யஜ்ஞமித்ரன் என்னும் பெயருடையவனை 'ஆசாரியன்' 'உபாத்யாயன்' என இவ்வாறன்றி, யஜ்ஞமித்ரன் என்றே பெயரெடுத்துக்கூறுவதில்லை. அப்படிக் கூறுவதிலேயே பெரியோர்க்குப்பிரியமாம் என்பது. "ஏனெனில், பெரியோ........போலும்" என) இருமுறை கூறுதல், இப்பொழுது கூறிவரும் அத்தியாயம் முடியும் பொருட்டு. (கச)

ஐதரேயஉபநிஷத்பாஷ்யத்திலே முதல்அத்தியாயத்தில்

மூன்றும் பிரிவு முற்றும்.

---

## முதல் அத்தியாயம்.

---

### முதல் பிரிவு.

பதவுரை.

க.

| | |
|---|---|
| 𑌇𑌦𑌂 | இது |
| 𑌅𑌗𑍍𑌰𑍇 | முதலில் |
| 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌏𑌵 | ஆத்மாவாகவே |
| 𑌏𑌕𑌃 𑌏𑌵 | தனியாகவே |
| 𑌆𑌸𑍀𑌤𑍍 | இருந்தது ; |
| 𑌮𑌿𑌷𑌤𑍍 | இமைப்பது |
| 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 | வேறு |
| 𑌕𑌿𑌂𑌚𑌨 | ஒன்றும் |
| 𑌨 | இல்லை. |
| 𑌸𑌃 | அவன்,— |
| (𑌅𑌹𑌂) | “ (நான்) |
| 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 | உலகங்களை |
| 𑌸𑍃𑌜𑍈 𑌨𑍁 | படைப்பேனாக ” |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌸𑌮𑍀𑌕𑍍𑌷𑌤 | ஆலோசித்தான். |

---

உ.

| | |
|---|---|
| 𑌸𑌃 | அவன் |
| 𑌇𑌮𑌾𑌨𑍍 | இந்த |

| | |
|---|---|
| லோகாந் | உலகங்களை |
| அஸ்ருஜத | படைத்தான். |
| (தே) | (அவை) |
| அம்ப: | அம்பஸ் |
| மரீசீ: | மரீசி |
| மரம் | மரம் |
| ஆப: | அப்பு |
| (இதி) | (என்று) |
| (உச்யந்தே) | (கூறப்படுகின்றன.) |
| அத: | அந்த |
| அம்ப: | அம்பஸ் |
| திவம் பரேண | த்யுலோகத்திற்கு அப்பால் |
| (அஸ்தி) | (இருக்கின்றது.) |
| (தஸ்ய) | (அதற்கு) |
| த்யௌ: | த்யுலோகம் |
| ப்ரதிஷ்டா | ஆதாரமாய் |
| (பவதி) | (உள்ளது.) |
| மரீசய: | மரீசிகள் |
| அந்தரிக்ஷம் | அந்தரிக்ஷமாக |
| (பவந்தி) | (இருக்கின்றன.) |
| மர: | மரம் |
| ப்ருதிவீ | பூமியாய் |
| (பவதி) | (உள்ளது.) |
| யா: | எவை |
| அதஸ்தாத் | கீழே |
| (ஸந்தி) | (உள்ளனவோ) |
| தா: | அவை |
| ஆப: | அப்புக்களாக |
| (உச்யந்தே) | (கூறப்படுகின்றன.) |

௩.

| | |
|---|---|
| 𑌸𑌃 | அவன்,— |
| 𑌇𑌮𑍇 | "இந்த |
| 𑌲𑍋𑌕𑌾𑌃 | லோகங்கள் |
| (𑌸𑌂𑌤𑌿) 𑌨𑍁 | (உள்ளன); |
| 𑌲𑍋𑌕𑌪𑌾𑌲𑌾𑌨𑍍 | லோகங்களைக் காப்போரை |
| 𑌸𑍃𑌜𑍈 𑌨𑍁 | படைப்பேனாக" |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌐𑌕𑍍𑌷𑌤 | ஆலோசித்தான். |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌅𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 𑌏𑌵 | ஜலத்திலிருந்தே |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 | புருஷனை |
| 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 | திரட்டி யெடுத்து |
| 𑌅𑌮𑍂𑌰𑍍𑌛𑌯𑌤𑍍 | அமைத்தான். |

---

௪.

| | |
|---|---|
| (𑌈𑌶𑍍𑌵𑌰𑌃) | (ஈச்வரன்) |
| 𑌤𑌂 | அவனை |
| 𑌅𑌭𑍍𑌯𑌤𑌪𑌤𑍍 | தபித்தான். |
| 𑌅𑌭𑌿𑌤𑌪𑍍𑌤𑌸𑍍𑌯 | தபிக்கப்பட்ட |
| 𑌤𑌸𑍍𑌯 | அதனது |
| 𑌮𑍁𑌖𑌂 | வாய் |
| 𑌅𑌣𑍍𑌡𑌂 𑌯𑌥𑌾 | முட்டைபோல |
| 𑌨𑌿𑌰𑌭𑌿𑌦𑍍𑌯𑌤 | வெடித்தது. |
| 𑌮𑍁𑌖𑌾𑌤𑍍 | வாயினின்று |
| 𑌵𑌾𑌕𑍍 | வாக்கு (தோன்றிற்று.) |
| 𑌵𑌾𑌚𑌃 | வாக்கினின்று |
| 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 | அக்நி (தோன்றிற்று). |
| 𑌨𑌾𑌸𑌿𑌕𑍇 | மூக்குக்கள் |
| 𑌨𑌿𑌰𑌭𑌿𑌦𑍍𑌯𑍇𑌤𑌾𑌂 | வெடித்தன. |

| | |
|---|---|
| 𑌨𑌾𑌸𑌿𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 | மூக்குக்களினின்று |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 | ப்ராணன் (தோன்றிற்று). |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌦𑍍 | ப்ராணனினின்று |
| 𑌵𑌾𑌯𑍁𑌃 | வாயு (தோன்றிற்று). |
| 𑌅𑌕𑍍𑌷𑌿𑌣𑍀 | கண்கள் |
| 𑌨𑌿𑌰𑌭𑌿𑌦𑍍𑌯𑍇𑌤𑌾𑌂 | வெடித்தன. |
| 𑌅𑌕𑍍𑌷𑍀𑌭𑍍𑌯𑌾𑌂 | கண்களினின்று |
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 | ஒளி (தோன்றிற்று). |
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌃 | ஒளியினின்று |
| 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌃 | சூரியன் (தோன்றிற்று). |
| 𑌕𑌰𑍍𑌣𑍌 | காதுகள் |
| 𑌨𑌿𑌰𑌭𑌿𑌦𑍍𑌯𑍇𑌤𑌾𑌂 | வெடித்தன. |
| 𑌕𑌰𑍍𑌣𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 | காதுகளினின்று |
| 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 | ஓசை (தோன்றிற்று). |
| 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍍 | ஓசையினின்று |
| 𑌦𑌿𑌶𑌃 | திக்குக்கள் (தோன்றின). |
| 𑌤𑍍𑌵𑌕𑍍 | மெய் |
| 𑌨𑌿𑌰𑌭𑌿𑌦𑍍𑌯𑌤 | வெடித்தது. |
| 𑌤𑍍𑌵𑌚𑌃 | மெய்யினின்று |
| 𑌲𑍋𑌮𑌾𑌨𑌿 | மயிர்கள் (தோன்றின). |
| 𑌲𑍋𑌮𑌭𑍍𑌯𑌃 | மயிர்களினின்று |
| 𑌓𑌷𑌧𑌿𑌵𑌨𑌸𑍍𑌪𑌤𑌯𑌃 | செடிகளும், மரங்களும் (தோன்றி[ன). |
| 𑌹𑍃𑌦𑌯𑌂 | ஹிருதயம் |
| 𑌨𑌿𑌰𑌭𑌿𑌦𑍍𑌯𑌤 | வெடித்தது. |
| 𑌹𑍃𑌦𑌯𑌾𑌦𑍍 | ஹிருதயத்தினின்று |
| 𑌮𑌨𑌃 | மனம் (தோன்றிற்று). |
| 𑌮𑌨𑌸𑌃 | மனத்தினின்று |
| 𑌚𑌂𑌦𑍍𑌰𑌮𑌾𑌃 | சந்திரன் (தோன்றிற்று). |
| 𑌨𑌾𑌭𑌿𑌃 | நாபி |
| 𑌨𑌿𑌰𑌭𑌿𑌦𑍍𑌯𑌤 | வெடித்தது, |

| | |
|---|---|
| 𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌃 | நாபியினின்று |
| 𑌅𑌪𑌾𑌨𑌃 | அபாநன் (தோன்றிற்று). |
| 𑌅𑌪𑌾𑌨𑌾𑌤𑍍 | அபாநனினின்று |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 | மிருத்யு (தோன்றிற்று). |
| 𑌶𑌿𑌶𑍍𑌨𑌂 | சிச்நம் |
| 𑌨𑌿𑌰𑌭𑌿𑌦𑍍𑌯𑌤 | வெடித்தது. |
| 𑌶𑌿𑌶𑍍𑌨𑌾𑌤𑍍 | சிச்நத்தினின்று |
| 𑌰𑍇𑌤𑌃 | ரேதஸ் (தோன்றிற்று). |
| 𑌰𑍇𑌤𑌸𑌃 | ரேதஸினின்று |
| 𑌆𑌪𑌃 | ஜலங்கள் (தோன்றின). |

---

# இரண்டாம் பிரிவு.

---

பதவுரை.

க.

| | |
|---|---|
| 𑌸𑍃𑌷𑍍𑌟𑌾𑌃 | படைக்கப்பட்ட |
| 𑌤𑌾𑌃 | அந்த |
| 𑌏𑌤𑌾𑌃 | இந்த |
| 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 | தேவதைகள் |
| 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 | இந்த |
| 𑌮𑌹𑌤𑌿 | பெரிய |
| 𑌅𑌰𑍍𑌣𑌵𑍇 | ஸமுத்திரத்தில் |
| 𑌪𑍍𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤 | வீழ்ந்தார்கள். |
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌤𑌂 | அவனை |
| 𑌅𑌶𑌨𑌾𑌪𑌿𑌪𑌾𑌸𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 | பசி தாகங்களால் |
| 𑌅𑌨𑍍𑌵𑌵𑌾𑌰𑍍𑌜𑌤𑍍 | தொடரும்படி செய்தான். |
| (𑌵𑌯𑌂) | "(நாங்கள்) |
| 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 | எதிலே |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃 | நிலைகொண்டவராய் |
| 𑌅𑌨𑍍𑌨𑌂 | உணவை |
| 𑌅𑌦𑌾𑌮 | உண்ணக்கூடுமோ |
| (𑌤𑌤𑍍) | (அந்த) |
| 𑌆𑌯𑌤𑌨𑌂 | இடத்தை |
| 𑌨𑌃 | எங்கட்கு |
| 𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 | அமைக்க" |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌤𑌾𑌃 | அவர்கள் |

| | |
|---|---|
| 𑌏𑌨𑌂 | இவனை |
| 𑌅𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍 | கூறினர். |

---

உ.

| | |
|---|---|
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌤𑌾𑌭𑍍𑌯𑌃 | அவர்களுக்கு |
| 𑌗𑌾𑌂 | ஆவை |
| 𑌆𑌨𑌯𑌤𑍍 | கொண்டுவந்தான். |
| 𑌤𑌾𑌃 | அவர்கள்,— |
| 𑌅𑌯𑌂 | " இது |
| 𑌨𑌃 | எங்களுக்கு |
| 𑌨 𑌅𑌲𑌂 𑌵𑍈 | போதியதன்று" |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌅𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍 | சொன்னார்கள். |
| (𑌅𑌨𑌨𑍍𑌤𑌰𑌂) | (பின்பு) |
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌤𑌾𑌭𑍍𑌯𑌃 | அவர்களுக்கு |
| 𑌅𑌶𑍍𑌵𑌂 | குதிரையை |
| 𑌆𑌨𑌯𑌤𑍍 | கொண்டுவந்தான். |
| 𑌤𑌾𑌃 | அவர்கள்,— |
| 𑌅𑌯𑌂 | " இது |
| 𑌨𑌃 | எங்களுக்கு |
| 𑌨 𑌅𑌲𑌂 𑌵𑍈 | போதியதன்று" |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌅𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍 | சொன்னார்கள். |

---

ங.

| | |
|---|---|
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌤𑌾𑌭𑍍𑌯𑌃 | அவர்களுக்கு |

| | |
|---|---|
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 | மனிதனை |
| 𑌆𑌨𑌯𑌤𑍍 | கொணர்ந்தான். |
| 𑌤𑌾𑌃 | அவர்கள்,— |
| 𑌬𑌤 | " ஆ ! |
| 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 | ஸுகிருதமே ! " |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌅𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍 | சொன்னார்கள். |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌵𑌾𑌵 | புருஷனேயன்றோ |
| 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 | ஸுகிருதம். |
| 𑌯𑌥𑌾𑌽𑌽𑌯𑌤𑌨𑌂 | " உரிய இடத்தை |
| 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌤 | புகுங்கள் " |
| 𑌇𑌤𑌿 | என்று |
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌤𑌾𑌃 | அவர்களை |
| 𑌅𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 | சொன்னான். |

ச. ,

| | |
|---|---|
| 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 | அக்நி |
| 𑌵𑌾𑌕𑍍 | வாக்காக |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | ஆகி |
| 𑌮𑍁𑌖𑌂 | வாயை |
| 𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 | புகுந்தது. |
| 𑌵𑌾𑌯𑍁𑌃 | வாயு |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 | ப்ராணனாக |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | ஆகி |
| 𑌨𑌾𑌸𑌿𑌕𑍇 | மூக்குக்களை |
| 𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 | புகுந்தது. |
| 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌃 | சூரியன் |
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 | ஒளியாக |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | ஆகி |

| | |
|---|---|
| 𑌅𑌕𑍍𑌷𑌿𑌣𑍀 | கண்களை |
| 𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 | புகுந்தது. |
| 𑌦𑌿𑌶𑌃 | திக்குக்கள் |
| 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 | ஓசையாக |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | ஆகி |
| 𑌕𑌰𑍍𑌣𑍌 | காதுகளை |
| 𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌨𑍍 | புகுந்தன. |
| 𑌓𑌷𑌧𑌿𑌵𑌨𑌸𑍍𑌪𑌤𑌯𑌃 | செடிகளும், மரங்களும் |
| 𑌲𑍋𑌮𑌾𑌨𑌿 | மயிர்களாக |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | ஆகி |
| 𑌤𑍍𑌵𑌚𑌂 | த்வக்கை |
| 𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌨𑍍 | புகுந்தன. |
| 𑌚𑌂𑌦𑍍𑌰𑌮𑌾𑌃 | சந்திரன் |
| 𑌮𑌨𑌃 | மனமாக |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | ஆகி |
| 𑌹𑍃𑌦𑌯𑌂 | ஹிருதயத்தை |
| 𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 | புகுந்தது. |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 | மிருத்யு |
| 𑌅𑌪𑌾𑌨𑌃 | அபானனாக |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | ஆகி |
| 𑌨𑌾𑌭𑌿𑌂 | நாபியை |
| 𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 | புகுந்தது. |
| 𑌆𑌪𑌃 | ஜலங்கள் |
| 𑌰𑍇𑌤𑌃 | ரேதஸாக |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | ஆகி |
| 𑌶𑌿𑌶𑍍𑌨𑌂 | சிச்நத்தை |
| 𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌨𑍍 | புகுந்தன. |

---

ரு.

| | |
|---|---|
| 𑌅𑌶𑌨𑌾𑌪𑌿𑌪𑌾𑌸𑍇 | பசி தாகங்கள்,— |

| | |
|---|---|
| 𑌆𑌵𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 | “எங்களுக்கு |
| (𑌆𑌯𑌤𑌨𑌂) | (இடத்தை) |
| 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 | சிந்திக்க” |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌤𑌂 | அவனை |
| 𑌅𑌬𑍍𑌰𑍂𑌤𑌾𑌂 | சொல்லின. |
| 𑌏𑌤𑌾𑌸𑍁 𑌏𑌵 | “இதே |
| 𑌦𑍇𑌵𑌤𑌾𑌸𑍁 | தேவதைகளிடத்து |
| 𑌵𑌾𑌂 | உங்களை |
| 𑌆𑌭𑌜𑌾𑌮𑌿 | ஆதரிக்கின்றேன்; |
| 𑌏𑌤𑌾𑌸𑍁 | இவர்களிடத்து |
| 𑌭𑌾𑌗𑌿𑌨𑍍𑌯𑍌 | பங்காளிகளாக |
| 𑌕𑌰𑍋𑌮𑌿 | செய்கின்றேன்” |
| 𑌇𑌤𑌿 | என்று |
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌤𑍇 | அவர்களை |
| 𑌅𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 | சொன்னான்., |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆதலின் |
| (𑌯𑌦𑌾) | (எப்பொழுது) |
| 𑌯𑌸𑍍𑌯𑍈 𑌕𑌸𑍍𑌯𑍈 𑌚 | யாதாயினும் ஒரு |
| 𑌦𑍇𑌵𑌤𑌾𑌯𑍈 | தேவதைக்கு |
| 𑌹𑌵𑌿𑌃 | ஹவிஸ் |
| 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇 | அர்ப்பிக்கப்படுகின்றதோ |
| (𑌤𑌦𑌾) | (அப்பொழுது) |
| 𑌅𑌶𑌨𑌾𑌪𑌿𑌪𑌾𑌸𑍇 | பசி தாகங்கள் |
| 𑌅𑌸𑍍𑌯𑌾𑌂 | அதனிடத்து |
| 𑌭𑌾𑌗𑌿𑌨𑍍𑌯𑍌 𑌏𑌵 | பங்காளிகளாகவே |
| 𑌭𑌵𑌤𑌃 | ஆகின்றன. |

## மூன்றும் பிரிவு.

### பதவுரை.

க.

| | |
|---|---|
| 𑌸𑌃 | அவன்,— |
| 𑌇𑌮𑍇 | " இந்த |
| 𑌲𑍋𑌕𑌾𑌃 𑌚 | லோகங்களும் |
| 𑌲𑍋𑌕𑌪𑌾𑌲𑌾𑌃 𑌚 | லோகபாலர்களும் |
| (𑌸𑌨𑍍𑌤𑌿) 𑌨𑍁 | (இருக்கிறுர்கள்.) |
| 𑌏𑌭𑍍𑌯𑌃 | இவர்களுக்கு |
| 𑌅𑌨𑍍𑌨𑌂 | உணவை |
| 𑌸𑍃𑌜𑍈 | படைப்பேனுக" |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌐𑌕𑍍𑌷𑌤 | ஆலோசித்தான். |

உ.

| | |
|---|---|
| 𑌸𑌃 | அவன் |
| 𑌅𑌪𑌃 | ஜலங்களை |
| 𑌅𑌭𑍍𑌯𑌤𑌪𑌤𑍍 | ஆலோசித்தான். |
| 𑌅𑌭𑌿𑌤𑌪𑍍𑌤𑌾𑌭𑍍𑌯𑌃 | ஆலோசிக்கப்பட்ட |
| 𑌤𑌾𑌭𑍍𑌯𑌃 | அவற்றினின்று |
| 𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌃 | உருவம் |
| 𑌅𑌜𑌾𑌯𑌤 | உண்டாயிற்று. |
| 𑌯𑌾 𑌵𑍈 | எதுவே |
| 𑌸𑌾 | அந்த |

| | |
|---|---|
| மூர்த்தி: | உருவமாக |
| அஜாயத | உண்டாயிற்ரு |
| தத் ஏவ | அதுவே |
| அந்நம் | உணவாக |
| (அபவத்) | (ஆயிற்று.) |

ரு.

| | |
|---|---|
| ஸ்ருஷ்டம் | படைக்கப்பட்ட |
| தத் | அந்த |
| ஏநத் | இது |
| பராங் (ஸத்) | திரும்பிக்கொண்டதாய் |
| அத்யஜிகாம்ஸத் | செல்ல விரும்பிற்று. |
| (ஸ:) | (அவன்) |
| தத் | அதனை |
| வாசா | வாக்கிஞல் |
| அஜிக்ருக்ஷத் | பிடிக்க விரும்பிஞன் ; |
| தத் | அதனை |
| வாசா | வாக்கிஞல் |
| க்ருஹீதும் | பிடிக்க |
| ந அசக்நோத் | வல்லவஞகவில்லை. |
| ஸ: | அவன் |
| ஏநத் ஹ | இதனை |
| வாசா | வாக்கிஞல் |
| அக்ருஹைஷ்யத் யத் | பிடித்திருந்தால், |
| (ஸர்வ:) | (ஸகலமான) |
| (ஜந்து:) | (ப்ராணியும்) |
| அந்நம் | உணவை |
| அபிவ்யாஹ்ருத்ய ஹ ஏவ | சொல்லியே |
| அத்ரப்ஸ்யத் | திருப்தியடையும். |

௪.

(𑌸𑌃) (அவன்)
𑌤𑌤𑍍 அதனை
𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨 ப்ராணனால்
𑌅𑌜𑌿𑌘𑍃𑌕𑍍𑌷𑌤𑍍 பிடிக்க விரும்பினன் ;
𑌤𑌤𑍍 அதனை
𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨 ப்ராணனால்
𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑍁𑌂 பிடிக்க
𑌨 𑌅𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑍍 வல்லவனாகவில்லை.
𑌸𑌃 அவன்
𑌏𑌨𑌤𑍍 𑌹 இதனை
𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨 ப்ராணனால்
𑌅𑌗𑍍𑌰𑌹𑍈𑌷𑍍𑌯𑌤𑍍 𑌯𑌤𑍍 பிடித்திருந்தால்,
(𑌸𑌰𑍍𑌵𑌃) (ஸகலமான)
(𑌜𑌨𑌃) (ப்ராணியும்)
𑌅𑌨𑍍𑌨𑌂 உணவை
𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑍍𑌯 𑌹 𑌏𑌵 முகர்ந்தே
𑌅𑌤𑍍𑌰𑌪𑍍𑌸𑍍𑌯𑌤𑍍 திருப்தியடையும்.

---

௫.

(𑌸𑌃) (அவன்)
𑌤𑌤𑍍 அதனை
𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 கண்ணால்
𑌅𑌜𑌿𑌘𑍃𑌕𑍍𑌷𑌤𑍍 பிடிக்க விரும்பினன் ;
𑌤𑌤𑍍 அதனை
𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 கண்ணால்
𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑍁𑌂 பிடிக்க
𑌨 𑌅𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑍍 வல்லவனாகவில்லை.
𑌸𑌃 அவன்

| | |
|---|---|
| 𑌏𑌤𑌤𑍍 𑌹 | இதனை |
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 | கண்ணால் |
| 𑌅𑌗𑍍𑌰𑌹𑍈𑌷𑍍𑌯𑌤𑍍 𑌯𑌤𑍍 | பிடித்திருந்தால், |
| (𑌸𑌰𑍍𑌵𑌃) | (ஸகலமான) |
| (𑌜𑌨𑌃) | (ப்ராணியும்) |
| 𑌅𑌨𑍍𑌨𑌂 | உணவை |
| 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌹 𑌏𑌵 | பார்த்தே |
| 𑌅𑌤𑍍𑌰𑌪𑍍𑌸𑍍𑌯𑌤𑍍 | திருப்தியடையும். |

௬.

| | |
|---|---|
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌤𑌤𑍍 | அதனை |
| 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇𑌣 | காதினால் |
| 𑌅𑌜𑌿𑌘𑍃𑌕𑍍𑌷𑌤𑍍 | பிடிக்க விரும்பினான் ; |
| 𑌤𑌤𑍍 | அதனை |
| 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇𑌣 | காதினால் |
| 𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑍁𑌂 | பிடிக்க |
| 𑌨 𑌅𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑍍 | வல்லவனாகவில்லை. |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌏𑌤𑌤𑍍 𑌹 | இதனை |
| 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇𑌣 | காதினால் |
| 𑌅𑌗𑍍𑌰𑌹𑍈𑌷𑍍𑌯𑌤𑍍 𑌯𑌤𑍍 | பிடித்திருந்தால், |
| (𑌸𑌰𑍍𑌵𑌃) | (ஸகலமான) |
| (𑌜𑌨𑌃) | (ப்ராணியும்) |
| 𑌅𑌨𑍍𑌨𑌂 | உணவை |
| 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌹 𑌏𑌵 | கேட்டே |
| 𑌅𑌤𑍍𑌰𑌪𑍍𑌸𑍍𑌯𑌤𑍍 | திருப்தியடையும். |

௭.

| | |
|---|---|
| (𑌸𑌃) | (அவன்) |

| | |
|---|---|
| 𑌤𑌤𑍍 | அதனை |
| 𑌤𑍍𑌵𑌚𑌾 | த்வக்கினால் |
| 𑌅𑌜𑌿𑌘𑍃𑌕𑍍𑌷𑌤𑍍 | பிடிக்க விரும்பினான் ; |
| 𑌤𑌤𑍍 | அதனை |
| 𑌤𑍍𑌵𑌚𑌾 | த்வக்கினால் |
| 𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑍁𑌂 | பிடிக்க |
| 𑌨 𑌅𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑍍 | வல்லவனாகவில்லை. |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌯𑌦𑍇𑌨𑌦𑍍 𑌹 | இதனை |
| 𑌤𑍍𑌵𑌚𑌾 | த்வக்கினால் |
| 𑌅𑌗𑍍𑌰𑌹𑍈𑌷𑍍𑌯𑌤𑍍 𑌯𑌤𑍍 | பிடித்திருந்தால், |
| (𑌸𑌰𑍍𑌵𑌃) | (ஸகலமான) |
| (𑌜𑌨𑌃) | (ப்ராணியும்) |
| 𑌅𑌨𑍍𑌨𑌂 | உணவை |
| 𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌹 𑌏𑌵 | தொட்டே |
| 𑌅𑌤𑍍𑌰𑌪𑍍𑌸𑍍𑌯𑌤𑍍 | திருப்தியடையும். |

---

௮.

| | |
|---|---|
| (𑌸𑌃) | (அவன்) |
| 𑌤𑌤𑍍 | அதனை |
| 𑌮𑌨𑌸𑌾 | மனத்தினால் |
| 𑌅𑌜𑌿𑌘𑍃𑌕𑍍𑌷𑌤𑍍 | பிடிக்க விரும்பினான் ; |
| 𑌤𑌤𑍍 | அதனை |
| 𑌮𑌨𑌸𑌾 | மனத்தினால் |
| 𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑍁𑌂 | பிடிக்க |
| 𑌨 𑌅𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑍍 | வல்லவனாகவில்லை. |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌯𑌦𑍇𑌨𑌦𑍍 𑌹 | இதனை |
| 𑌮𑌨𑌸𑌾 | மனத்தினால் |

| | |
|---|---|
| அக்ரஹைஷ்யத் யதி | பிடித்திருந்தால், |
| (ஸர்வ:) | (ஸகலமான) |
| (ஜந்து:) | (ப்ராணியும்) |
| அந்நம் | உணவை |
| த்யாத்வா ஹ ஏவ | நினைத்தே |
| அத்ரப்ஸ்யத் | திருப்தியடையும். |

---

௯.

| | |
|---|---|
| (ஸ:) | (அவன்) |
| தத் | அதனை |
| சிச்நேந | சிச்நத்தினால் |
| அஜிக்ருக்ஷத் | பிடிக்க விரும்பினான் ; |
| தத் | அதனை |
| சிச்நேந | சிச்நத்தினால் |
| க்ரஹீதும் | பிடிக்க |
| ந அசக்நோத் | வல்லவனாகவில்லை. |
| ஸ: | அவன் |
| யத் ஏநத் ஹ | இதனை |
| சிச்நேந | சிச்நத்தினால் |
| அக்ரஹைஷ்யத் யதி | பிடித்திருந்தால், |
| (ஸர்வ:) | ஸகலமான) |
| (ப்ராணீ) | (ப்ராணியும்) |
| அந்நம் | உணவை |
| விஸ்ருஜ்ய ஹ ஏவ | மலமாகக் கழித்தே |
| அத்ரப்ஸ்யத் | திருப்தியடையும். |

---

௧௦.

| | |
|---|---|
| (ஸ:) | (அவன்) |
| தத் | அதனை |

| | |
|---|---|
| ஈவாநெநு | அபானனுல் |
| ஈஜி஘்ரக்ஷத் | பிடிக்க விரும்பினுன் ; |
| தத் | அதனை |
| ஆவயத் | பிடித்தான். |
| யத் | எது |
| வாயுஃ | வாயுவாக |
| (ஹவதி) | (உளதோ) |
| ஸஃ | அந்த |
| ஏஷஃ | இது |
| ஈந்நஸ்ய | உணவை |
| ஗்ரஹஃ (ஸ்யாத்) | பிடிப்ப (தாகும்). |
| ஏஷஃ | இது |
| யத் | எந்த |
| வாயுஃ | வாயுவாக |
| (வதூதெ) | (இருக்கின்றதோ) |
| (ஸஃ) | (அது) |
| ஈந்நாயுஃ | உணவை ஆயுளாக வுடையதாய் |
| (ஹவதி) வை | (உள்ள) தன்றே. |

கக.

| | |
|---|---|
| ஸஃ | அவன் |
| ஐக்ஷத | "இது |
| கஷம் | நாணில்லாது |
| நு | எப்படி |
| ஸ்யாத் | இருக்கக்கூடும்?" |
| இதி | என்று |
| ஈக்ஷத | ஆலோசித்தான். |
| ஸஃ | அவன் |
| கதரெண | " இரண்டனுள் எதனுல் |
| ப்ரபத்யை | புகுவேனுக ? " |

| | |
|---|---|
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌸𑌮𑌐𑌕𑍍𑌷𑌤 | ஆலோசித்தான். |
| 𑌸𑌃 | அவன்,— |
| 𑌵𑌾𑌚𑌾 | "வாக்கினல் |
| 𑌅𑌭𑌿𑌵𑍍𑌯𑌾𑌹𑍃𑌤𑌂 | பேசுதல் |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) 𑌯𑌦𑌿 | (ஆகு)மாயின், |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨 | மூக்கினல் |
| 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌤𑌂 | முகர்தல், |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) 𑌯𑌦𑌿 | (ஆகு)மாயின், |
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 | கண்ணல் |
| 𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 | பார்த்தல் |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) 𑌯𑌦𑌿 | (ஆகு)மாயின், |
| 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇𑌣 | காதினல் |
| 𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 | கேட்டல் |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) 𑌯𑌦𑌿 | (ஆகு)மாயின், |
| 𑌤𑍍𑌵𑌚𑌾 | த்வக்கினல் |
| 𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑌂 | தொடுதல் |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) 𑌯𑌦𑌿 | (ஆகு)மாயின், |
| 𑌮𑌨𑌸𑌾 | மனத்தினல் |
| 𑌧𑍍𑌯𑌾𑌤𑌂 | நினைத்தல் |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) 𑌯𑌦𑌿 | (ஆகு)மாயின், |
| 𑌅𑌪𑌾𑌨𑍇𑌨 | அபானனல் |
| 𑌅𑌭𑍍𑌯𑌪𑌾𑌨𑌿𑌤𑌂 | விழுங்குதல் |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) 𑌯𑌦𑌿 | (ஆகு)மாயின், |
| 𑌶𑌿𑌶𑍍𑌨𑍇𑌨 | சிச்நத்தினல் |
| 𑌵𑌿𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 | விடுதல் |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) 𑌯𑌦𑌿 | (ஆகு)மாயின், |
| 𑌅𑌥 | அப்பொழுது |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌕𑌃 | யார்?" |

| | |
|---|---|
| இதி | என்று |
| ஐக்ஷத | ஆலோசித்தான். |

---

க௨.

| | |
|---|---|
| ஸ: | அவன் |
| ஏதம் ஏவ | இதே |
| ஸீமானம் | உச்சியை |
| விதார்ய | பிளந்து |
| ஏதயா | இந்த |
| த்வாரா | வழியினுல் |
| ப்ராபத்யத | புகுந்தான். |
| ஸா | அந்த |
| ஏஷா | இது |
| வித்ருதி: நாம | விதிருதி என்னும் பெயருடைய |
| த்வா: | வாசலாய் |
| (பவதி) | (இருக்கின்றது) |
| தத் | அந்த |
| ஏதத் | இது |
| நாந்தனம் | நாந்தநமாக |
| (பவதி) | (உளது). |
| தஸ்ய | அவனுக்கு |
| த்ரய: | மூன்று |
| ஆவஸதா: | இடங்கள் |
| (பவந்தி) | (இருக்கின்றன.) |
| த்ரய: | மூன்று |
| ஸ்வப்னா: | கனவுகள் |
| (பவந்தி) | (இருக்கின்றன.) |
| அயம் | இது |
| ஆவஸத: | இடம்; |
| அயம் | இது |

| | |
|---|---|
| 𑌆𑌵𑌸𑌥𑌃 | இடம் ; |
| 𑌅𑌯𑌂 | இது |
| 𑌆𑌵𑌸𑌥𑌃 | இடம் |
| 𑌇𑌤𑌿 | என்பது. |

---

௧௩.

| | |
|---|---|
| 𑌸𑌃 | அவன் |
| 𑌜𑌾𑌤𑌃 (𑌸𑌨𑍍) | பிறந்தவனாய் |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | பொருள்களை |
| 𑌅𑌭𑌿𑌵𑍍𑌯𑍈𑌖𑍍𑌯𑌤𑍍 | ஆராய்ந்தான். |
| 𑌇𑌹 | "இங்கே |
| 𑌅𑌨𑍍𑌯𑌂 | வேருனதை |
| 𑌵𑌾𑌵𑌦𑌿𑌷𑌤𑍍 𑌕𑌿𑌂 | கூறுவேனோ ?" |
| 𑌇𑌤𑌿 | என்று |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌏𑌤𑌂 𑌏𑌵 | இதே |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 | புருஷனாய் ' |
| 𑌤𑌤𑌮𑌂 | வியாபித்துள்ள |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 | ப்ரஹ்மத்தை |
| 𑌅𑌪𑌶𑍍𑌯𑌤𑍍 | பார்த்தான். |
| 𑌇𑌦𑌂 | "இதனை |
| 𑌅𑌦𑌰𑍍𑌶𑌂 | பார்த்திருக்கிறேன்" |
| 𑌇𑌤𑍀௩ | என்பதூஉ. |

---

௧௪.

| | |
|---|---|
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | அதனால் |
| (𑌈𑌶𑍍𑌵𑌰𑌃) | (ஈச்வரன்) |
| 𑌇𑌦𑌂𑌦𑍍𑌰𑌃 𑌨𑌾𑌮 | இதந்திரன் என்னும் பெயருடையவனாய் |

| | |
|---|---|
| (𑌭𑌵𑌤𑌿) | (இருக்கிறான்); |
| 𑌇𑌦𑌂𑌦𑍍𑌰𑌃 𑌨𑌾𑌮 𑌹 𑌵𑍈 | இதந்திரன் என ப்ரஸித்தன். |
| 𑌇𑌦𑌂𑌦𑍍𑌰𑌂 | இதந்திரனை |
| 𑌸𑌨𑍍𑌤𑌂 | இருக்கின்ற |
| 𑌤𑌂 | அவனை |
| 𑌇𑌂𑌦𑍍𑌰𑌃 | இந்திரன் |
| 𑌇𑌤𑌿 | என்று |
| (𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃) | (அறிஞர்கள்) |
| 𑌪𑌰𑍋𑌕𑍍𑌷𑍇𑌣 | மறைவாக |
| 𑌆𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 | கூறுகிறார்கள்: |
| 𑌹𑌿 | ஏனெனில் |
| 𑌦𑍇𑌵𑌾𑌃 | பெரியோர்கள் |
| 𑌪𑌰𑍋𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌇𑌵 | மறைவிலே பிரியமுள்ளவர்போலும்; |
| 𑌹𑌿 | ஏனெனில் |
| 𑌦𑍇𑌵𑌾𑌃 | பெரியோர்கள் |
| 𑌪𑌰𑍋𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌇𑌵 | மறைவிலே பிரியமுள்ளவர்போலும். |

---

𑌅𑌥

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌖𑌣𑍍𑌡𑌃 ।

---

𑌅𑌸𑍍𑌮𑌿𑌂𑌶𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍇 𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌏𑌷 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌃 — “𑌜𑌗𑌦𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌪𑍍𑌰𑌲𑌯𑌕𑍃𑌦𑌸𑌂𑌸𑌾𑌰𑍀 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍 𑌸𑍍𑌵𑌤𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌤𑌰𑌮𑌨𑍁𑌪𑌾𑌦𑌾𑌯 𑌏𑌵 𑌆𑌕𑌾𑌶𑌾𑌦𑌿𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾, 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌪𑍍𑌰𑌬𑍋𑌧𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌚 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌦𑌿𑌮𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌾𑌣𑌿 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌵𑍇𑌶 ; 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯 𑌚 𑌸𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑌥𑌾𑌭𑍂𑌤𑌮𑍍 ‘𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑍍𑌮𑌿’ 𑌇𑌤𑌿 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌬𑍁𑌧𑍍𑌯𑌤 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌶𑌰𑍀-

---

## இரண்டாம் அத்தியாயம்.

### முதல் பிரிவு.

---

### உரைப்பாயிரம்.

#### சென்ற அத்தியாயத்தின் தேர்ந்த கருத்து.

(ஐதரேயப்ராஹ்மணஆரண்யகாண்டத்து இரண்டாம் ஆரண்யகத்தினுள்) இந்த நான்காம் அத்தியாயத்திலே இது வாக்கியப்பொருளாம் :— “உலகம் உண்டாதலையும் நிலைத்தலையும் கெடுதலையும் செய்பவனும், பிறந்துஇறந்துஉழலுவோனல்லாதவனும், (பொதுவாக) முற்றுமுணர்ந்தவனும், முழுவல்லமையுடையவனும், (சிறப்பாக) எல்லாமறிந்த (ஈச்வரன்) - தன்னினும் வேறான பிறிதோர் பொருளை (உதவியாக)க் கொள்ளாமலே ஆகாசம்முதலிய முறைப்படி ஜகத்து முழுவதையும் படைத்து, ப்ராணன்முதலியவற்றை யுடைய எல்லா உடம்புகளினுள்ளும் தன் ஆத்மாவை யறியும்பொருட்டுத் தானே புகுந்தான் ; புகுந்து, ‘இந்த ப்ரஹ்மமாக இருக்கின்றேன்’ எனத் தன் ஆத்மாவை உள்ளபடி நேரே கண்டுணர்ந்தான். ஆதலின், எல்லா

ரேஷு நாந்ய ஏவ ஆத்மா, ந அந்ய:” இதி | அந்ய: அபி “ஸ ஆத்மா ப்ரஹ்மாஸ்மீத்யேவம் வித்யாத்” இதி | “ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத்” இதி, “ப்ரஹ்ம தத்ஸர்வம்” இதி ச உக்தம் | அந்யத்ர ச ||

ஸர்வகதஸ்ய ஸர்வாத்மனோ பாலாக்ரமாத்ரமபி அப்ரவிஷ்டம் நாஸ்தி இதி கதம் ஸீமானம் விதார்ய ப்ராபத்யத, பிபீலிகா இவ ஸுஷிரம்?

நனு அத்யல்பமிதம் சோத்யம்; பஹு ச அத்ர சோதிதவ்யம் | அகரண: ஸந் ஈக்ஷத ; அநுபாதாய கிஞ்சித், லோகா-

---

உடம்புகளினுள்ளும் அவனேதான், ஓரே ஆத்மாதான் ; பிற (ஒரு வ)னில்லை” என்பது. “ ‘ஓரே ஆத்மாவான ப்ரஹ்மமாயிருக்கின்றேன்’ என்றிவ்வாறு உணரவேண்டும்” என்று வேருென்றும் (கூறுகின்றது. வேருென்றும் - ஸம்ஹிதோபநிஷத்தும்.—ஆ.) “இது ஆத்மாவாகவே, ஒன்ருகவே முதலில் இருந்தது” (க - க - க) எனவும், “ப்ரஹ்மம் வியாபித்திருப்பது” (க - ரு - கரு) எனவும் கூறப்பட்டன. மற்றைய இடங்களிலும் (“நல்லோனே! இது உண்மையாகவே, ஒன்ருகவே, இரண்டாவதில்லதாய் முதலில் இருந்தது” (சா - சு - உ - க) என்பது முதலியவற்றைக் காண்க).

### சிருஷ்டியைக் கூறும் சுருதியின் குறிப்பு.

(பிரதிவாதி):— எங்குமுள்ளவனும் எல்லாவற்றினுடைய ஆத்மாவான (ஈச்வரனல்) ஒருமயிர்நுனியளவுங்கூடப் புகப்படாததா யில்லை. எனவே, எறும்பு ஒருசிறிய துவாரத்தினுள் (புகுமாறு)போல, (அவன்) எப்படி உச்சியைப் பிளந்து புகுதலானன்? [உடம்பில்லாதவன் ஒன்றனைப் பிளத்த லென்பதும், எங்குமுள்ளவன் ஒன்றனுள் புகுதலென்பதும் பொருந்தா என்றபடி.—ஆ.]

(வாதி) :— ஐய! இது மிக அற்பமான ஆக்ஷேபம்; இதிலே இன்னும் ஆக்ஷேபிக்கவேண்டியனவோ பலவுள. “(அவன், புறக்கரணம் அகக்கரணம் என்னும்) கரணங்களில்லாதவனைப் பார்த்தான், ஆலோசித்தான் : ஒன்றையும் கருவியாகக் கொள்ளாமலே உலகங்க

[illegible]

[illegible]

[illegible]

---

ளைப் படைத்தான் : ஜலத்திலிருந்து புருஷனைத் திரட்டி எடுத்து அமைத்தான் : அவனது ஆலோசனையினுல் வாய்முதலியன வெவ்வேருக வெளியே அமைந்தன : அன்றியும், அக்கிமுதலான லோகபாலர்கள் வாய்முதலியவற்றினின்றும் (உண்டானூர்கள்) : மேலும், பசி தாகம் முதலியவற்றை அவர்கட்குக் கூட்டிவித்தலும், அவை (தமக்கு) இருப்பிடத்தை வேண்டுதலும், அவற்றிற்காக ஆமுதலியவற்றைக்(கொணர்ந்து) காட்டுதலும், அவை (தம்தமக்கு) உரிய இடத்தைப் புகுதலும், படைக்கப்பட்ட உணவு ஓடுதலும், அதனை வாக்முதலியவற்றினுல் பிடிக்கமுயலுதலும் (ஆயின):" இதெல்லாம், உச்சியைப் பிளத்தற்கும் (உள்ளே) புகுதற்கும் சமானமாகவே (உளது. அவைபோல, இவையும் அஸங்கதமே என்க).

(பிரதிவாதி) : (ஆம்! நன்று) அப்பொழுது இதெல்லாமே பொருந்தாததா யிருக்கட்டும்!

(வாதி) :— அப்படி யன்று. ஆத்மாவை யறிதல் என்னும் விஷயமே இங்குச் சொல்லக்கருதிய தாதலின் [ஆத்மா ஒன்றுதான் என்பதுமாத்திரமே இங்குச் சொல்லவந்த குறிப்பாதலால்], இதெல்லாம் அர்த்தவாதமாம்; எனவே, குற்றமில்லை. அல்லது, "முழுதும் உணர்ந்தவனும் முழுவல்லமையுடையவனும் மகாமாயாவியான கடவுள் -

𑌬𑌾𑌲𑌬𑍋𑌧𑌨𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌲𑍋𑌕𑌵𑌚𑍍𑌚𑌾𑌖𑍍𑌯𑌾𑌯𑌿𑌕𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚 𑌇𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌤𑌰𑌃 𑌪𑌕𑍍𑌷𑌃 । 𑌨 𑌹𑌿 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌯𑌿𑌕𑌾𑌦𑌿𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌫𑌲𑌮𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 । 𑌐𑌕𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌤𑍁 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌂 𑌫𑌲𑌂 𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑍍; 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌷𑍁 𑌚 𑌗𑍀𑌤𑌾𑌦𑍍𑌯𑌾𑌸𑍁 "𑌸𑌮𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 ॥

---

இந்திரஜால முடையவன் (மாமரம் முதலியவற்றைப் படைக்குமாறு) போல, இதனைப் படைத்தான்; உலகிலே (சிறுவர்கட்கு ஹிதத்தைச் சொல்லுவோன் அதனை எளிதில் உணர்த்தவும், கேட்போன் அதனை எளிதில் உணரவும் வேண்டிக், குரங்குக்குருவிக்கதையைச் சொல்வது)போல - (ஆத்மா ஒன்றென்பதை)எளிதே உணர்த்தவும் உணரவும் வேண்டி, (ஜகத்தினுடைய சிருஷ்டிக்) கதையையும் இதுபோன்றவற்றையும் விரித்துச்சொல்லுத லாகின்றது" என்பது - மிகவும் பொருந்தியதான பட்சமாம். சிருஷ்டிக்கதைமுதலியவற்றை யுணர்வதனால் ஒரு பயனும் விதிக்கப்படவில்லையன்றோ. ஆனால், தனிஆத்மவடிவத்தை யுணர்வதனால் சாகாமை என்னும் பயன், எல்லா உபநிஷத்துக்களினுள்ளும் நன்கு அமைந்துளது, கீதைமுதலான ஸ்மிருதிகளினுள்ளும், "எல்லாப் பொருள்களுள்ளும் ஒப்ப நிற்கின்ற பரமேச்வரனை" (வே - கீ - கங - கஎ) என்பதுமுதலியவற்றால் (செவ்வனே அமைவதைக் காண்க.—கீழ்க்குறித்த குரங்குக்குருவிகதை வருமாறு:— ஒரு காலத்து விடாமழை பெய்யுமளவிலே ஒரு குரங்கு தங்கஇடமில்லாமல் ஒருமரத்தடியில் வந்து ஒன்றிநிற்க, அம்மரக்கிளையில் கூடுகட்டிக்கொண்டிருந்த ஓர் குருவி குரங்கைப் பார்த்து மனம்இரங்கி, "ஐயா! குரங்காரே! கையில்லாத நாங்களே, கஷ்டப்பட்டுக் கூடு கட்டிக்கொண்டிருக்கிறோம். கையுள்ள நீர் ஒரு வீடு கட்டிக்கொண்டிருந்தால், அதிலே இந்த மழைக்காலத்தில் சுகமாய்த் தங்கி இருக்கலாம்" என்று சொல்ல, அதைக் கேட்ட குரங்கு குருவியின்மேல் கோபங்கொண்டு "அடா! அற்பப் பிராணியே! நீயா எனக்குப் புத்திசொல்லுகிறவன்? எனக்குக் கூடு கட்டத்தெரியாதாயினும், கட்டின கூட்டைப் பிரித்தெறியத் தெரியும்" என்று சொல்லிக்கொண்டே மரத்தின்மீது ஏறி,

अत्रायं सिद्धान्तः — भोक्ता कर्ता संसारी जीवाख्यः सर्वलोकशास्त्रप्रसिद्धः ; अनेकप्राणिकर्मफलभोगभोग्यानेकाधिष्ठानलोकदेहनिर्माणलिङ्गेन यथाशास्त्रं प्रदर्शितेन, प्रासादगोपुरादिनिर्माणलिङ्गेन तद्विषयकसंज्ञानवान् तक्षा तक्षादिरिव, सर्वेश्वरः सर्वज्ञो जगतः कर्ता द्वितीयः चेतनः आत्मा अवगम्यते ; "यतो वाचो निवर्तन्ते," "नेति नेति" इत्यादिशास्त्रप्रसिद्धः औपनिषदः पुरुषः तृतीयः ।

---

அந்தக் குருவிக்கூட்டைப் பிரித்து எறிந்துவிட்டது.—இனி, இக்கதையில் சொல்லவந்த குறிப்பு யாதோ? எனின்,—மூர்க்கராவார் ஹிதத்தைக் கேளார் என்பதும், அவர்க்கு ஹிதம்சொல்வோரே தீங்கைப் பெறுவார் என்பதுமாம். இதுபோல. சிருஷ்டிக்கதையைக் கண்டுகொள்க).

ஆத்மா மூன்றல்லவோ என்னும் ஸந்தேகம்.

(வினு) :— என்! ஆத்மாக்கள் மூன்றும். க. ஒன்று - அநுபவிப்பதாய், செய்வதாய், உலகம் சாஸ்திரம் என்ற எல்லாவற்றினுள்ளும் ப்ரஸித்தமானதாய், பிறந்து இறந்து உழலும் ஜீவன். உ. ஆளுகின்றதாய் எல்லாமறிவதாய் ப்ரபஞ்சத்திற்குக் கர்த்தாவாய் இரண்டாவது அறிவுப்பொருளான ஆத்மாவானது - பற்பல ப்ராணிகளும் தம்தம் வினைகளின் பயன்களை அநுபவித்தற்கு ஏற்ற இடங்களையுடைய உலகங்களையும் உடம்புகளையும் படைத்தலாகிய குறியினுல் (அதாவது, க - க - உ முதலியவற்றால் இந்) நூலினுள் கீழே காட்டப்பட்ட அறிகுறியினுல் அறியப்படுகின்றது ; நகரங்களையும் மாளிகைகளையும் பிறவற்றையும் படைத்தலாகிய குறியினுல், அவற்றைப்பற்றிய தேர்ச்சியும் அறிவும் உடையவனுப் அவற்றிற்குக் கர்த்தாவான தச்சன் முதலாயினேர்போல. ங. மூன்றுவதென்பது - "வார்த்தைகள் எதனினின்று திரும்புகின்றனவோ" (தை - உப - உ - ச - க), "அப்படியன்று, அப்படியன்று" (ப்ரு - உ - ங - கூ) என்பன முதலான சாஸ்திரங்களில் ப்ரஸித்தமானதாய் உபநிஷத்துக்களுள் உணர்த்தப்படும் புருஷனும். இவ்வாறு இந்த (ஜீவன், ஈச்வரன், நிர்க்குணப்ரஹ்மம் என்னும்)

ஸம்வழ ஸம்தெ த்ரய ஆத்மாநஃ அந்யோந்யவிலக்ஷணாஃ। தத்ர கயம் ஸக ஸம்வ ஆத்மா அத்விதீயஃ அஸம்ஸாரீ இதி ஜ்ஞாதும் ஶக்யதெ?

தத்ர ஜீவ ஸம்வ தாவத் கயம் ஜ்ஞாயதெ?

நநு ஸம்வம் ஜ்ஞாயதெ "ஶ்ரோதா மந்தா த்ரஷ்டா ஆதேஷ்டா ஆகோஷ்டா விஜ்ஞாதா ப்ரஜ்ஞாதா" இதி॥

நநு விப்ரதிஷித்தம், ஜ்ஞாயதெ யஃ ஶ்ரவணாதிகர்த்ருத்வேந "அமதோ மந்தா அவிஜ்ஞாதோ விஜ்ஞாதா" இதி ச; ததா "ந மதெர்மந்தாரம் மந்வீதாஃ ந விஜ்ஞாதெர்விஜ்ஞாதாரம் விஜாநீயாஃ" இத்யாதி ச॥

---

மூன்று ஆத்மாக்களும் ஒன்றற்கொன்று வேறுபட்டவை; (எனவே,) அங்ஙனம், "ஒன்றேதான் ஆத்மா, இரண்டாவதில்லது, பிறந்து இறந்து உழலாதது" என எவ்வாறு அறியக்கூடும்?

ஆத்மா அறியப்படும்பொரு ளன்று.

(வினைவெதிர் வினாதல்) :— அங்ஙனம், முதலில், ஜீவன்தான் எவ்வாறு அறியப்படுகின்றது? (செய்தல் அநுபவித்தல் முதலான கீழ்க் கூறிய வேற்றுமையானது ஜீவனுக்கு வாஸ்தவத்திலே இல்லையாதலால், அவற்றையுடையதாக அதனை யறிதல் ஏலாது; ஆகவே, அது குடம் போல அறியப்படும்பொரு ளன்று என்பதும், வேற்றுமை இல்லை என்பதும் சொல்லுவோன் கருத்து.)

(விடை) :— "கேட்பது, நினைப்பது, காண்பது, பேசுவது, இரைவது, பகுத்தறிவது, விளங்கஉணர்வது" என இவ்வாறு (ஆத்மா) அறியப்படுகின்ற தன்றே. (முந்தின வினைவெதிர் வினாதல் என்னும் குறிப்புவிடையானது வினாவடிவமாய் நிற்றலால், சொல்லுவோன் கருத்தை யுணராது இவ்வாறு சங்கித்த லாயிற்று.)

(ஸித்தாந்தி) :— ஆயின், ஏது கேட்டல் முதலியவற்றைச் செய்வதாக அறியப்படுகின்றதோ "(அது) நினைக்கப்படாதது, நினைப்பது" (ப்ரு - ௩ - எ - உ௩) என்பதும், "அறியப்படாதது, அறிவது" (ஷ) என்பதும் முரணும். அவ்வாறே, "நீ நினைப்பை நினைப்பவனை நினைத்தல் நிகழாது; நீ அறிவை அறிபவனை அறிதல் அமையாது" (ப்ரு - ௩ - ௪ - உ) என்பது முதலியனவும் (முரணுகின்றன).

ஸத்யம் விப்ரதிஷித்தம், யதி ப்ரத்யக்ஷேண ஜ்ஞாயேத ஸுகாதிவத் । ப்ரத்யக்ஷஜ்ஞாநம் ச நிவார்யதே “ந மதேர் மந்தாரம்” இத்யாதிநா । ஜ்ஞாயதே து ச்ரவணாதிலிங்கேந । தத்ர கோ நாம விப்ரதிஷேத: ?

நநு ச்ரவணாதிலிங்கேந கதம் ஜ்ஞாயதே ? யாவதா யதா ச்ருணோதி ச்ரோதா ச்ரோதவ்யம் சப்தம், ததா தஸ்ய ச்ரவணக்ரியயா வர்தமாநத்வாத் மநந 'ஜ்ஞாநக்ரியே ந ஸம்ப-

---

**ஆத்மா அநுமாநத்தால் அறியப்படுவது எனச் சங்கித்தல்.**

(பூர்வவாதி) :— உண்மை; (ஆத்மா) இன்பம்போல நேரே அறியப்படுவதாயின், விரோதமாம். (அதனை) நேரே அறிதலோ “நினைப்பை நினைப்பவனை (நீ நினைத்தல்) நிகழாது” (ப்ரு - ங - ச - உ) என்பதுமுதலியவற்றால் மறுக்கப்படுகின்றது. ஆனால், கேட்டல் முதலிய குறியினால் (ஆத்மா) அறியப்படுகின்றது. அங்ஙனம் விரோத மென்பது எது? (“த்ருஷ்டா ...... ...அத்ருஷ்டோ த்ரஷ்டா(அ)ச்ருத: ச்ரோதா(அ)மதோ மந்தா(அ)விஜ்ஞாதோ விஜ்ஞாதா । ஆத்மா காணப்படாதது, காண்பது: கேட்கப்படாதது, கேட்பது: நினைக்கப்படாதது, நினைப்பது: அறியப்படாதது, அறிவது” என்பது ப்ருகதாரண்யக சுருதி ங - எ - உங. இதில், “காணப்படாதது, கேட்கப்படாதது” என்பன முதலியவற்றிற்கு - ஆத்மா ப்ரத்யக்ஷமாக அறியப்படாதது என்றும்; “காண்பது, கேட்பது” என்பன முதலியவற்றிற்கு - ஆத்மா காண்டல் கேட்டல் முதலிய குறிகளால் அநுமாநமாக அறியப்படுவது என்றும் பொருள். என்பது பூர்வவாதியின் கருத்து.)

**இச் சங்கையைப் பரிகரித்தல்.**

(ஸித்தாந்தி) :— ஆயின், கேட்டல்முதலிய குறியினாலும் (ஆத்மா) எப்படி அறியப்படுகின்றது? எப்பொழுது ஆத்மாவானது கேட்கப்படும் ஓசையை எவ்வளவு(நேரம்) கேட்கின்றதோ அப்பொழுது (அது அவ்வளவு நேரத்திலும்) கேட்டலாகிய தொழிலோடுகூடவே உள்ளமையால், தன்னைப்பற்றியாயினும் வேறொன்றைப்பற்றியாயினும் நினைத்தலும் அறிதலுமாகிய தொழில்கள் அதற்கு நிகழமாட்டா. அவ்

வதஃ ஶ்ருதிர் வா । ததா²ந்யத்ராபி மநநாதிக்ரியாஸு । ஶ்ரவணாதிக்ரியாஶ்ச ஸ்வஸ்வவிஷயேஷ்வேவ । ந ஹி மந்தவ்யாத் அந்யத்ர மந்துஃ மநநக்ரியா ஸம்ப⁴வதி ॥

நநு மநஸா ஸர்வம் ஏவ மந்தவ்யம் ॥

ஸத்யம் ஏவம்; ததா²பி, ஸர்வம் அபி மந்தவ்யம் மந்தா-ரம் அந்தரேண ந மந்தும் ஶக்யம் ॥

---

வாறே, பிறவற்றைப்பற்றி நினைத்தல்முதலான தொழில்களிலும் (கண்டுகொள்க). கேட்டல்முதலிய தொழில்களோ தம்தம் விஷயங்களிலேயே (செல்லுகின்றன). நினைப்பவனுடைய நினைத்தல்தொழிலானது நினைக்கப்படுவதற்குவேருனதிலே நிகழாதன்றே. (ஆத்மா ஒன்றனைக் கேட்கும்போது, தன்னையாயினும் பிறிதொன்றையாயினும் நினைத்தல்முதலியன நிகழா. அப்படியே, அது வேருென்றை நினைக்குமளவிலே தன்னை நினைத்தலும், வேருென்றைக் கேட்குமளவிலே தன்னைக் கேட்டலும், வேருென்றைப் பேசுமளவிலே தன்னைப் பேசுதலும் நிகழா. கேட்டல்முதலிய தொழில்களெல்லாம் தம்தமக்குஉரிய ஓசைமுதலிய விஷயங்களின்மீது செல்லுகின்றனவேயன்றி தமக்கு ஆதாரமான ஆத்மாவின்மீது செல்லுகின்றனவில்லை. அல்லது,— கேட்டல் கேட்கப்படுவதைப்பற்றி நிகழும், கேட்பவனைப்பற்றி நிகழாது; அநுமாநித்தல் அநுமாநிக்கப்படுவதைப்பற்றி நிகழும், அநுமாநிப்பவனைப்பற்றி நிகழாது; நினைத்தல் நினைக்கப்படுவதைப்பற்றி நிகழும், நினைப்பவனைப்பற்றி நிகழாது.—கேட்பவனும், அநுமாநிப்பவனும், நினைப்பவனும் ஆத்மாவாம் என்பது காண்க.)

(பூர்வவாதி) :— ஆயின், எல்லாமே மனத்தினல் நினைக்கப்படுவதாம். (எதனையும் மனத்தினலேயே நினைக்கவேண்டியதனுல், ஆத்மாவையும் மனத்தினல் நினைத்தலாகும்.)

(ஸித்தாந்தி) :— இவ்வாறு உண்மை; ஆயினும், நினைக்கப்படுவனவெல்லாவற்றையும் நினைப்பவனில்லாது நினைத்தல் இயலாது. (மனம் கருவியாதலாலும், ஒருதொழில் கர்த்தாவின்றி அமையாதாதலாலும் - நினைப்பவனுகிய கர்த்தா ஆவச்யகமாம்.)

यदि एवं, किं स्यात् ?

इहापि तर्हि स्यात्——सर्वस्य यः स्वयं द्रष्टा सः द्रष्टा एव इति न स द्रष्टव्यः स्यात् । न च द्वितीयो द्रष्टुः द्रष्टा अस्ति ; यदा स आत्मना एव द्रष्टव्यः तदा—येन च द्रष्टव्यः आत्मा आत्मना, यः च द्रष्टव्यः आत्मा—तौ द्वौ प्रसज्येयाताम् । एकस्य एव आत्मा द्विधा द्रष्टृद्रष्टव्यत्वेन द्विशकलीभावः स्यात्, वंशादिवत् । उभयथा अपि अनुपपत्तिः एव ; यथा प्रदीपयोः प्रकाश्यप्रकाशकत्वानुपपत्तिः सम-

---

(பூர்வவாதி) :—இவ்வாருயின், யாது ஆகும்? (நினைப்பவன் ஆவசியகமாய் இருக்கட்டும்; அவ்வளவினுல் உனக்கு ஆவது என்ன?)

(ஸித்தாந்தி) :— இது இங்கு ஆகும். (அவ்வாருனவளவிலே, ஆத்மா நினைக்கப்படுவ தன்று என்று ஆகும். எங்ஙன மெனில்,) எந்த இவன் எல்லாவற்றையும் நினைப்பவனே, அவன் நினைப்பவனேதான்; எனவே, அவன் நினைக்கப்படுவோனுகான். அன்றியும், நினைப்பவனை நினைப்பவனுகிய இரண்டாவ னில்லை; எப்பொழுது அவன் தன்னுலேயே நினைக்கப்படுவானே அப்பொழுது - 'எந்தத் தன்னுல் தான் நினைக்கப்படுவானே,' 'மேலும், எந்தத் தான் நினைக்கப்படுவானே' அவ்விருவரும் ஆதல்வேண்டும். (நினைக்கும்ஆத்மா நினைக்கப்படும் ஆத்மா என இரண்டு ஆத்மாக்க ளாகும்; ஆகவே, இந்த இழுக்கை நீக்க, "ஒரேஆத்மா தன்னுடைய ஒருஅம்சத்தால் நினைப்பது; தன்னுடைய மற்ருேர் அம்சத்தால் நினைக்கப்படுவது" எனில்,— அங்ஙனம்) ஒரேஆத்மா நினைப்பதாக நினைக்கப்படுவதாக இருவிதமாய், மூங்கில்முதலியனபோல இரண்டுதுண் டாகிவிடும். இருவிதத்திலும் ஒவ்வாமையேதான்; எப்படி இரண்டு விளக்குகள் ஒருநிகரா யுள்ளமையால் (அவற்றுள் 'ஒன்று மற்ருென்ருல்) விளக்கப்படுவதாதலும், (அவற்றுள் ஒன்று மற்ருென்றை) விளக்குவதாதலும் பொருந்தாமையோ, அதுபோல. (வெவ்வேருன இரண்டு ஆத்மாக்களாம் என்பது, ஒருபக்ஷம். ஒரேஆத்மா வெவ்வேருன இரண்டு துண்டாம் என்பது, மற்ருேர்பக்ஷம். இனி, முழுமையான ஆத்மாவும் துண்டான ஆத்மாவும் ஒரேஇயல்பினவாதலால், அவ்விருபக்ஷத்திலும் ஒருஆத்மா மற்

काशस्य, तद्वत् । न च मन्तुः मन्तैव मननव्यापारकाले मन्तुः आत्मा अपि साधनाय । यदा अपि लिङ्गेन आत्मानं मनुते मन्ता तदा अपि पूर्ववदेव — लिङ्गेन मन्तव्य आत्मा; यश्च तस्य मन्ता — तौ द्वौ प्रसज्येयाताम् । एकस्य एव वा द्विधा इति पूर्वोक्तो दोषः ॥

न प्रत्यक्षेण नापि अनुमानेन ज्ञायते चेत्, कथम् उच्यते "स आत्मा इति विज्ञेयः" इति? कथं वा "श्रोता मन्ता" इत्यादि?

---

ளோர்ஆத்மாவை நினைத்தல் நிகழாது; இரண்டு விளக்குகள் வெவ்வேறு யிருந்தாலும் ஒரே இயல்பினவாதலால், அவற்றுள் ஒன்று மற்றொன்றை விளக்குதல் நிகழாதவாறுபோல.) மேலும், நினைக்கப்படுவதிலே நினைத்தல்தொழிலற்ற காலமானது நினைப்பவனுக்குத் தன்னை நினைத்தற்கு இல்லை (மனத்தின் செய்கையெல்லாம் நினைக்கப்படுகின்ற வெளிவிஷயங்களிலேயன்றி உள்ளேயுள்ள ஆத்மாவினிடத்து இல்லை.) நினைப்பவன் தன்னை எப்பொழுது குறியினால் நினைக்கின்றானோ, அப்பொழுது முன்போலவேதான் :— 'குறியினால் நினைக்கப்படும் தான் (எவனோ),' 'அன்றியும், அவனை நினைப்பவன் எவனோ' அவ்விருவரும் ஆதல்வேண்டும்; அல்லது, ஒருவனே இருவிதமாதல்வேண்டும். எனவே, முற்கூறிய குற்றமாம் (ஆத்மாவானது நேரே மனத்தால் நினைக்கப்படுவது என்றவழிப் படும் இழுக்கு முன் எடுத்துக்காட்டப்பட்டது. இனி, ஆத்மாவானது அறிகுறியினால் அநுமானிக்கப்படுவது என்றவழியும் அதே இழுக்குத் தங்குகின்றது என்பதாம். இவ்வாறாக, ஆத்மா எவ்வாற்றானும் அறியப்படாததாம் என நிலைத்தது).

(க) "ஆத்மா கேட்பது, நினைப்பது" என்பது முரணுதல்.

(உ) "ஆத்மா அறியப்படுவது" என்பதும் முரணுதல்.

(பூர்வவாதி):— (ஆத்மா) ப்ரத்யக்ஷத்தினால் அறியப்படுகின்றதில்லையாயின், அநுமானத்தினாலும் அறியப்படுகின்றதில்லையாயின்,— "ஆத்மா ஒன்று என்று அறியவேண்டும்" (ஸம் - உப) என எப்படிக் கூறப்படுகின்றது? அன்றியும், "(ஆத்மா) கேட்பது, நினைப்பது" (ப்ரு - ௩ - எ - உ௩) என்பது முதலியன எப்படி(ப் பொருந்தும்)?

𑌨𑌨𑍁 𑌶𑍍𑌰𑍋𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌧𑌰𑍍𑌮𑌵𑌾𑌨𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾, 𑌅𑌶𑍍𑌰𑍋𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌿 𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌮𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃; 𑌕𑌿𑌮𑍍 𑌅𑌤𑍍𑌰 𑌵𑌿𑌰𑍋𑌧𑌂 𑌪𑌶𑍍𑌯𑌸𑌿?

𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌤𑌵 𑌨 𑌵𑌿𑌰𑍋𑌧𑌂, 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌮𑌮 𑌤𑍁 𑌵𑌿𑌰𑍋𑌧𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑌾𑌤𑌿 ॥

𑌕𑌥𑌮𑍍?—𑌯𑌦𑌾 𑌖𑌲𑍁 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾, 𑌤𑌦𑌾 𑌨 𑌮𑌨𑍍𑌤𑌾; 𑌯𑌦𑌾 𑌮𑌨𑍍𑌤𑌾, 𑌤𑌦𑌾 𑌨 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾 । 𑌤𑌤𑍍𑌰 𑌏𑌵𑌂 𑌸𑌤𑌿—𑌪𑌕𑍍𑌷𑍇 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾 𑌮𑌨𑍍𑌤𑌾, 𑌪𑌕𑍍𑌷𑍇 𑌨 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾 𑌨 𑌅𑌪𑌿 𑌮𑌨𑍍𑌤𑌾 । 𑌤𑌥𑌾, 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌚 ॥

𑌯𑌦𑌾 𑌏𑌵𑌂, 𑌤𑌦𑌾 𑌶𑍍𑌰𑍋𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌧𑌰𑍍𑌮𑌵𑌾𑌨𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌅𑌶𑍍𑌰𑍋𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌧𑌰𑍍𑌮𑌵𑌾𑌨𑍍 𑌵𑌾 𑌇𑌤𑌿 𑌸𑌂𑌶𑌯𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌕𑌥𑌂 𑌤𑌵 𑌨 𑌵𑍈𑌷𑌮𑍍𑌯𑌮𑍍?

---

(க) முதல் முரணுக்குப் பரிகாரம்.

(ஸித்தாந்தி) :— ஏன்! ஆத்மா கேட்டல்முதலிய தன்மைத்து; கேளாமைமுதலியனவும் ஆத்மாவிற்குச் செவ்வனே அமைந்துள்ளன. இதிலே நீ என்ன முரணைக் காண்கின்றாய்?

(பூர்வவாதி) :— உனக்கு முரணில்லை; ஆயினும், எனக்கோ முரண் தோற்றுகின்றது.

(ஸித்தாந்தி) :—(முரணில்லை.) எப்படி? (யெனில், கூறுவேன்:) எப்பொழுது இது கேட்பதோ, அப்பொழுது நினைப்பதன்று; எப்பொழுது நினைப்பதோ, அப்பொழுது கேட்பதன்று. அது இவ்வாறுள்ளவளவிலே, ஒருபக்ஷத்தில் கேட்பது, நினைப்பது; மற்றோர்பக்ஷத்திலே கேட்பதன்று, நினைப்பதுமன்று. அவ்வாறே, மற்றையவற்றினுமாம்.

(பூர்வவாதி):—இவ்வாறு எப்பொழுதோ அப்பொழுது, 'ஆத்மா கேட்டல்முதலிய தன்மைத்தா? அல்லது, கேளாமைமுதலிய தன்மைத்தா?' என்னும் ஸந்தேகஇடத்து உனக்கு எப்படி முரணில்லை?

𑌯𑌦𑌾 𑌦𑍇𑌵𑌦𑌤𑍍𑌤𑍋 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌤𑌦𑌾 𑌨 𑌸𑍍𑌥𑌾𑌤𑌾, 𑌗𑌨𑍍𑌤𑌾 𑌭𑌵𑌤𑌿 । 𑌯𑌦𑌾 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌤𑌦𑌾 𑌨 𑌗𑌨𑍍𑌤𑌾, 𑌸𑍍𑌥𑌾𑌤𑌾 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌦𑌾𑌽𑌸𑍍𑌯 𑌪𑌕𑍍𑌷𑍇 𑌭𑌵𑌤𑌿 𑌗𑌨𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌥𑌾𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌚, 𑌨 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌗𑌨𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌥𑌾𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌵𑌾 ; 𑌤𑌦𑍍𑌵𑌤𑍍 ॥

𑌅𑌤𑍍𑌰 𑌕𑌾𑌣𑌾𑌦𑌾𑌦𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿——𑌪𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇𑌨 𑌭𑌵𑍁 𑌶𑍍𑌰𑍋𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌨𑌾 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾 𑌮𑌨𑍍𑌤𑌾 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 । 𑌸𑌂𑌯𑍋𑌗𑌜𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌯𑍁𑌗𑌪𑌦𑍍𑌭𑌾𑌵𑌿𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌆𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 ; 𑌦𑌰𑍍𑌶𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚—“𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌰𑌮𑌨𑌾 𑌅𑌭𑍂𑌵𑌂 𑌨𑌾𑌦𑌰𑍍𑌶𑌮𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿; “𑌯𑍁𑌗𑌪𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 𑌮𑌨𑌸𑍋 𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑍍” 𑌇𑌤𑌿 𑌚 । 𑌨𑍍𑌯𑌾𑌯𑍍𑌯𑌮𑍍 ॥

---

(ஸித்தாந்தி) :— எப்பொழுது தேவதத்தன் நடக்கின்றானோ அப்பொழுது நிற்பவ னல்லன், நடப்பவனேதான்; எப்பொழுது நிற்கின்றானோ அப்பொழுது நடப்பவ னல்லன், நிற்பவனேதான். அங்ஙன மவனுக்கு நடத்தலும் நிற்றலும் ஒரு பக்ஷத்திலேதான்; நடத்தலேனும் நிற்றலேனும் எப்பொழுது மில்லை. அதுபோல என்க (அவ்வண்ணமே, கேட்டல்முதலியன ஆத்மாவிற்கு எப்பொழுது மில்லை என்பது பொருள்).

இங்ஙனம் காணாதரது கோள்கையைக் காட்டுதல்.

(ஸித்தாந்தி) :— இங்குக் காணாதர்முதலாயினோர் ஆராய்கிறார்கள் :— ஒருபக்ஷத்திலேஆவனவாகிய கேட்டல்முதலியவற்றால், ஆத்மாவானது - ‘கேட்பது, நினைப்பது’ என்பதுமுதலாகக் கூறப்படுகின்றது. ஏனெனில், அறிவு சேர்க்கையினா லாவதெனவும், ஒரேகாலத்து அமையாதெனவும் (அவர்கள்) கூறுகிறார்கள்; மற்றும், “வேறிடத்து மனமுடையவனா யிருந்தேன், பார்க்கவில்லை” (ப்ரு - க - ரு - ௩) என்பதுமுதலியவற்றையும், “ஒரேகாலத்து (அனேக)அறிவுதோன்றாமை மனத்திற்கு அறிகுறியாம்” (கௌ - ஸூ - க - க - கசு) என்பதையும் காட்டுகிறார்கள். (அவர்கள் இவ்வாறு இக் கொள்கையை) நியாயந்தவறாததாகக் (காண்கிறார்கள்.— ஆத்மா மனத்தோடும், மனம் இந்திரியத்தோடும், இந்திரியம் விஷயத்தோடும் கூட, அவ் விஷயத்தைப்பற்றிய அறிவு பிறக்கின்றது. மற்று, மனம் ஒரேகாலத்து

भवत्वेवं ; किं तव नष्टं, यद्येवं स्यात् ?

अस्त्वेवं, तव इष्टं चेत् । श्रुत्युक्तिस्तु न सम्भवति ॥

किं न "श्रोता मन्ता" इत्यादिश्रुत्युक्तिः ?

न ; "न श्रोता न मन्ता" इत्यादिवचनात् ॥

---

அநேக இந்திரியங்களோடு கூடாமையின், ஒரேகாலத்து அநேக அறிவுகள் உண்டாகவில்லை. அதாவது, ஒரோர்காலத்து ஒரோர் அறிவே நிகழ்கின்றது. இவ்வாறு ஒரோர்காலத்து உண்டாகும் அறிவினாலேயே, ஆத்மா 'கேட்பது,' 'காண்பது' எனப்படுகின்றது).

சுருதியின் கொள்கை.

(பூர்வவாதி, அல்லது அயலான்) :— இவ்வாறு கூடுமாயின், இவ்வாறிருக்கட்டும். உனக்குப் போனதென்ன? ('ஆத்மா கேட்பது, நினைப்பது,' 'ஆத்மா கேட்பதன்று, நினைப்பதன்று' என்ற இரண்டு சுருதியும், காணாதர் முதலாயினோருடைய ரீதிப்படி பொருந்துகின்றன. மேலும், ஆத்மா கேட்டல்முதலிய தன்மைத்து என்பதும் அமைகின்றது. இது நியாயந்தவறுததாயின், அப்படியே இருக்கட்டும். அங்ஙனம் நீ அதனால் இழந்ததென்ன?)

(ஸித்தாந்தி) :— உனக்கு இஷ்டமானால், அப்படி இருக்கட்டும்.— மற்று, சுருதியின் கொள்கை அமையாது. (ஒரோர்காலத்து உண்டாகும் அறிவினால், ஆத்மா கேட்டல்முதலிய தன்மைத்து என்றல் சுருதிக்கு ஸம்மதமில்லையாதலின், அது நியாயந்தவறுத தாகாது.)

(பூர்வவாதி) :— "கேட்பது, நினைப்பது" என்பதுமுதலான சுருதியின் கொள்கையா அமையாது? ('கேட்பது, நினைப்பது' என்னும் சுருதியினால், ஆத்மா கேட்டல்முதலிய தன்மைத்து எனக் கூறப்படுகின்றமையின், அது சுருதிக்கு ஸம்மதமில்லை என்றல் அமையாது.)

(ஸித்தாந்தி) :— அப்படியன்று ; "கேளாதது, நினையாதது" என்பதுமுதலியவற்றை(ச் சுருதி) கூறுதலின். (நித்யமான ஸ்வரூப

𑌨𑌨𑍁 𑌪𑌾𑌕𑍍𑌷𑌿𑌕𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌤𑍍𑌵𑌯𑌾 ॥

𑌨, 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍇𑌵 𑌶𑍍𑌰𑍋𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑌾𑌤𑍍; "𑌨 𑌹𑌿 𑌶𑍍𑌰𑍋𑌤𑍁𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌰𑍍𑌵𑌿𑌪𑌰𑌿𑌲𑍋𑌪𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 ॥

𑌏𑌵𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍇𑌵 𑌶𑍍𑌰𑍋𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌮𑍇 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌵𑌿𑌰𑍋𑌧𑍋 𑌯𑍁𑌗𑌪𑌦𑌨𑍇𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌤𑌚𑍍𑌚 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌮𑌿𑌤𑌿 ॥

---

ஞானத்தால் ஆத்மா எப்பொழுதுமே கேட்கும்பொருளாம். ஒரோர் காலத்து உண்டாகும் அறிவான வ்ருத்திஞானமோ பொய்ம்மையாதலால், அதற்கு உண்மை இல்லை; ஆகவே, ஆத்மா எப்பொழுதுமே கேட்காதபொருளாம். என்பது ஸித்தாந்தியின் குறிப்பு.)

(பூர்வவாதி) :— ஆயின், ஒருபக்ஷத்திலாவதாக உன்னால் மறுமொழி கூறப்பட்டதே. (91 - ஆம் பக்கத்தில் 19, 20, 21, 22, 23 - ஆம் வரிகளையும், 92 - ஆம் பக்கத்தையும் பார்க்க.)

(ஸித்தாந்தி) : — அப்படியன்று; (ஆத்மாவிற்கு) எப்பொழுதுமே கேட்பதாதல்முதலியவற்றை ஏற்றுக்கொள்ளுதலின். "கேட்கும்பொருளின் கேள்விக்குக் கேடு இல்லை" (ப்ரு - ச - ௩ - உ௭) என்பதுமுதலிய சுருதியினுலென்க.

(பூர்வவாதி) :— அங்ஙனம் இவ்வாறுள்ளவளவிலே (ஆத்மாவிற்குக்) கேட்பதாதல் முதலியவற்றை ஏற்றுக்கொள்ளும்வழி,— ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமாக ஒரேகாலத்து (அனேக) அறிவு உண்டாதலாகும்; ஆத்மாவிற்கு அஜ்ஞாநமின்மையும் கொள்ளப்பட்டதாகும். அதுவோ இஷ்டமன்று. என்பதாம். (க. கேட்டல்முதலியன நித்யமாயுள்ளவளவிலே, ஓசை உருவம் முதலியவற்றைப் பற்றிய எல்லா அறிவுகளும் ஒரேகாலத்து நிகழ்தல் வேண்டும்; உ. கேட்டல் முதலிய இந்த எல்லா அறிவுகளும் நித்யமாதலால், ஒருபொழுதும் ஒருவனுக்கும் அறிவின்மை கூடாது. ஆனல், நமது அநுபவத்தில் அப்படி இல்லை. ஆதலின், விரோதமாம்.)

